# திருக்குறளில் இயற்கை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**த. புனிதவதி**

(பதிவு எண்: 0109)

நெறியாளர்

**பேராசிரியர் மு. பாண்டி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டிலும் "ஏ" தகுதி பெற்றது)

காரைக்குடி-630 003.


**மார்ச் - 2016**

பேரா.முனைவர் மு.பாண்டி,
தமிழ்த்துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி 630 003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

'திருக்குறளில் இயற்கை' என்னும் தலைப்பில் த.புனிதவதி அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(மு.பாண்டி)
நெறியாளர்.

த. புனிதவதி,
முனைவர்பட்ட ஆய்வாளர்,
பதிவு எண்:0109
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி 630 003.

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

‘திருக்குறளில் இயற்கை’ என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

(த.புனிதவதி)

ஆய்வாளர்

# நன்றியுரை

எங்கள் குலதெய்வங்கள் செவரக்கோட்டை ஸ்ரீபொட்டல் காளியம்மாள், தளக்காவூர் ஸ்ரீவண்ணிச்சியம்மன் ஆகியோருக்கு இவ்வாய்வேட்டை வணக்கங்களுடன் சமர்ப்பிக்கின்றேன்.

‘திருக்குறளில் இயற்கை’ என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர் ஆகியோர்க்கு முதற்கண் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு செய்வதற்கு ஊக்கத்தொகை வழங்கி ஊக்குவித்த பல்கலைக்கழக மானியக்குழுவிற்கு (UGC-RGNF) என் நன்றிகள்.

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு எனக்கு வாய்ப்பளித்தத் தமிழ்த்துறைத் தலைவரும் நெறியாளருமாக இருந்து என்னைப் பலவகையில் நல்லாற்றுப்படுத்தியும் தொடக்க நிலையிலிருந்து ஆய்வேடு முழுமையாக்கிய நிலைவரை பல கருத்துக்களை வழங்கியும் ஆய்வு செம்மைபெற ஆய்வு நூல்களையும் வழங்கிய அய்யா பேருர். முனைவர் மு.பாண்டி அவர்கட்கு என் உளம் கனிந்த நன்றிகளைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆய்வுக் காலத்தில் ஆக்கமும் ஊக்கமும் வழங்கி உற்சாகப்படுத்திய பேராசிரியர்கள் சு.இராசாராம், சே.செந்தமிழ்ப்பாவை, மு.நடேசன், மு.சுதா, சொ.சுரேஷ் ஆகியோர்க்கு நன்றியுடையேன்.

இந்நிலைக்கு என்னை ஆற்றுப்படுத்திய நல்லாசிரியர்களுக்கும், ஆய்விற்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்க பல நூல்களைத் தந்து ஆய்வு செழுமைபெற உறுதுணை புரிந்த அழகப்பா பல்கலைக்கழக நூலகத்திற்கு என் உளங்கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை இதுகாறும் படிக்க வைத்து அகம் சூழ்ந்து கொண்டிருக்கும் என் அருமைப் பெற்றரோர் க.கு.தமிழ்மாறன் (என்றும் என் நினைவில் வாழ்ந்து கொண்டிருக்கும் என் உயிர் தகப்பனார்) தாயார் நீலாவதி இருவருக்கும் என்

நன்றிகளைப் பாதங்களில் சமர்ப்பிக்கின்றேன். இந்நிலைக்கு என்னை ஆற்றுப்படுத்திய மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய என் மாமா சோ.உருமன், சகோதரி செந்தாமரை அவர்களுக்கும் நான் என்றைக்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

என்னை இதுகாறும் படிக்க வைத்து எனக்கு உறுதுணையாகவும், உந்துதலாகவும் இருந்து என் வாழ்க்கைக்கு ஒளிவிளக்காக இருக்கும் என் அருமை கணவர் அழ.வண்ணமுத்து அவர்களுக்கு என் நன்றிகளைப் பாதங்களில் சமர்ப்பிக்கின்றேன்.

என் அருமை மாமனார் மு.அழகப்பன் மாமியார் அழ.கருப்பாயி அவர்களுக்கும் என் செல்லக் குழந்தைகள் வ.வருண்பாபு, வ.கார்த்திக் இவர்களுக்கும் மனம் நெகிழ்ந்த நன்றிகள் பல.

என்னை வளர்த்து ஆளாக்கிய இரு கண்களுக்கும் மேலான என் சகோதரர்கள் த.பேராசிரியன், த.இளம்பூரணன், சகோதரிகள் த.தமிழ்மாலை, த.தேம்பாவணி அவர்களுக்கும் நான் என்றைக்கும் நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன்

இவ் ஆய்வினை உரிய நேரத்தில் கணினி அச்சு செய்து கொடுத்த காரைக்குடி நிதிஷ்பிரபா கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தாருக்கும் என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

த.புனிதவதி

# பொருளடக்கம்

# முன்னுரை

திருக்குறள், மனித இனத்திற்கு வழிகாட்டும் உயர்வும் தூய்மையும் வாய்ந்த இலக்கியப் பெட்டகம். எக்காலத்துக்கும் பொருந்தக்கூடிய கட்டற்ற சிந்தனைகளையும் பெருஞ்சிறப்பு வாய்ந்த அறங்களையும் அறிவுறுத்துகின்ற இலக்கியமாகத் திகழ்கிறது. வள்ளுவர் இயற்கைப் பொருள்களை அளவுகோலாகக் கொண்டு மக்கள் வாழ்வினை அளந்து காட்டுகிறார். இயற்கை நிகழ்ச்சியில் தன் நோக்கத்தைக் காணும் வள்ளுவர், இயற்கைப் பொருட்களைத் தன் கருத்துப் புலப்பாட்டிற்கேற்ப நேரடியாகவும், மறைமுகமாகவும் வலியுறுத்தியுள்ளார் என்பதையும், இயற்கைப் பொருட்களை உவமை, உருவகங்களாக மட்டுமல்லாமல் அவற்றின் ஏனைய பயன்பாடுகளையும் குறள்களில் பதிவு செய்துள்ளமையைக் காண்பதாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

‘**திருக்குறளில் இயற்கை**’ என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு எல்லை**

திருக்குறளுக்கு இருநூற்றுக்கும் மேற்பட்டோர் உரை எழுதியுள்ளனர். குறட்பாக்கள் முழுமையும் எடுக்கப்பட்டு, அதில் இயற்கை குறித்தக் கருத்துக்கள் இவ்வாய்விற்கு எல்லையாக அமைக்கப்பட்டுள்ளன.

**ஆய்வின் நோக்கம்**

இன்று உலகை அச்சுறுத்தும் பல சிக்கல்களுக்குத் திருக்குறளில் தீர்வுகள் சுட்டப்பட்டுள்ளன. அதனைத் தேடிப் பெற்றுக் கொள்வதே மனித வாழ்வின் அறிவாண்மைக்கு அடையாளமாகும். நீர், நிலம், தீ, காற்று, வான் ஆகிய இயற்கை வளங்களுக்கும், மனிதன், பிற உயிரினங்கள், நுண்ணுயிர்கள் ஆகியவற்றிற்கும் இடையே உள்ள தொடர்பைச் சிந்திப்பது

சுற்றுச்சூழல் சிந்தனையாகும். பொருள் தேடும் மனிதனிடம் இயற்கை குறித்தச் சிந்தனைகள் குறையத் தொடங்கியுள்ளன.

கேடு வராமலும் கேடு வந்தாலும் அதனைச் சரிசெய்தும் இயற்கை வளம் குன்றாமல் காத்துக் கொண்டும் இருக்கின்ற நாடே(736), நாடுகளுக்கெல்லாம் தலைமையானது என்பது வள்ளுவர் கூற்றாகும். ஓசோன் படலத்தில் ஓட்டை அதிகரித்தால் சூரியனின் புற ஊதாக் கதிர்கள் நேரடியாக மனிதன் முதலாக உயிரினங்களைத் தாக்கிக் கேடு விளைவிப்பதாகக் குறிப்பிடுகின்றனர். இன்று உலக வெப்பமயமாதல் தலையாயச் சிக்கலாக உள்ளது. இவற்றிற்கெல்லாம் அடிப்படைக் காரணம் இயற்கையைப் பாதுகாக்காமல் இருப்பதுதான்.

ஐம்பூதங்களும் மாசடைந்து இருக்கின்றன. இதனால் பலவகைகளில் மனிதனின் வளமான வாழ்க்கைக்கு அச்சுறுத்தல்கள் பெருகியுள்ளன. இந்த அச்சுறுத்தல்களையெல்லாம் வெற்றி காண்பது என்பது மிகவும் எளிது. இயற்கையை நேசிப்பது இயற்கையோடு இயைந்து வாழத் திட்டமிடுவது என வள்ளுவன் வகுத்தப் பாதையை மீள எடுத்துச் செல்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

இயற்கையை முதன்மைப்படுத்தல், வாழ்வியல் கருத்துக்களை இயற்கைப் பொருள்கள் மூலம் காணுதல், இயற்கையான வாழ்வை வலியுறுத்த இயற்கையைத் துணையாக்குதல், இயற்கையிடம் இறைவனைக் காணுதல் போன்றவற்றை வள்ளுவர் தம் குறட்பாக்களில் கொண்டிருக்கலாம் என்பதாக இவ்வாய்வின் கருதுகோள் அமைக்கப்பட்டுள்ளது.

**சான்றாதாரங்கள்**

பரிமேலழகர், மணக்குடவர், காலிங்கர், பரிப்பெருமாள், பரிதியார் போன்றோரின் திருக்குறள் உரைகள் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. மறைமலையடிகளின் திருக்குறள் ஆராய்ச்சி, ரா.பி.சேதுபிள்ளையின் வழி வழி வள்ளுவர், கி.ஆ.பெ.விசுவநாதம் எழுதிய வள்ளுவரும் குறளும், ச.தண்டபாணிதேசிகரின் திருக்குறள் அழகும் அமைப்பும், தெ.பொ.மீனாட்சிசுந்தரத்தின் வள்ளுவரும் மகளிரும், வ.சுப.மாணிக்கம் எழுதிய திருக்குறட் சுடர், வள்ளுவம், குன்றக்குடி அடிகளாரின திருக்குறள் பேசுகிறது, க.த.திருநாவுக்கரசு எழுதிய ஒளி விளக்கு, கா.சுப்பிரமணியம் எழுதிய பொதுமறை விளக்கம் (திருவள்ளுவர்), வீ.முனுசாமி எழுதிய திருக்குறள் அதிகார விளக்கம் போன்ற நூல்கள், மலர்கள், ஏனைய திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்**

தெளிவுபடுத்துதல் என்பது Interpretation என்பதன் தமிழாக்கமாகும். இவ்வகைத் திறனாய்வு ஒரு படைப்பாக்கத்தை விளக்கி உரைப்பதாகும். ஐம்பூதங்களை விளக்கும் வகையில் விளக்கமுறை அணுகுமுறையையும் (Descriptive approach), இயற்கையின் வழியாக வெளிப்படும் சமுதாயக் கருத்துக்களைக் கண்டறிய சமுதாயவியல் (Sociological approach) அணுகுமுறையையும், இயற்கை வழியாக வெளிக்காட்டும் அறவியல் சிந்தனைகளைக் கண்டறிய அறவியல் (Moral or Ethical approach) அணுகுமுறையையும் கொண்டு இவ்வாய்வு அமைக்கப் பெற்றுள்ளது.

**இயல் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை

1. **ஐம்பூதங்கள்**
2. **மரங்கள், தாவரங்கள்**
3. **விலங்கினங்கள் நீர்வாழ்வன, ஊர்வன**
4. **புள்ளினங்கள்**
5. **தொழில்கள்**

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்**

இயற்கை நிகழ்வுகளான ஐம்பூதங்களின் இயக்கத்தையும், அதன் மூலம் மனிதர்கள் பின்பற்றக்கூடிய வாழ்க்கை நெறிகளையும் தம் குறட்பாக்களின் மூலம் தெளிவுபடுத்தியதை **ஐம்பூதங்கள்** என்ற முதலாமியலில் விளக்கப் பெற்றுள்ளன.

பிணியும் பகையும் பசியும் நாட்டில் ஏற்பட இயற்கை வளக் குறைபாடே காரணமாகிறது. நீர் இயற்கை வளங்களுக்கு ஆதாரமாக உள்ளது. மழைநீர், ஊற்றுநீர், ஆற்றுநீர், மலை, அரண் ஆகியவை நாட்டிற்கு உறுப்பாக அமைகின்றன. மழை பெய்வதற்குக் காடுகள் மலைகள் மிகவும் உதவி செய்யக்கூடியவை.

ஐம்பூதங்களாகிய நீர், நிலம், காற்று, தீ, வானம் சார்ந்த எல்லா இயற்கை நிலைக்களங்களையும் பேணுவதே நாட்டுக்குப் பாதுகாப்பு என்கிறார். ஐம்பூதங்களின் சேர்க்கைதான் மனித உடம்பு என்பது வள்ளுவக் கோட்பாடு. வஞ்சமனத்தோடு கூடா ஒழுக்கம் புரிகிற மனிதனைப் பார்த்து ஐம்பூதங்களும் சிரிக்கும் என்கிற ஒப்பீடு சிந்தனைக்குரியதாகிறது.

வான்மழையை வழிபாட்டுடனோ, இறையருளுடனோ ஒப்பிடாத வள்ளுவர், அறத்தோடு ஒப்பிடுவது நோக்கத்தக்கது. வாழும் உலகத்தை உய்விக்கும் வானமுதம்தான் மழை என்கிறார். உலக நிலைப்பேற்றை மழையே வழங்குகிறது என்பதால் அது சாவா மருந்தாகிய அமிழ்தம் எனப்பட்டது. மழையில்லையேல் உயிர் வாழ்க்கை கிடையாது மழை இல்லையேல் கடல் இருந்தும் பயனில்லை என்கிறார். நிலம்வாழ் மனிதனுக்கு உணவாகி உதவுகிற கடல்வாழ் உயிரினங்களும் மழை இல்லை என்றால் அழிந்துபடும் என்பதைக் குறிக்கத் தன்நீர்மை குன்றும் என்கிறார்.

வாழ்வு வளம் பொருந்தியதாக உலகம் இருக்கவேண்டுமெனில், தூய்மையாகக் காற்று இயங்க வேண்டும் என்பது வள்ளுவச் சிந்தனையாகும்.

தீ சுடராகவும் பெரும் நெருப்பாகவும் குறளில் அறியப்படுகிறது. கொடுங்கோல் அரசனிடம் விலகாமலும், அணுகாமலும் இருப்பதற்குத் தீக்காய்தலின் தன்மையினை உவமையாக எடுத்துக் கூறுகிறார்.

வாழ வைக்கின்ற மண்ணை வசையின்றி காக்க வேண்டும். இயற்கையாக நீருக்கு மணம், நிறம், சுவை, நோயுண்டாக்கும் தன்மை என்று எதுவும் கிடையாது. அது எந்த மண்ணோடு சேருகிறதோ அந்த மண்ணின் இயல்புக்கு ஏற்ப மாறிவிடும். பாழ்பட்ட நிலத்தினால் நீரும் மாசுபடும். நிலத்தை மாசுள்ளதாக ஆக்கினால் அது நிலத்திற்குக் கேடு என்றாலும் அந்தக் கேடு முழுமையும் கேடு உண்டாக்கிய மனிதனுக்கே வந்து சேரும் என்பது வள்ளுவரின் கருத்தாகும்.

**மரங்கள், தாவரங்கள்** என்ற இரண்டாமியல், வாழ்வியலோடு தொடர்புடைய மரம், செடி, கொடிகள், மலர்கள், காய், கனிகள் போன்றவற்றைத் தம் குறட்பாக்களில் உவமையாகவும், உருவகங்களாகவும் வாழ்க்கைக்கு வழிகாட்டும் தகவல்களாகவும் பதிவு செய்துள்ளவற்றை ஆய்வதாக அமைகிறது.

மரத்தின் சினையாகிய கோடு, கொம்பு, வளர், கால், காழ் , கொடி போன்றவற்றையும் பதிவு செய்துள்ளார். பூவின் காம்பினைக் ‘கால்’ என்றும், பூவின் இதழைத் ‘தோடு’ என்றும், காழ் என்ற சொல்லாட்சியை விதைக்கும், முற்றிய மரத்திற்கும் பயன்படுத்தியுள்ளமையும் இவ்வியலில் விளக்கப் பெற்றுள்ளன.

மருந்து மரங்கள், பழ மரங்கள், நச்சு மரங்கள் முதலியனவும் அறிவிக்கப்படுகின்றன. இலை, தளிர், பட்டை, வேர் முதலிய எல்லாம் மருந்தாகப் பயன்படுவதை அறிவிக்கிறார்.

ஆங்கிலத்தில் திருக்குறளை மொழிபெயர்த்தவர்கள் மரம் என்ற சொல்லுக்கு Tree என்கிற பதத்தைப் பயன்படுத்தியுள்ளனர். ஜி.யூ.போப் இந்தக் குறளில் வருகிற மரம் என்கிற சொல்லுக்கு மாத்திரம் தனது மொழிபெயர்ப்பில் Wood என்று எழுதியுள்ளார். உயிருள்ள மரம் உயிரற்ற கட்டை இரண்டிற்கும் பொருள் புரிந்தால் குறளின் பொருளும் விளங்கும் என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

தினை, பனை, குன்றிமணி, எள் என்பன அளவினைக் காட்டுவனவாகும். சிறிது, பெரிது என்ற கோட்பாட்டை உணர்த்தவே தினை, பனையினைக் கையாண்டுள்ளதை இவ்வியல் விளக்குகிறது.

தாமரை, குவளை, அனிச்சம் போன்ற நீர்ப் பூக்களின் தன்மைகள், மேன்மைகள் பற்றிக் குறிப்பிடுகிறார். கொத்தாகக் காணப்படும் மலரை ‘இணர்’ என்றும், மரக்கிளையில் பூக்கும் பூ கோட்டுப்பூ என்றும், பூக்களால் கட்டப்பட்ட மாலைக்குத் ‘தொடலை’ என்றும் பெயரிட்டுள்ளார்.

அரும்பு, மொக்கு, முகை, போது போன்ற பூவின் பல நிலைகளைக் கூறுகிறார். முகை நிலையில்தான் பூவிற்கு மணம் உண்டு என்பதை விளங்கும் வள்ளுவர், கரும்பின் பூவிற்கு மணம் இல்லை என்கிறார்.

அனிச்சம் நிலப்பூவா? நீர்ப்பூவா? என்பதற்கு 'நன்னீரை வாழி அனிச்சம்' என்று கூறி நீர்ப்பூ என விடை கூறுவதை இவ்வியல் விளக்க முற்பட்டுள்ளது. முகர்ந்த அளவிலேயே அனிச்சம் வாடிவிடும் என்பதையும், குவளைப் பூக்கள், மேல் நோக்கி மலர்தலையும், நெருஞ்சி முள்ளை நெருஞ்சிப் பழம் என்று கூறுவதையும் குறளின் வழி ஆராயப்பட்டுள்ளது.

**விலங்கினங்கள் நீர்வாழ்வன, ஊர்வன** என்ற மூன்றாமியலில், யானை, புலி, குதிரை, நரி, பசு, காளை, ஆடு, முயல், ஆமை முதலியன குறளில் குறிக்கப்பட்டுள்ளன. யானையே, குறளில் பெரும்பாலான இடங்களில் (எட்டு இடங்கள்) பேசப்படுகின்றது. யானையை வைத்து யானையைப் பிடிக்கின்ற தொழில் நுட்பமும், யானைப் போர், ஆட்டுக்கிடாய் சண்டை ஆகியனவும் வள்ளுவர் காலத்தில் இருந்துள்ளன என்பதை இவ்வியல் விளக்குகிறது. இவற்றின் வழி வள்ளுவர் பல்லுயிர்ப் பெருக்கம் அதன் இணைப்பு, பயன்கள் பற்றியும் சிந்தித்திருக்கிறார் என்பதை அறியலாம்.

நன்கு பயிற்றப்பட்ட குதிரை, போரில் சளைக்காது என்பதும், பயிற்றப் பெறாத குதிரை, கடும் போரில் வீரனை வீழ்த்திவிட்டு ஓடும் என்பதும் குதிரையின் இயல்புகளாக உணர்த்தப் பெறுகின்றன.

கவரிமா என்பது இமயமலையில் வாழும் விலங்காகும். தற்போது அவை யாக் என்று அழைக்கப்படுகிறது. பனிப் பகுதிகளில் வாழ்வதால், தன் மயிர்த்திரளில் ஒரு மயிரை இழக்க நேர்ந்தாலும் அதிகமான பனியின்

காரணமாக அவை உயிரிழக்க நேரிடும் என்பதை வள்ளுவர் அறிந்திருக்கிறார் என்பதை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

முயல், ஆமை போன்ற விலங்கினங்களையும், பாம்பு, எலி, புழு, மீன் போன்ற ஊர்வனவற்றையும் குறளில் பதிவு செய்துள்ளார்.

மனைத்தக்க மாண்புடைய பெண்ணை இல்லாளாகப் பெற்றவன் சிங்கம் போல கம்பீரமாக நடை போட முடியும் என்றும், மன வலிமை உடையவர்கள் யாருடைய துணை இல்லாமல் போனாலும், வெற்றி பெறுவார்கள் என்பதற்குப் புலியின் செயலையும், ஏமாற்றுவார்களின் செயலுக்குப் புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பசு மேய்வதையும், வலிமை குறைந்தவர்கள் கூட இடமறிந்து செயலாற்றினால் எளிதாக வெற்றி பெற முடியும் என்பதை நரியின் செயல் வழியாகவும், தடைகள் பல வந்த போதும் கொண்ட கொள்கையில் உறுதியாக இருந்து செயல்படுபவருக்கு (பகடு) காளையின் செயல் வழியாகவும் உவமைகளாகக் காட்டுவதை இவ்வியல் விளக்குகிறது.

ஊக்கமுடையவனின் செயலுக்கும் ஊக்கமில்லாதவன் செயலுக்கும் யானையை உவமை காட்டியிருப்பது மாறுபாடாகத் தெரிகிறது. வீரச்சுவையுடைய யானையின் செயலை இன்பச் சுவைக்கு எடுத்துக்காட்டுகிறார் வள்ளுவர்.

வள்ளுவர் 'மா' என்று பொதுப் பெயரினைப் பயன்படுத்தியுள்ளார். 'மா' என்பதினால் குதிரையைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் கூறுகின்றனர். அக்காலத்தில் யானைப்படையும் இருந்துள்ளது. யானைக்கும் 'மா' என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளதும் குறிப்பிடத்தக்கது. இரத்தல், இழிவு என்பதை அழுத்தமாக உரைப்பதற்குப் பசுவினைக்

காட்டியுள்ளார். பெண்களின் பார்வைக்கு மான் பிணையின் பார்வையை ஒப்பிட்டுள்ளார்.

நீரில் இருக்கும் போது முதலைக்கு வலிமை அதிகமாக இருக்கும். நீரைவிட்டு வெளியே வருமானால் அதன் வலிமை குறைந்துவிடும் என்பதை அறிந்துள்ளார்.

புலன் அடக்கத்திற்கு ஆமையை உவமைகாட்டுகிறார் வள்ளுவர். சந்திரகிரகணத்தை அறிந்திருந்த வள்ளுவர், இராகு என்ற பாம்பு சந்திரனை விழுங்குவதாக, அக்காலத்தில் நிலவிய நம்பிக்கையினை அவ்வாறே பதிவு செய்துள்ளார்.

**புள்ளினங்கள்** என்ற நான்காமியலில், கூகை, காகம், கொக்கு, மயில், அன்னம் ஆகியவை குறிக்கப் பெறுகின்றன. கோட்டானுக்கும் காகத்திற்கும் பிறவிப்பகை. கோட்டானுக்குப் பகலில் கண் தெரியாது. காகம் , அதனைப் பகலில் வென்றுவிடும். காலையில் எழுந்திருத்தல், காணாமலே புணர்தல், மாலை குளித்தல், மனைபுகுதல், உற்றாரோடு உண்ணல், உறவாடல் ஆகிய ஐந்து நற்குணங்கள் காக்கையிடம் உண்டு. அவற்றில் ஒன்றான சிறிது உணவு கிடைப்பினும் தன் இனத்தாரை அழைத்துப் பகுத்துக் கொடுத்து உண்பதை உணர்ந்து பாராட்டுகிறார்.

எந்த ஒரு செயலைச் செய்யவும், பகை முடித்து வெற்றி பெறவும், காத்திருத்தலும், திட்டமிடலும் தேவை என்பதை வலியுறுத்தக் காக்கை, கூகை, கொக்கு ஆகியவற்றின் செயல்களின் மூலம் விளக்குகிறார்.

பறவைக் குஞ்சுகள், இறகு முளைக்கிற வரையில் கூட்டில் இருக்கும் பறக்கக் கூடிய நிலை வந்தால் பறந்துவிடும் என்று, பறவைகளின் பொதுக் குணமும் வள்ளுவரால் பேசப்படுகிறது. அக்காலத்தில் பீலி, அன்னத்தின்

தூவி இவைகளின் பயன்பாடு அதிகமாக இருந்திருக்கின்றன என்பதை வள்ளுவரின் குறளின் வழி அறியப் பெறுகிறது. அழகியல் நோக்கோடு மயிலின் சாயலைப் பெண்ணுக்கு உவமை காட்டியிருப்பதுப் பெறப்படுகிறது.

**தொழில்கள்** என்னும் ஐந்தாமியலில், வள்ளுவர் தொழில்கள் குறித்தான செய்திகளை நேரடியாவும், மறைமுகமாகவும் பதிவு செய்துள்ளதையும், அவற்றுள் உழவுத் தொழில், ஆசிரியத் தொழில், மருத்துவத் தொழில், வாணிபம், வேட்டையாடுதல், நாவிதர் தொழில், கூத்தாடுதல், தச்சர், கொல்லர், குயத்தொழில்கள், வள்ளுவரால் கடியப்பட்ட இறைச்சி விற்றல், கள் விற்றல், வரைவின் மகளிர் தொழில் பற்றியும், தற்கால மேலாண்மைத் தொழில் குறித்தும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன. தற்காலத்தில் இயற்கை வளங்களை அழித்துத் தொழில் முனைவோர் பிற தொழில்கள் செய்வது போன்று, வள்ளுவர் காலத்தில் இயற்கையோடு இயைந்த தொழில்களைச் செய்தவர்கள், இயற்கை வளங்களைப் பேணிக் காத்தனர். தற்போது உழவுத் தொழிலும் நச்சு உரங்களால் நிலம், நீர், காற்று ஆகியவைவும் மாசடைந்து வருவதும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

ஆய்வில் பெறப்பட்ட கருத்துக்கள் தொகுக்கப் பெற்று ஆய்வின் முடிவுகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள், ஆய்வேடுகள், அகராதி, நிகண்டுகள், ஆய்வுக் கோவை, மலர்கள். இதழ்கள் போன்றவை துணைநூற்பட்டியலாக இடம் பெற்றுள்ளன.

வள்ளுவர் காட்டிய உவமைகள் பின்னிணைப்பாகப் பட்டியலிடப்பட்டுள்ளன.

# இயல் - 1

## ஐம்பூதங்கள்

மூன்றடியில் உலகை அளந்தவன் இறைவன் என்பார்கள் ஆனால் ஒன்னேமுக்கால் அடியில் இவ்வுலகை அளந்தவர் திருவள்ளுவர். உலக மக்களின் உள்ளங்களில் தோன்றும் எண்ணங்களையெல்லாம் தம் குறளடியால் அளந்துள்ளார். இதனை,

'மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுதும் நயந்தளந்தான் வாலறிவின்
வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தார் ஓர்ந்து'

என்ற பரணரின் பாடலடியின் மூலம் அறிந்து கொள்ளமுடிகிறது. ஓர் இலக்கியம் வாழ்கிறது என்றால் அது மனிதகுலத்தை வாழ வைத்துக் கொண்டிருக்கிறது வாழ்க்கைக்கான வழிமுறைகளைச் சொல்லிக் கொண்டே இருக்கிறது என்று பொருள். திருக்குறள் ஈராயிரம் ஆண்டு கடந்தும் வாழ்ந்து கொண்டிருக்கும் வாழ்க்கை விளக்க நூல். சமயம், காலம், சாதி, மதம், முதலிய வரையறையின்றி, எச்சமயத்தார்க்கும், எச்சாதியினருக்கும், எக்காலத்திற்கும், எந்நாட்டினர்க்கும் பொதுவான உண்மைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் தனி நூலாகத் திகழுகின்றது. வாழும் வள்ளுவத்தின் நிலைத்த தன்மையை நோக்கி, 'எல்லாப் பொருளும் இதன்பால் உள இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்' என மதுரைத் தமிழ்நாகனார் திருவள்ளுவ மாலையில் போற்றுகின்றார்.

இயற்கையோடியைந்த வாழ்வு கொண்ட பழந்தமிழர் தம் வாழ்வுக் களனாக இயற்கையின்பால் வியப்பும், மதிப்பும், அச்சமும், அழகும் ஆகிய உணர்வுகளைக் கொண்டிருந்தனர். மண்ணும் விண்ணும் மலையும் கடலும் என விரிந்து விளங்கும் இவ்வுலகில், எங்கும் எல்லையற்று நிறைந்திலங்கும்

பேரியற்கையின் பெருமை கண்டு வியந்தனர். அதன் அளப்பருங் கருணை வளம் நோக்கிப் போற்றினர். வரம்பில்லா ஆற்றல் உணர்ந்து அஞ்சினர். அழியா அழகு நோக்கி அகம் மகிழ்ந்தனர். அத்தகைய இயற்கையின் பண்புநலன்கள் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் திருக்குறளில் பயின்று வந்துள்ளன. திருக்குறளில் இயற்கை என்ற ஆய்வில், ஐம்பூதங்களின் சிறப்புகளையும், அவற்றை வள்ளுவனார் தம் உவமைகளால் கையாண்ட விதங்களைப் பற்றியும் விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**ஐம்பூதங்கள்**

இந்த உலகம் ஐந்து இயற்கைப் பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டது. இவற்றினை ஐம்பூதங்கள் என்றழைப்பது உலகியல் வழக்கு. நிலம், நீர், தீ, காற்று, வானம் என ஐந்து பொருள்களையும் இணைத்து, ஐம்பூதங்கள் எனக் குறிப்பிடுவர். இவற்றில் ஏதேனும் ஒன்று இயங்காமல் போனால், இவ்வுலகம் இயங்காது என்பது உண்மை.

உலகம் என்பது நிலம், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐம்பூதங்களின் கூட்டமைப்பாக உள்ளது. இதனைத் தொல்காப்பியம்,

“நிலம் தீ நீர் வளி விசும்போ டைந்துங்
கலந்த மயக்கம் உலகம்”[(1)]

என்கிறது. புறநானூற்றில் சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் என்ற புலவர், ஐம்பெரும் பூதத்து இயற்கை போல வாழ்வாங்கு வாழ வாழ்த்துகின்றார். இதனை,

“மண்தணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்

தீ முரணிய நீரும் என்றாங்கு

ஐம்பெரும் பூதத்து இயற்கை போல...”(2)

என்று கூறுகின்றார். இதன் வழி, அணுக்கள் செறிந்த நிலம், அந்நிலம் தாங்கி உயர்ந்தோங்கிய வானம், அவ்வானில் உலவும் காற்று, அக்காற்றால் உண்டாகும் நெருப்பு, அந்நெருப்புடன் முரண்பட்ட நீர் என இயற்கையின் உள்ளடக்கமாகிய ஐம்பூதங்களின் உருவாக்கம் விளக்கப்படுகிறது. “உலகிலிருந்து தோன்றியவை, இவ்வுலகத்து உயிரினங்கள். இவை ஓரறிவு முதற்கொண்டு ஆறறிவு படைத்த மக்கள் வரை காணப்படுகின்றன. இவ்வுயிரினங்களில் மேலான பிறவி, மக்கட் பிறவியே! ஏனெனில், இப்பிறவிதான் பகுத்தறிவினைப் பெற்றிருக்கின்றது. உலகிலிருந்து தோன்றியதால் உலகிலுள்ள நிலம், நீர், தீ, காற்று, விண் என்ற ஐந்தும் இவ்வுடம்பினுள்ளும் கலந்திருக்கிறது. ஆதலால்தான் ‘பூதங்களைந்தும் அகத்தே நகும்’ என்று குறிப்பிடுகிறார். உள்ளேயே இருந்து அவனது மறைவான தீய வொழுக்கத்தினைக் கண்டு அவை சிரிக்கும் என்கிறார்.

இயற்கைப் பிரிவுகளான ஐந்தும் ஆற்றல் நிறைந்தவை. இந்த ஐந்தும் ஒன்று சேர்ந்து நிகழ்கின்ற நிகழ்ச்சிதான் ‘மழை’. உலகில் உள்ள பூதங்கள் ஐந்து பிரிவுகட்கும் இந்த உடம்பில் உள்ள ஐந்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உலகியல் வழக்கில் ‘மனச்சாட்சி’ என்று கூறுவார்கள். அதனை அறிந்து, தெரிந்து, தெளிதல் மிகவும் கடினமாகும். அங்ஙனம் தெரிந்து கொள்ளுபவனே முனிவனாவான். ‘வகை தெரிவான் கட்டே உலகு’(27) என்று கூறியதும் அதனாலேயே யாகும். மக்கட் பிறவி இந்த ஐந்து பூதங்களையும் கொண்டு வாழ்வதால்தான், இயற்கை எனப்படும் இவ்வுலகப் பிரிவுகளான நிலம், நீர், தீ, காற்று, விண் என்பன மனித முயற்சியினால் ஏவல் செய்யும்

என்றும் கூறப்படும். இவ்வுலகத்தை அண்டம் என்றும் அந்த அண்டத்திலிருந்து தோன்றிய இவ்வுடம்பினை பிண்டம் என்றும் கூறுவது உலக வழக்கு.

ஐம்பூதங்களைக் கொண்டிருக்கும் இப்பிறவியில் ஆற்றல் பெற்றிருப்பவர்கள் எண்ணியது நடக்கும் என்பது இயற்கை உண்மை நியதியாகும். உலகில் காணப்படும் ஐந்து பூதங்களும் நிலை தடுமாறி, முறை தவறி நடக்குமேயானால் உலகமே அழிந்து விடும். உலகப் பிரிவுகளான இந்த ஐந்தும் முறையாக நடந்து வருவதால்தான் உலகமும் மக்களும் இருந்து வருகின்றார்கள்"[3] என்பர் திருக்குறளார் வீ.முனுசாமி.

ஐம்பூதங்கள் எனும் இயற்கை நன்மைகளை மட்டுமின்றி, தீமைகளையும் கொடுக்கக் கூடிய ஆற்றல் வாய்ந்தது. கேடு வராமலும், கேடு வந்தாலும் அதனைச் சரி செய்து இயற்கை வளம் குன்றாமல் காத்துக் கொண்டும் இருக்கின்ற நாடே நாடுகளுக்கெல்லாம் தலைமையானது என்பது வள்ளுவக் கூற்று. இதனை,

"கேடு அறியாக் கெட்ட இடத்தும் வளம்குன்றா
நாடுஎன்ப நாட்டின் தலை"[4]

என்பர் வள்ளுவர்.

**சுற்றுச்சூழலும் வள்ளுவமும்**

நாடு என்பது எப்படி இருக்கும், இருக்க வேண்டும் என்று கூற வந்த வள்ளுவர்,

"உறுபசியும், ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு"[5]

என்று கூறுகிறார். இயற்கை வளம் குன்றினால் பசி ஏற்படுகின்றது உணவின் குறைபாடு, இயற்கை வள மாறுபாடு ஆகியவற்றால் பிணி உண்டாகிறது. பசியும் பிணியும் கொண்ட மக்கள் வலியும், பொலிவும் குறைந்தவர்களாக

ஆகிவிடுவதால், பகைவர்கள் உள்ளே புகுந்து நாடு பிடிக்க அல்லது நாடு குழப்ப ஏதுவாகிறது. பகையும் பிணியும் பசியும் நாட்டில் ஏற்பட இயற்கைவளக் குறைபாடே அடிப்படை காரணமாகிறது. அதனால்தான் நாட்டின் உறுப்பைக் குறிக்க வந்த வள்ளுவர்,

"இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்

வல்அரணும் நாட்டிற்கு உறுப்பு"[6]

என்கிறார். மழைநீர், ஊற்றுநீர், ஆற்றுநீர், மலை, அரண் ஆகியவை நாட்டிற்கு உறுப்பாகத் திகழ்கின்றன. நீர், இயற்கை வளங்களுக்கு எல்லாம் ஆதாரமாகத் திகழுவதால் அதனை மூன்று வகையாலும் முக்கியப்படுத்துகின்ற தன்மை உணரத்தக்கது. 'வாய்ந்த மலை' என்று கூறியதுகூட மழை பெய்வதற்கு மலைகள் மிகவும் உதவி செய்யக் கூடியவை என்ற இயற்கை உண்மையைக் குறிப்பிடத்தான் எனக் கொள்ளலாம். வலிய பாதுகாப்பு அரணும் இங்கு நாட்டின் உறுப்பாகச் சுட்டப்படுகிறது. அரண் என்பதைப் பாதுகாப்பான கற்கோட்டை என்று ஒருவகையில் பொருள் கொண்டாலும் அந்த அரண்கூட இயற்கை அரணாக அமைந்திருந்தால் நலம் என்பதே வள்ளுவரின் சிந்தனையாகும். இதனை,

"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்

காடும் உடையது அரண்"[7]

என்கிறார். ஆழநீர், அகழி, மண்திடல், மலை, அடுக்கிய காடு இவற்றை உடையதுதான் அரண் என்கிறார். இவற்றில் மண்திடல் தவிர்த்த பிற அனைத்தும் நீர்வளம் சார்ந்தவை. எனவே நீர், நிலம், தீ, காற்று, வானம் சார்ந்த எல்லா இயற்கை நிலைக் களங்களையும் பேணுவதே நாட்டுக்குப் பாதுகாப்பு என்பது வள்ளுவர் கூறும் செய்தி எனலாம். நாடு என்றால் நாட்டிலுள்ள மக்களைத்தான் குறிக்கும். ஏனெனில் நிலம், நீர், நெருப்பு, காற்று,

வானம் எனும் ஐம்பூதங்களின் சேர்க்கைதான் மனித உடம்பு என்பது வள்ளுவக் கோட்பாடு. இதனை,

“வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்

ஐந்தும் அகத்தே நகும்”[8]

என்பதிலிருந்து அறிந்து கொள்ளலாம். வஞ்சமனத்தோடு கூடா ஒழுக்கம் புரிகிற மனிதனைப் பார்த்து அவனது அகத்தே இருக்கிற ஐந்து பூதங்களும் சிரிக்கும் என்கிறார். புறத்தே இருக்கின்ற ஐந்து பூதங்களுமாகிய இயற்கை வளங்கள் தூய்மையாக இருந்தால்தான் அந்த ஐந்து பூதங்களின் கலவையை அகத்தே கொண்டுள்ள மனிதன் தூயவனாகச் சீர்பெற முடியும் என்ற கருத்தை வலியுறுத்துகிறார்.

**நிலம்**

தமிழர்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நானிலங்களாக நிலத்தைப் பிரித்தனர். திருவள்ளுவர் காலத்திலும் இந்நானிலப் பாகுபாடே இருந்தது என்பதை அவர் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் உணர்த்தியுள்ளார். பாலை என்ற நிலம் தனியாக இல்லை. எந்த நிலம் வளங்குன்றி வறுமையடைகின்றதோ அதனையே பாலை எனக் கொண்டனர். இதனை,

“முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து

நல்லியல்பு இழந்து நடுங்கு துயர்உறுத்துப்

பாலை என்பதோர் படிவம் கொள்ளும்”[9]

என்னும் சிலப்பதிகார அடிகள் பாலை என்பது தனி நிலம் அல்ல என்பதைத் தெளிவாக விளக்குகின்றது.

**பொறுமை**

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை

இகழ்வாரைப் பொறுத்தல் தலை"(10)

நிலம் தன்னைத் தோண்டுவோரை விழாமல் தாங்கிக் கொள்கிறது. அதுபோலத் தம்மை அவமதிப்போர் துன்புறாவண்ணம் அவர்கள் செய்த துன்பத்தையும் பொறுத்துக் கொள்வதே தலையாயது என்கிறார். நிலம் வெட்டியும் கொத்தியும் தன்னை துன்புறுத்துகிறவனை வாழ்விக்கவும் செய்கிறது. நிலத்தை உழுது பயிரிடும் உழவனையும் நிலத்தைத் தோண்டி அங்குப் பணியாற்றும் சுரங்கத் தொழிலாளியையும் நிலம் வாழ்விக்கிறதே அதுபோல, உன்னை இகழ்ந்தவனை நீ பொறுத்துக் கொள்வது மட்டும் போதாது, அவன் இகழ்வதைப் பொறுத்துக் கொண்டு அவனுக்கு உன்னால் இயன்ற நன்மைகளை நலன்களைச் செய் என்னும் கருத்தினைச் சொல்லாமல் சொல்லிப் புரிய வைக்கிறார் வள்ளுவப் பெருந்தகை. தாங்குதல் என்னும் சொல்லுக்குக் காப்பாற்றுதல் என்ற ஒரு பொருளும் உண்டு. இதில் பிறர் செய்யும் துன்பத்தை, ஏளனத்தை, இகழ்ச்சியைப் பொறுத்துக் கொள்வது மட்டும் போதாது அவற்றைப் பொறுத்துக் கொண்டு அவர்களுக்கு நன்மையைச் செய்யவும் வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

**சினம்**

சினத்தின் தீமையை வலியுறுத்த வந்த வள்ளுவர், வெகுளாமை என்னும் அதிகாரத்தில்

"சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு

நிலத்தறைந்தான் கைபிழையா தற்று"(11)

தன் வலிமையைக் காட்டுவதற்குக் கோபத்தைக் கருவியாகக் கொண்டவன் நிச்சயமாகத் துன்பமடைவான். அவன் துன்பமடைவது நிலத்தை

ஓங்கி அறைந்தவனுடைய கை துன்புறுவது எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயமாகும் என்பது குறளின் கருத்தாகும். “மனித குலத்தை அலைக்கழிக்கும் கொடிய தீமைகளில் ஒன்று வெகுளுதல். அதாவது கோபப்படுதல். பலர் எளிதில் உணர்ச்சிக்கு ஆளாகின்றனர். அவ்வழி வெகுண்டு தமக்கும் பிறர்க்கும் தீங்கிழைக்கின்றனர். நொய்யரிசி உடன் வேகும் அடிப்பிடிக்கும் களியாகும் பொலிவு காணாது உண்பவர்க்குச் சுவையும் நிறைவும் தராது. ஆனால் அரிசி அப்படியல்ல. நின்று வேகும் முறையாகவும் வேகும் சோறும் பொலிவு காணும் உண்ணவும் இனிமையும் மனநிறைவும் தரும்.

அதுபோல, எளிதில் உணர்ச்சி வசப்படுகிறவர்கள் எளிதில் வெகுளிக்கும் ஆளாகின்றனர். தன்னைக் காத்துக் கொள்ள விரும்புகிறவர்கள் சேர்ந்தாரைக் கொல்லும் சினத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அப்பொழுதே அவரைச் சூழந்துள்ள இனம் தொடர்ந்து சூழ்ந்து நிற்கும்.

சினத்தினால் நன்மை விளைவதில்லை இன்பம் விளைவதில்லை. மாறாகக் கேடே விளைகிறது. கையால் நிலத்தை அறைந்தால் நிலத்திற்கு நோவில்லை கைக்கே வலி. வலியோடு மட்டுமல்ல, கையொடிந்தாலும் ஒடியும். அதுபோல ஒருவர் சினத்தால் பிறருக்கு விளைவிக்கும் தீமையை விட அவர் பெறும் தீமையே அதிகம்”(12) என்கிறார் குன்றக்குடி அடிகளார்.

நிலம் தன்னை அறைந்தவனைத் திருப்பித் தாக்குவதில்லை. எனினும் அதனை அறைந்தவன் துன்புறுவது போல, நாம் யாரிடம் சினந்து கொள்கின்றோமோ அவர் நம்மைத் திருப்பித் தாக்காவிட்டாலும் நாம் துன்புறுவோம். நிலத்தை அறைந்தவன் துன்பமடைவது உறுதி. தன் வலிமையைக் காட்டச் சினத்தைக் கருவியாகக் கொண்டவனும் துன்புறுவது

உறுதி. நிலத்தை அறைந்தவன் தன் செயலாலேயே வலியை வருவித்துக் கொள்கின்றான். நிலத்தை அறைந்தவனும், சினத்தைக் கருவியாகக் கொண்டவனும் துன்படைவது உறுதி என்பது வள்ளுவக் கருத்து.

**சிற்றினம் சேராமை**

வாழ வைக்கின்ற நிலத்தை வசையின்றி வாழ வைக்க வேண்டும். நிலம் எவ்வாறு இருக்கிறதோ அதே தன்மைக்கேற்ப நீரும் மாறிப் போகும் என்பது வள்ளுவர் கருத்தாகும்.

“நிலத் தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு”[(13)]

நீரானது எந்த நிலத்துடன் சேர்கின்றதோ அந்த நிலத்தின் தன்மையைப் பெற்றுத் தன் இயல்பிலிருந்து முற்றிலும் மாறிவிடும். அதுபோல மக்களும், அவர்கள் எந்த இனத்தாருடன் சேர்கின்றனரோ, அந்த இனத்தாரின் தன்மைக்கு ஏற்ற அறிவே ஏற்படும் என்பது இதன் கருத்தாகும்.

நீருக்கு நிறமும், சுவையும் இயல்பாக இல்லை. எனினும் செம்மண் நிலத்தில் விழுந்த நீர் செந்நிறமாகவும் (செம்புலம்செம்மை செய்யப்பட்ட நிலம்), கரிசல்மண் நிலத்தில் விழுந்த நீர் சற்று கருமை நிறமாகவும் மாறிவிடும். நீரானது அந்த மண்ணின் சுவைக்கும் மணத்திற்கும் ஏற்ப மாறிவிடும் தன்மையது. அதுபோலவே, மனிதர்களும் நல்லவர்களோடு சேர்ந்தால் நல்லவர்களாகவும், தீயவர்களோடு சேர்ந்தால் தீயவர்களாகவும் மாறிவிடுவர் என்கிறார்.

**ஊடல்**

நிலத்தோடு நீர் கலந்தாற் போல அன்புடைய காதலர்கள் ஒருவரோடு ஒருவர் ஊடல் கொள்வது இன்பமானது. அந்த இன்பத்திற்குத் தேவருலகத்து இன்பமும் சிறந்ததாகுமோ? என்று வினா எழுப்புகிறார் வள்ளுவர்.

"புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு

நீர்யைந்து அன்னார் அகத்து"(14)

ஊடல் காமத்திற்கு இன்பம் தருவதாகும். நிலத்தோடு இயைந்த நீர் அந்த நிலத்தின் இயல்பாகவே மாறும். அந்த பொய்யில்லா அன்புடையோர் கொள்ளும் சிறு பிணக்கினால் யாரும் துன்பம் உறுவதில்லை. இன்பம் மேலும் பெருகுவதற்கு அந்தச் சிறு பிணக்கும் கருவியாகிறது. அன்புடை நெஞ்சம் கலந்த காதலர்கள் நிலத்தோடு நீர் கலந்தாற் போன்று அன்பினால் கலந்து இருக்கிறோம். ஊடலால் இருவரும் பெற்ற இன்பத்திற்குத் தேவருலகத்திலும் அத்தகைய இன்பமுடையதோ? எனக் கேட்கிறார் வள்ளுவர்.

'நிலத்தொடு நீரியை தன்னா ரகத்து' எனும் குறட்பா, காதலரின் உள்ளங்கள் அன்பினால் ஒன்றாகக் கலந்து விட்ட நிலையைச் சுட்டுகிறது. "மழை பெய்வதற்குமுன், நீர் ஓரிடத்திலும், நிலம் வேறோரிடத்திலும் இருந்தன. சூரிய வெப்பத்தால் நீர் ஆவியாக மேலே சென்று, ஈரக் காற்றால் குளிர்ந்து மேகமாகி, மழையாகப் பெய்கிறது. அம்மழைநீர் முன்பின் தனக்குத் தெரியாத புதிய இடமாகிய நிலத்தில் விழுகிறது. நிலத்தில் விழுந்ததும், அந்நீர், நிலத்தின் வண்ணத்தையும் மணத்தையும் பெறும் வகையில் அதனோடு கலந்து விடுகிறது. பிறகு நீரையும், நிலத்தின் மண்ணின் மணத்தையும் வண்ணத்தையும் எளிதில் பிரிக்க இயலாது. இதைப் போன்றதே காதலர் உள்ளம்"(15) என்பர் க.த.திருநாவுக்கரசு.

நிலத்தோடு கலந்த நீரைப் போல, காதலர் உள்ளம் கலந்தது. இதனை,

"செம்புலப் பெயல் நீர் போல

அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே"(16)

என்ற குறுந்தொகையும் சுட்டிக்காட்டுவது நோக்கத்தக்கது. காதலர் கலந்திருத்தலைக் கூறும் வள்ளுவர், உயிராகிய நீர் ஆவியாகி சென்றுவிட்டால் நிலம் காய்ந்துவிடும் என்பதினால்தான் காதலர் இருவருக்கும் நிலத்தையும் நீரினையும் உவமை காட்டினார் போலும். நிலத்தோடு நீர் இருந்தால்தான் அவை உயிர்ப்புடன் இருக்கும் ஒருவரோடு ஒருவர் இணைந்திருக்கும் போதுதான் காதலும் உயிர்ப்புடன் இருக்கும் என்பதையும் வள்ளுவர் சிந்திக்க வைத்துள்ளார்.

பிறிதொருவிடத்தில், நிலத்தை மனைவியாகவும் நிலத்திற்கு உரியவனைக் கணவனாகவும் கற்பனை செய்திருக்கிறார். இதனை,

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்"(17)

என்று கூறுகிறார். நிலத்திற்கு உரியவன் உரிய காலங்களில் முறையே சென்று நிலத்தைப் பார்வையிட வேண்டும். அவ்வாறில்லையானால், அவனுடைய அன்புடன் கூடிய, பராமரிப்பில்லாத அவன் மனைவியைப் போல, அந்த நிலமும் வெறுத்து அவனோடு பிணங்கிவிடும் என்பது வள்ளுவக் கருத்தாகும்.

கணவன், மனைவியிடத்து அன்புடையவனாக இருத்தல் வேண்டும். அன்போடும் ஆதரவோடும் அரவணைத்தல் வேண்டும். அவ்வாறில்லையெனில், அவன் அவளுடைய அன்பையோ, இன்பத்தையோ பெறமுடியாது. நிலத்திற்குரியவன் உரிய காலங்களில் எல்லாம் சென்று நிலத்தைப் பார்வையிட்டுக் கவனித்து ஆவன செய்ய வேண்டும். இல்லையானால், உரிய விளைச்சலையும், பயனையும் தராமல் வளங்குன்றிவிடும். நிலத்தைக் கவனித்து உரிய செயல்களைச் செய்யாத நிலச் சொந்தக்காரனும், மனைவியை அன்போடு கவனித்து அரவணைக்காத கணவனும் பெறத்தக்கப்

பயனைப் பெறாமல் போவார்கள் என்பதை விளக்குவதற்காக மனைவிக்கு உவமையாக நிலத்தைக் கூறுகிறார் வள்ளுவர்.

மற்றொருவிடத்தில், நிலத்தை மண்மகள் என்று உருவகித்துக் கூறியுள்ளார். இதனை,

"இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்

நிலமென்னும் நல்லாள் நகும்"[18]

என்று கூறுகிறார் வள்ளுவப் பெருந்தகை. எவ்விதப் பணியும் செய்யாமல் சோம்பிக் கிடப்பவரைக் கண்டால் நிலமகள் (நிலமென்னும் நல்லாள்) அவனது அறிவின்மையை எண்ணி ஏளனமாகச் சிரிப்பாள்.

நிலம் எல்லா வளங்களையும் தரவல்லது. வள்ளுவர் காலத்தில் உழவின் மேன்மை வலியுறுத்தப்பட்டது. நிலத்தில் பாடுபட்டு உழைத்தால் செல்வம் பெருகும். அவ்வாறு உழைக்காமல் சோம்பி, மூலையிலே முடங்கிக் கிடப்பவரைப் பார்த்து, பொன்னும் பொருளும் போகமும் தரும் நிலமகள் ஏளனச் சிரிப்புச் சிரிப்பாள். எனவே அந்த நிலமகள், ஏளனமாகப் பார்த்துச் சிரிக்கும்படி நீ உழைப்பை மறந்துச் சோம்பிக் கிடந்து வாழ்க்கையைப் பாழாக்க வேண்டாம் என்கிறார்.

**இடனறிதல்**

ஒருவருக்கு உகந்த இடம் இன்னொருவருக்கு உகந்ததாக இராது என்ற உண்மையை உணர்த்த வந்த வள்ளுவர், நிலத்தில் ஓடும் நெடுந்தேரையும் கடலில் ஓடும் கப்பலையும் எடுத்துக்காட்டுகிறார். இதனை,

"கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்

நாவாயும் ஓடா நிலத்து"[19]

என்று கூறுகிறார். நிலத்தில் இயங்கும் வலிமையான சக்கரங்களையுடைய தேர்கள் கடலில் ஓடமாட்டா கடலில் ஓடும் கப்பல்கள் நிலத்தில் ஓடமாட்டாது

என்பது வள்ளுவர் கருத்து. ஒவ்வொருவருக்கும் உரிய இடமுண்டு. ஒருவர் இடம் பிறிதொருவனுக்கு உகந்ததாக இராது என்பதை உணர்த்த நிலத்திலோடும் பெருந்தேரையும், கடலில் ஓடும் கப்பல்களையும் காட்டி, அவ்வவற்றிற்குரிய இடத்திலேயே அவையவை செல்லும் என்று நயம்பட உரைக்கிறார் வள்ளுவர்.

**கருணை**

கண் கண்ணோட்டத்திற்கு உரியது. கண்ணோட்டத்திற்கு உரிய கண் பெற்றிருக்கும் மனிதன் கருணை காட்டுபவனாக இருக்க வேண்டும். உள்ளத்தில் எழுகின்ற கருணையை வெளிக்காட்டக் கூடியது கண். அதனால்தான் வள்ளுவரும்,

“கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள”[20]

என்று கூறுகிறார். ஐம்புல உணர்ச்சிகளும் வெளிக்காட்டக் கூடியது கண் மட்டும்தான். கருணை காட்டுவதை உணர்த்த வந்த வள்ளுவர், மண்ணோடு பொருந்தியிருக்கிற மரத்தைக் காட்டி, நீ கருணை இல்லாதவனாக இருந்தால், உன் கண்ணுக்கும் மண்ணோடு பொருந்தியுள்ள மரத்தின் கணுவுக்கும் வேறுபாடில்லை இரண்டும் ஒன்றுதான். இதனை,

“மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ஓடா தவர்”[21]

என்று கூறுகிறார் வள்ளுவர். கண்ணோட்டத்திற்குரிய கண்ணைப் பெற்றிருந்தும் அதற்குரிய தாட்சண்யம் அல்லது கண்ணோட்டம் இல்லாதவர், மண்ணோடு பொருந்தியிருக்கிற மரத்திற்குச் சமம் என்பது வள்ளுவக் கருத்து. “அருள்புரிதற்கு, அன்பு காட்டுவதற்கு வாயிலாக இருப்பன கண்கள். கண்களுக்கு அணிகலன் அன்பு காட்டுவதும், அருள் புரிவதுமேயாகும்.

இப்பண்புகள் இல்லையானால் அவை, மரத்தினோடு பொருந்தியிருக்கிற மரத்தின் கணுக்கள் போன்றனவேயாகும். மரத்தின் கணுக்கள் தோற்றத்தால் கண்கள் போன்று விளங்கும். எனினும் அவற்றிற்குப் பார்வை இல்லை, அருள்புரியும் இயல்பில்லை. அன்பு காட்டும் பண்பில்லை. கணுக்களைத் தன்னகத்தே கொண்டு மண்ணகத்தே பொருந்தியிருக்கிற மரம் மண்ணிலுள்ள ஈரத்தையும், பிற சத்துக்களையும் உறிஞ்சி வாழ்கிறது. மனித சமுதாயத்தோடு பொருந்தி, கண்ணோட்டமில்லாத கண்களைப் பெற்று நடமாடுகிற மனிதன், பிறர் பயன் அபகரித்து யாருக்கும் பயனில்லாமல் வாழ்கிறான்”(22) என்பர் சாமி.பழனியப்பன்.

பிறிதொருவிடத்தில், உலகியல் நடைபெறுவதற்குக் கண்ணோட்டம் இன்றியமையாததாகும். கண்ணோட்டம் சிறிதும் இல்லாதவர் இவ்வுலகில் இருத்தல் இந்தப் பூமிக்குப் பாரம் என்பதை,

“கண்ணோட்டத் துள்ளது உலகியல் அ∴திலார்

உண்மை நிலக்குப் பொறை”(23)

என்று வள்ளுவர் கூறுகிறார்.

மனிதன் ஒரு சமூக விலங்கு (Man is a social animal) என்பர். சமுதாயப் பிராணியாகிய மனிதனுக்கு இன்றியமையாது வேண்டுவது கண்ணோட்டம். கருணை இல்லாத நெஞ்சினர், இவ்வுலகிற்குப் பாரமேயன்றி, அவர்களால் இந்த நிலவுலகிற்குப் பயனேதுமில்லை என்பதை வலியுறுத்துகிறார் வள்ளுவர்.

**கல்லாதவன் களர் நிலம்**

வள்ளுவர் கல்வியின் சிறப்பைக் கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை ஆகிய நான்கு அதிகாரங்களில் கூறுகிறார். கல்விக்கு அடுத்த அதிகாரம் கல்லாமை ஆகும். கல்லாமையால் இன்னின்ன தீமைகள் உண்டு என்பதை விளக்குகிறார். மனித வாழ்வுக்குக் கல்வி எத்துணை

இன்றியமையாதது, எத்துணைச் சிறப்புடையது என்பதனை விளக்கும் வள்ளுவர், கல்லாதவரை, கல்வியறிவில்லாதவரை, விளையாத, பயன் தராத களர் நிலத்திற்கு ஒப்பிட்டுள்ளார்.

களர்நிலம், பார்வைக்கு நிலம் போலத் தோன்றும். நிலத்திற்குரிய பயன் தராது. விளைநிலத்தில் மக்கள் உழுது, பண்படுத்தி, விதைத்து, நீர்ப்பாய்ச்சிப் பேணிப் பாதுகாப்பர். களர் நிலத்தை அவ்வாறு பேணப்படாமல் இருந்தால் சீர் கெடும். இவ்வகையால் களர் நிலம் தனக்கும் பயன்படாமல், மற்றவர்களுக்கும் பயன்படாமல் கெட்டழிந்து போகும். அதுபோலவே கல்லாதவர் மனிதர்களைப் போலத் தோற்றமளிப்பாரே தவிர, மனிதராக மாட்டார். அவர் தமக்கும் பயன்படாமல், பிறர்க்கும் பயன்படார். எனவே கல்லாதவர்களை மற்றவர்கள் மதிக்க மாட்டார்கள். அவர்கள் களர் நிலத்திற்கு ஒப்பாவார்கள். இதனை,

“உளரென்னும் மாத்திரையர் அல்லார் பயவாக்
களரனையர் கல்லா தவர்”[24]

என்கிறார் வள்ளுவர். இவ்வாறு கல்லாதவரை களர் நிலத்தோடு ஒப்பிட்ட வள்ளுவர், கல்வியில்லாதவன் எவ்வளவு அழகுடையவனாக இருந்தாலும் அவனுடைய அழகு மண்ணால் திருத்தமுறச் செய்யப்பட்ட (பொம்மை) பாவையின் அழகினையே ஒக்கும் என்கிறார்.

அறிவுக்குப் பெருமை தருவது, நுண்பொருள்களைக் கண்டுணர்தலும் அவற்றை மறவாமையும் ஆகும். மனிதனுக்கு அழகு நலன் உடற்பொலிவு ஒரு பயனே என்றாலும், அறிவில்லாதவிடத்து அவ்வழகால் ஏதும் சிறப்பில்லை. அறிவு நலத்தோடு கூடிய அழகே சிறப்புடையது. அழகில் வழி அறிவு மதிக்கப்படலாம்அறிவின் வழி அழகு மதிக்கப்பட மாட்டாது”[25] என்பர் சாமி.பழனியப்பன்.

நுட்பமான மாட்சிமைப்பட்ட பல்வேறு நூல்களையும் ஆராய்ந்து பார்க்கும் அறிவில்லாதவனின் நல்ல தோற்றத்தோடு கூடிய அழகானது சுதையால் மாட்சிமைப்படப் புனையப் பெற்ற பாவையின் எழுச்சிக்கும் அழகுக்கும் ஈடானதே. ஆராய்ச்சியையுடைய கல்வியில்லாதவனின் அழகு மண்ணால் திருத்தமுறச் செய்யப்பட்ட பாவையின் அழகையொக்கும். அழகியராயினும், அறிவியல் வழி அவர் மதித்துப் போற்றப்பட மாட்டார். இதனை,

"நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்

மண்மாண் புனைபாவை யற்று"(26)

என்று வள்ளுவர் கூறுவது ஒப்புநோக்கத்தக்கது.

**வசையில்லா வாழ்வு**

இந்த பூமிக்குப் பாரமாய் இருப்பவர்களை வள்ளுவர் சுட்டிக் காட்டுகிறார். இதனை,

"வசையில்லா வண்பயம் குன்றும் இசையிலா

யாக்கை பொறுத்த நிலம்"(27)

என்கிறார். புகழில்லாத உடம்பைச் சுமந்த நிலமானது குற்றமற்ற வளப்பத்தையுடைய விளைச்சல் இல்லாமல் வளம் குன்றும் என்பது கருத்தாகும்.

மனிதன் புகழோடு வாழவேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாகும். வசையொழிய வாழ்பவரே வாழ்பவர் எனப்படுவர். இசையொழிய வாழ்பவர் வாழாதவர் இறந்தவர் என்று பேசுகின்றார். மனிதன் இசையோடு புகழோடு வாழ வேண்டும் என்று கருதுகிற வள்ளுவர், புகழில்லாத உடம்பைச் சுமந்த நிலம் விளைச்சல் குன்றிக் கெடும் என்கிறார். புகழ் இல்லாதவர்கள் என்று

கூறாமல் புகழில்லாத உடம்பு என்று கூறுவது, புகழில்லாத வாழ்வு வாழ்கின்றவர்கள் மீது அவருக்குள்ள அளவு கடந்த சினத்தைக் காட்டுகிறது.

**பூமிக்குப் பாரம்**

கொடுங்கோல் அரசன் கல்வியறிவு சிறிதுமில்லாதவர்களைத் தன் கொடிய ஆட்சிக்குத் துணையாகச் சேர்த்துக் கொள்வான். அந்தக் கூட்டத்தினரை யல்லாமல் பூமிக்குப் பாரம் வேறு வேண்டியதில்லை. இதனை,

“கல்லாப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது

இல்லை நிலக்குப் பொறை”(28)

என்று வள்ளுவர் எடுத்துரைக்கிறார். அரசன் தண்ணளியுடையோனாக, செங்கோலனாக, நீதி வழுவாமல் இருத்தல் வேண்டும். கல்வியறிவுடைய நல்லவர்களை அவன் தனக்கு தன் ஆட்சிக்குத் துணையாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும். அப்போதுதான் ஆட்சி சிறக்கும். நாடு செழிக்கும். அவ்வாறின்றி மன்னன் கொடுங்கோலனாக இருந்தால் அவனும் இந்தப் பூமிக்குப் பாரமாவான். அவனுக்குத் துணையாகச் சேர்ந்த, சேர்த்துக் கொள்ளப்பட்ட கல்வியறிவில்லாத கூட்டமும் இந்தப் பூமிக்குப் பாரம்தான் என்பதை வள்ளுவர் விளக்குகிறார்.

கருணை இல்லாத மனிதன் இந்த பூமிக்குப் பாரம் என்பதை மற்றொரு இடத்தில் வள்ளுவனார் விளக்குகிறார். இதனை,

“ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்

தோற்றம் நிலக்குப் பொறை”(29)

என்கிறார் பொய்யில் புலவர். செல்வத்தினை மட்டும் மற்றவர்களைவிட அதிகமாகச் சேர்ப்போம் என்று எண்ணி அதனையே மிகமிக அதிகமாகச் சேர்த்து, அதன் பயனான புகழினை விரும்பாத ஆடவர்கள் உலகில் வாழ்வது இப்பூமிக்குப் பாரமேயாகும் என்று விளக்குகிறார். உலகில் பிறந்த ஒவ்வொரு

மனிதரும் புகழ் பெற்று வாழ்தல் வேண்டுமென வள்ளுவர் எதிர்பார்ப்பது புலனாகிறது.

பூமிக்குப் பாரம் என்னும் தொடரையே, நிலத்திற்குப் பொறை என்னும் தொடராலும், அப்பொருள் தரும் பிற தொடராலும் வள்ளுவர் வழங்கியிருப்பதைக் காணலாம். சான்றாக,

அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை"[30]

"வசையில்லா வண்பயன் குன்னும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்"[31]

"கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை"[32]

"கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அ∴திலார்
உண்மை நிலக்குப் பொறை"[33]

"சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை"[34]

"ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை"[35]

என வரும் குறள்களைக் கொள்ளலாம்.

**வழுவாத சான்றாண்மை**

சான்றோர் தம் நிலையிலிருந்து வழுவக் கூடாது என்பதை வலியுறுத்த,

"சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலத்தான்

தாங்காது மன்னோ பொறை"[36]

என்கிறார் வள்ளுவர். பல நற்குணங்களும் நிறைந்த சான்றோர் தம் நிலைமையிலிருந்து குன்றுவரானால் இந்தப் பெரிய உலகமானது தன்னுடைய பாரத்தைத் தாங்க முடியாததாகி விடும் என்பது வள்ளுவக் கருத்து.

சான்றோர் தம் சான்றாண்மையிலிருந்து ஒரு சிறிதும் தவறக் கூடாது. இவர்கள் தம் தன்மையிலிருந்து குன்றினால், இந்த உலகம் தன் பாரத்தையே தாங்க முடியாமல் அழிந்துவிடும். 'இருநிலந்தான் தாங்காது' என்று வள்ளுவர் கூறுவது சிந்தனைக்குரியது. ஒரு நிலம் மண் சார்ந்த நிலப்பரப்பு. மற்றொன்று கடலுக்கடியில் உள்ள நிலம். ஆகவே தான் வள்ளுவர் இருநிலம் என்று குறிப்பிடுகிறார். சான்றாண்மையில் இருந்து விலகினால் இந்த இரு நிலமும் தாங்காது என்று குறிப்பிடுகிறார்.

**நிலவுலகம்**

மக்கள் வாழும் உலகினை உலகம், ஞாலம், வையம், நிலம், மாநிலம் என்னும் பல்வேறு பெயர்களால் வழங்குவர். வானோர் உலகம், வானுலகம், புத்ளேுலகம் என வள்ளுவர் வழங்குகின்றார். மேலுலகம், உலகம், கீழுலகம் என மூன்றாகப் பாகுபடுத்திக் காணும் போக்கினால், நாம் வாழும் இவ்வுலகு முழுவதையும் ஒரு கூறாகக் கருதியிருக்கின்றனர் என்பது தெளிவு. இந்நிலை வள்ளுவத்திலும் தெளிவாகக் காணப்படுகின்றது.

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது"(37)

புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற"(38)

அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு"(39)

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து"(40)

என்னும் குறள்களில் வரும் அவ்வுலகம், இவ்வுலகம், வையம், வானம், வையகம், வானகம், புத்தேளுலகம் எனும் சொற்டொர்களின் வழி,

வள்ளுவருக்கு இவ்வுலகம் முழுவதையும் ஒருசேரக் கருதும் எண்ணம் இருந்தமையைத் தெளிவாக விளக்குகின்றன. மேற்குறித்தச் சொற்கள், நிலவுலகின் ஒரு பகுதியைக் குறிப்பிடும் குறியீடுகளாகவும் உள்ளன. சான்றாக,

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு"(41)

"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு"(42)

"இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்"(43)

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்"(44)

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு"(45)

எனவரும் குறள்களைக் கொள்ளலாம். இவற்றின்கண் வள்ளுவரின் ஐம்புலன்களில் ஒன்றான நிலம் குறித்த கருத்துக்களை அறியமுடிகிறது.

**நீர்**

நீரை மழைநீர், ஊற்றுநீர், ஆற்றுநீர் என வகைப்படுத்துவர். வானத்தை எதிர்கொண்ட நிலப்பரப்பில் நீர் என்பது தனித்து எளிதில் வெளிப்படுவதில்லை. நீரும் நிலமும் ஒன்றையொன்று தழுவிக் கொண்டிருப்பவை. நிலத்தைத் தழுவிய நீராகிய கடல்நீர் உப்புத்தன்மை உடையது.

வானிலிருந்து மண்ணிற்கு வந்த மழைநீர் மண்ணில் பல்வேறு சூழல்களுக்குட்படும் நிலையை அடைகிறது. அவற்றுள் சூரியன் வெப்பத்தால் ஆவியாதல், காற்றினில் நீராவியாகவும், பனிநீராகவும், நீரும் நிலமும் ஒன்றாகிப் போதல் முதலான நிலைகளை அடைகின்றது. இத்தகைய நீர் மனிதர்களின் வாழ்வில் இரண்டறக்கலந்து பிரிக்க முடியாதத் தன்மையைப்

பெற்றுள்ளது. அவற்றுள் வாழ்வில் உணவிற்கும் பயிர் விளைச்சலுக்கும் நீரின் பங்கு அளப்பரியதாக விளங்குவதைப் பண்டைத் தமிழர் அறிந்திருந்தனர். அதனால் வள்ளுவரும்,

"நீரின்றி அமையாது உலகெனின் யார்யார்க்கு

வான்இன்று அமையாது ஒழுக்கு"[46]

என்று கூறுகிறார். உண்பவர்களுக்குச் சிறந்த உணவுகளை உருவாக்கிக் கொடுத்து அவற்றை உண்பவர்களுக்குத் தானும் உணவாக இருப்பது மழைநீராகும். இதனை,

"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு

துப்பாய தூஉம் மழை"[47]

என்று மழைநீரின் உன்னதத்தை உரைக்கிறார் வள்ளுவர். இதனை,

"உண்டி முதற்றே உணவின் பிண்டம்

உணவெனப் படுவது நிலத்தொடு நீரே"[48]

என்று புறநானூறு கூறுவதும் குறிப்பிடத்தக்கது.

இவ்வுலகத்தில் ஒரு பகுதி கடலாகவும், மற்றொரு பகுதி நிலமாகவும் விளங்கியதையும், நிலப்பகுதி குறைந்து கடற்பகுதி மிக்கு விளங்கியதையும், நிலப்பகுதிகள் கடலால் சூழப்பட்டிருந்தன என்பதையும் பண்டைத் தமிழர் தெளிவாக அறிந்திருந்தனர். இதனை,

"கடல்சூழ் மண்டிலம் ..."[49]

"இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து ..."[50]

"புலவுக் கடல் உடுத்த ...
மலர்தலை உலகம்"[51]

"விரிகடல் வேலி வியலகம்..."[52]
"விரிதிரை பெருங்கடல் வளைஇய உலகம்"[53]

என்ற பாடல்களின் வழி அறியலாம். வள்ளுவர் இவ்வுலகம் கடலால் சூழப்பட்டது என்பதைத் தெளிவாக அறிந்திருந்தார் என்பதற்கு,

"விரிநீர் வியனுலகம் ..."(54)

"மாறாநீர் வையம் ...."(55)

என வரும் தொடர்கள் சான்றுகளாகின்றன.

**கடலும் குறளும்**

திருக்குறளில் பிறவிப் பெருங்கடல், நெடுங்கடல், காமக்கடல் என்னும் சொற்றொடர்களும், கடல் என்னும் சொல்லும், கடலைக் குறிக்கும் நாமநீர் என்னும் சொல்லாட்சியும் இடம் பெற்றிருக்கின்றது.

**பிறவிப் பெருங்கடல்**

கடலின் அலைகள் எழுந்து விழுந்து, மீண்டும் எழுந்து விழுந்து வருவதைப் போன்றே, மனிதப் பிறவியும் மாறிமாறி வருகின்றன. கடல் அலைகளைப் போல மனிதர்கள் பிறந்து பிறந்து இளைக்கிறார்கள். அந்தப் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரைசேர விரும்பும் மனிதர்க்கு நல்லதொரு தெப்பத்தை புணையைக் காட்டுகிறார் வள்ளுவர். பிறவிப் பெருங்கடலைக் கடக்க உதவும் தெப்பம் எது? அதுதான், இறைவனின் திருவடிகள். அந்த திருவடிகளைஇடையறாது நினைத்து வழிபடுவோர் பிறவித் துன்பத்தினின்றும் விடுதலை பெறுகிறார்கள். பிறவிப் பெருங்கடலைக் கடக்கிறார்கள். இறைவனின் திருவடித் தத்துவத்தை எண்ணிப் பார்க்காதவர்கள் நினையாதவர்கள் பிறிவிப் பெருங்கடலை நீந்தாமல்கடக்க மாட்டாமல் மீண்டும் மீண்டும் பிறந்தே இளைப்பர். பிறவிப் பெருங்கடலை நீந்துவதற்கு, இறைவனின் திருவடியாகிய தெப்பமே ஏற்றதுஇயைபுடையது என்கிறார்.(56) இதனை,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்

இறைவனடி சேரா தார்"(57)

என்று வள்ளுவர் கூறுகிறார். அறக்கடலாகிய அழகிய தண்ணளியை உடைய இறைவனின் திருவடிகளாகிய தெப்பத்தை அடைந்தவர்க்கு அல்லாமல், மற்றவர்க்கு ஏனைய உலக துன்ப, இன்பங்களாகிய கடல்களைக் கடத்தல் இயலாது. இதனை,

“அறஆழி அந்தணன்தாள் சேர்ந்தார்க்கு அல்லால்

பிறஆழி நீத்தல் அரிது”(58)

என்று கூறுமிடத்து, (ஆழி, பெருங்கடல்) கடலினை உவமை காட்டியமை அறியப் பெறுகிறது.

**நெடுங்கடல்**

வான் சிறப்பு என்ற அதிகாரத்தில் எல்லையற்ற நீண்ட நெடுங்கடலை வள்ளுவர் காட்டுகிறார். இந்த உலகம் கடலால் சூழப்பட்டது என்ற அறிவியல் உண்மையை விளக்க ‘விரிநீர் வியனுலகம்’ என்றார் வள்ளுவர்.

“நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி

தான்நல்கா தாகி விடின்”(59)

கடலால் சூழப்பட்ட உலகில், மழையை உருவாக்க உதவுகிற கடலும் மழையில்லை என்றால், தன்னியல்பில் குறைந்துவிடும் என்கிறார். மனிதனுக்கு உணவாகி உதவுகிற கடல்வாழ் உயிரினங்களும் மழையில்லை என்றால் அழிந்துபடும் என்பதைக் குறிக்க தன்நீர்மை குன்றும் என்கிறார். “கடலில் நீரின் உப்புக்கும் ஓர் அளவு உண்டு. கடலில் நீரின் தடிப்புக்கும் ஓர் அளவு உண்டு. இது மாறாமலிக்க வேண்டுமானால் மேகம் கருக்கூடி கடல்நீரை அள்ளிக்கொண்டு போய் மலைகளில் பொழிந்து உப்பையும் தடிப்பையும் ஆற்றின் மூலம் ஆற்றி மறுபடியும் கடலிற் கொண்டுவந்து சேர்த்தாக வேண்டும். இன்றேல் கடல் நீரின் உப்பு அதிகமாகும். நீரின் தடிப்பும் அதிகமாகும். உயிரினங்கள் மடியும்”(60) என்று கலைக்கதிர் என்ற திங்கள்

இதழில் வந்த குறிப்பினைக் காட்டுகிறார் கி.ஆ.பெ.விசுவநாதம். உலகம் கடல் நீரினால் சூழப்பட்டதாயினும் கடல் நீர் உண்பதற்கோ, பயிர்த்தொழிலுக்கோ பயன்படுவதில்லை. அதை ஆவியாக ஏற்று நன்னீராக்கும் திறன் மழை முகிலுக்கே உரியது என்ற அறிவியல் உண்மையை அறிந்தவர் வள்ளுவர் என்பது புலனாகிறது.

**கடலினும் பெரியது**

ஒருவர் செய்த நன்றியை மறவாத பண்பு இன்றியமையாதது. தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாதிருத்தலாகும். செய்ந்நன்றி மறத்தல் கொடிய செயலாகும். "தனக்கு முன் ஓர் உதவியும் செய்யாதிருக்க ஒருவன் பிறருக்குச் செய்த உதவி அளவிடற்கரியதென்றே கூறப்படும். நன்றி என்பது நன்மை என்று பொருள்படும். செய்ந்நன்றி என்பது செய்த நன்மை என்பதாகும். நன்றி என்பது அறம் என்ற பொருளிலும் கூறப்படுவதாகும்"[(61)] என்பர்.

இன்னாருக்கு இதனைச் செய்தால், இதனால் நமக்கு இன்ன பயன் கிடைக்கும் என்று பயனை ஆராய்ந்து பார்க்காமல், ஒருவர் செய்த உதவியின் தன்மையை ஆராய்ந்து பார்க்காமல், ஒருவர் செய்த உதவியின் தன்மையை ஆராய்ந்து பார்த்தால் அவ்வுதவியினால் வருகின்ற நன்மை கடலைவிடப் பெரியது என்று கூறுகின்றார். இதனை,

"பயன்தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்
நன்மை கடலிற் பெரிது"[(62)]

என்று கடலினை உவமை காட்டி விளக்குகிறார்.

**கடல் சூழ்ந்த உலகம்**

உலகின் நிலப்பரப்பில் மூன்றில் இரண்டு பங்கினைக் கடல் சூழந்திருக்கிறது. இதனை, "கடல்சூழ் மண்டிலம்"[(63)] என்று குறுந்தொகைக் கூறுகிறது. இவ்வுலகில் எல்லா நன்மைகளையும் அடையத்தக்கவர் யாரெனில்,

பிறனுக்கு உரிமையானவளின் தோள்களைச் சேராதவனே என்று வள்ளுவர் கூறுகிறார். இதனை,

“நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பிற்

பிறர்குரியாள் தோள்தோயா தார்”(64)

என்று கூறுகிறார். கடலினை ‘நாமநீர்’ என்று கூறுகிறார் வள்ளுவர். அகலம், ஆழம், பொருளுடைமை அனைத்தும் பெற்று அளவிடப்படாததால் ‘நாமநீர்’ என்று கூறப்பட்டது. நலத்திற்கு என்பது நலக்கு என்று குறைந்து நின்றது. இக்குறட்பாவில் பிறர்க்கு உரியாள் தோள் தோயாதார் என்று கூறியதால் நன்மையடைவார்களின் நல்லுள்ளம் பெறப்பட்டது”(65) என்பர்.

**கடலும் கப்பலும்**

இடனறிதல் என்னும் அதிகாரத்தில், பகைவரை வெல்லுதற்குரிய காலமும் கருவியும் சூழலும் வாய்க்கப் பெற்றாலும் இடன் அறிதல் இன்றியமையாதது. இதற்கு, தரையில் ஓடும் தேரையும், கடலில் ஓடக்கூடிய கப்பலையும் உவமை காட்டுகிறார். தேர் கடலில் ஓடாது. அதுபோல, கப்பலும் தரையில் ஓடாது. இதனை வலியுறுத்துவதே,

“கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்

நாவாயும் ஓடா நிலத்து”(66)

என்னும் குறளின் கருத்தாகும்.

**கடல் போன்ற காமம்**

ஒத்திசைந்த அன்புடையார் மீது செலுத்தப்படுவது காதல். ஓர் ஆடவன் உணர்ச்சி மிகுதியால் ஒரு பெண்மீது செலுத்தப்படுவது காமம். இரண்டும் அன்பை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய சொற்களேயாகும். காமம் என்ற சொல்லுக்கு மெய்யுணர்ச்சி என்பது பொருள். இதனை, “மெய்யில் தீரா மேவரு காமம்”(67) என்பர் கபிலர்.

வள்ளுவர் கூறும் காமம், காதற்காமம் ஆகும். காமத்தைக் கடலோடு ஒப்பிட்டு, காமம் கடல் போன்றது என்கிறார் வள்ளுவர். காமத்துப்பாலில் ஒவ்வொரு திருக்குறளும் காதலின் உயர்நிலையை விளக்கத்தக்க உலக நிகழ்ச்சி ஒன்றில் முகிழ்த்தெடுந்து, உள்ளடங்காத இன்ப உணர்ச்சிப் பேச்சாக நின்று, ஒழுக்கமணம் வீசி, அன்புத்தேன் பிலிற்றி மலர்ந்துவரும் தமிழ்ப்பாடற்பூ ஆகும் என்று தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் வள்ளுவர் கண்ட நாடும் காமும் என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

கடல் போல் எல்லையற்ற காம நோயில் வருந்தினாலும், ஆடவனைப் போல மடலேறாமல் காதல் துன்பத்தையும் தாங்கிக் கொண்டிருக்கிறாளே பெண், அவளைப் போல மிக்க தகுதியுடைய பிறப்பு வேறொன்றுமில்லை என்று பாராட்டுகின்றார். இதனை,

"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்

பெண்ணின் பெருந்தக்கது இல்"(68)

என்கிறார். பனை ஓலையினால் குதிரை போல் அமைத்து அதன்மீது காதலியை விட்டுப் பிரிந்திருக்கும் காதலன் தனது வருத்தத்தினைப் பலரும் அறியச் செய்வதை 'மடன்மா ஏறல்', 'மடலேறுதல்' என்று கூறப்படும்.

**காமக்கடல்**

காமத்தைக் கடலாக உருவகிக்கிறார் வள்ளுவர். அளவற்ற காமத்தால் வருந்தி மெலிகிறாள் தலைவி. காம நோயாகிய கடல் இருக்கின்றது. ஆனால் அதனை நீந்திக் கரைசேர்வதற்கான கடந்து செல்வதற்கு வேண்டிய பாதுகாப்பான தெப்பம் இல்லையே என்று கூறி வருந்துகிறாள். இதனை,

"காமக் கடல்மன்னும் உண்டே அது நீந்தும்

ஏமப் புணைமன்னும் இல்"(69)

என்று கூறுகிறார் வள்ளுவப் பெருந்தகை. காமமாகிய கடலை நீந்துவதற்கு அரிதின் முயன்றும் அதன் கரைகாண முடியாமல் வருந்தும் தலைவியின் நிலையை எடுத்துரைத்துள்ளார் வள்ளுவர்.

கடலினும் பெரியது காமநோய் என்பதை, கண்விதுப்பு அழிதல் என்ற அதிகாரத்தில் பதிவு செய்துள்ளார் வள்ளுவர். தலைவனைக் கண்டு அவனிடம் காதல் கொண்டாள் தலைவி. கடலும் ஒப்பில்லை என்று சொல்லும் படியான காமநோயால் அவள் வருந்துகிறாள். அவள் அவனைக் கண்டதால்தானே அவன் மீது காதல் கொள்ள நேர்ந்தது. அவனை அவளுக்குக் காட்டியவை அவள் கண்கள் தானே. எனவே, நான் வருந்துவதோடு, இந்தக் கடலும் ஒப்பில்லை என்று கூறும்படியான பெரிய காமநோயை எனக்குத் தந்த கண்கள் அத்தீவினையாலே தாமும் தூக்கமில்லாமல் துன்புறுகின்றன. காமநோய், தலைவனைக் கண்டமையால் வந்தது. காமநோய்க்கு இந்தக் கண்களே காரணமாயின என்கிறாள். இதனை,

"படலாற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக்

காமநோய் செய்தஎன் கண்"[(70)]

என்று கூறுகிறார். விதும்பல் என்பது விருப்பத்தால் விரைதலாகும். கண்கள் தலைவனைக் காணும் விருப்பம் மேலிட்டு விரைவதைக் குறிப்பதாகும். கண்கள் அழுவது எதற்கு என்ற கேள்வியினை அவள் கேட்கிறாள். ஏனெனில் முதலில் அவைகள் காட்டியதால்தான் அவள் நாயகனைக் காண முடிந்தது. அப்படிச் செய்தவை இப்போது அழுவது அவளுக்கு வியப்பாக இருக்கின்றது"[(71)] என்பர்.

காதல் கொண்ட தலைவி தன் நெஞ்சத்தினைப் பார்த்து நொந்து கொள்கின்றாள். அன்பு இல்லாதவரிடம் உன் மிகுந்த துன்பத்தைச்

சொல்கின்றாய். அதைவிட நீ எளிதாகக் கடலைத் தூர்ப்பதற்கு முயற்சி செய்யலாம் என்று கூறுகிறார். இதனை,

"உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்

செறாஅய் வாழிய நெஞ்சு"(72) என்று கூறுகிறார்.

**ஆறு**

காமமாகிய கடும்புனலை நீந்திக் கரை காணாமல் தவிக்கின்றேன். இந்த நள்ளிரவிலும் யான் ஒருத்தியே தூங்காமல் வருந்தும்படி உள்ளேன் என்கிறாள் தலைவி. இதனை,

"காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்

யாமத்தும் யானே உளேன்"(73)

என்று கூறுகிறார் வள்ளுவர்.

ஆற்றுநீர் மிக வேகத்துடன் செல்வதாகும். அது நீந்தி மகிழ்வதற்குரிய இடமாகும். அதுவே நீர் பெருகி பெரு வெள்ளமாய் கரை தெரியாமல் ஓடும் போது, என்னிடமுள்ள நாணம், ஆண்மை என்ற படகுகளைக் காமம் என்னும் கடும் வெள்ளம் அடித்துச் சென்றுவிட்டது. இதனை,

"காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு

நல்லாண்மை என்னும் புணை"(74)

என்று குறிப்பிடுகிறார் வள்ளுவர். சில வேளைகளில் ஆற்றுநீர் பெருகும் போது, நீந்துபவரை இழுத்துச் செல்லும் இயல்பினது. வெள்ளம் இழுத்துச் செல்வதை அறிந்திருந்தும் அதனுள் பாய்கின்றவரைப் போல் ஊடுதல் பயனில்லை என்பதை அறிந்தும் ஊடுவதால் என்ன பயன்? என்று வினவுகிறாள் தலைவி. இதனை,

"உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்

பொய்த்தல் அறிந்தென் புலந்து"(75)

என்று வள்ளுவர் கூறுகிறார். வெற்று ஊடல் கொள்வதில் யாதொரு பயனுமில்லை என்பதை, இதனை,

> "புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை
> அதுபுலந் துறைதல் வல்லி யோரே
> செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்"(76)

என்ற அகநானூற்றுப் பாடல்வழி அறியலாகிறது. காமத்திற்கு இன்பமான ஊடலும், சில வேளைகளில் பயனற்றத் தன்மையைக் கொண்டிருக்கும் என்பதை உணர்த்த வந்த வள்ளுவர் அதற்கு 'நீரில் பாய்பவரை' காட்டிருப்பது சிறப்பாக அமைந்துள்ளது.

**ஊருணி**

பண்டைத் தமிழர்கள் செயற்கை நலன்கள் செறிந்த வாழ்க்கையை விரும்பாமல், இயற்கை நலன்கள் நிறைந்த வாழ்க்கையை வாழ்ந்துள்ளனர். இயற்கையோடு இயைந்த வாழ்க்கையினை வள்ளுவரும் மேற்கொண்டுள்ளார் என்பதற்கு ஊரின் நடுவே இருக்கும் ஊருணியையும், ஊர் நடுவே பழுக்கும் மரங்களையும், வயல்களில் பறிக்கின்ற களைகளையும், மற்றும் இவைபோன்ற பொருள்களையும் உவமையாக எடுத்துத் தம் பாக்களில் பதிவு செய்துள்ளமையே சான்றாகும்.

ஊர்மக்கள் அனைவரும் உண்பதற்கு நீர் நிறைந்திருக்கும் இடத்தைக் குறிக்கும் ஊருணி என்ற சொல் குறளில் இடம்பெற்றுள்ளது. இச்சொல் சங்க இலக்கியத்தில் எங்கும் இடம்பெறவில்லை. ஊருநீர் என்ற சொல் மணிமேகலையிலும் ஊருண்கேணி என்ற சொல் குறுந்தொகையிலும் (399), புறநானூற்றிலும் (392) இடம் பெறுகின்றன. ஊருணி என்பது பாண்டி நாட்டு வழக்கு. இப்போதும் இச்சொல் செட்டிநாட்டு மக்களிடம் வழக்கில் உள்ளது.

ஒப்புரவு என்பது உலக நடை, ஈகை, உபகாரம் என அறியப்படுகிறது. ஊரில் உள்ள மக்களுக்குப் பயன்படுவதற்காக அமைந்த நீர்நிலை, ஊருணி, குளம் என்று வழங்கப்படுகிறது. ஊரின் நடுவே அமைந்துள்ள ஊருணியில் நிறைந்து நிற்கும் நீர், ஊரில் உள்ளார் எல்லோருக்கும் பயன்படுவதை உவமையாகக் கொண்டு, உலகினரால் விரும்பப்படும் பேரறிவாளனிடத்தில் உள்ள செல்வம் எல்லோருக்கும் பயன்படும் என்னும் உயரிய உண்மையை வள்ளுவர்,

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்

பேரறி வாளன் திரு"[77]

என்று கூறுகிறார். உயர்ந்த அறிவுடையானிடத்திலுள்ள செல்வம், ஊருணியில் நிறைந்து நிற்கும் நீர் போலாகும். "ஊருணியெண்ணும் பெயரே ஊரிலுள்ளார் உண்பதற்காக அமைந்த நீர்நிலையென்று பொருள்படுகின்றது. ஊர் நடுவே உள்ள குளத்தில் நீர் வேட்கையால் வருந்தும் மக்கள் நீரை அள்ளி உண்டு தமது நீர்விடாய் தணித்துக் கொள்ளுதல் போல, வறுமையால் வருந்தும் மக்கள் செல்வரிடம் சென்று பொருள் பெற்றுத் தம் வறுமை நோயை நீக்கிக் கொள்வார்கள்"[78] என்பர் ரா.பி.சேதுபிள்ளை.

**மணற்கேணி**

மணற்பாங்கான இடத்தில் உள்ள கிணற்று நீர். (கேணிகிணறு) தோண்டும் அளவிற்கேற்பச் சுரக்கும் தன்மையது. அறிவின் வளர்ச்சியினைத் தெளிவுபடுத்துவதற்காக வள்ளுவர் மணற்கேணியினை உவமை காட்டியுள்ளார். இதனை,

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்

கற்றனைத் தூறும் அறிவு"[79]

என்று கூறுகிறார்.

மணற்கேணியும் ஊற்றுநீராகும். ஊற்றுநீர் இறைக்க இறைக்க ஊறுவதாகும். இறைப்பவர்க்கு ஊற்றுநீர் போல் காமம் வருகின்றதென்று தலைவி கூற்றாகக் கூறுகிறார் வள்ளுவர். இதனை,

“மறைப்பேன்மன் யானி∴தோ நோயை இறைப்பவர்க்கு

ஊற்றுநீர் போல மிகும்”(80) என்கிறார்.

**குளம்**

மக்களின் பயன்பாட்டிற்காக உள்ள குளமானது நான்கு கரைகளை உடையதாக இருத்தல் வேண்டும். கரையுள்ள குளத்தில்தான் நீரானது தேங்கி நிற்கும். அதுபோல, சுற்றத்தாருடன் மனம் கலந்து பழகாதவனுடைய வாழ்வு, கரையில்லாமல் இருக்கும் குளத்தின் நீர் வீணாக அழிவது போலாகும். இதனை,

“அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்

கோடின்றி நீர்நிறைந் தற்று”(81)

என்கிறார். சுற்றத்தாரின் பெருஞ் சிறப்பினைக் காட்டுவதற்காக, கரையின்றி நீர் நிறைந்த குளத்தினை உவமை காட்டியுள்ளமை அறியப் பெறுகிறது.

சுற்றத்தாருடைய பெருமையைக் கூறிய வள்ளுவர், சுற்றத்தாரின் இயல்புகளும் துன்பம் தருமானால் தீயனவேயாகும் என்பதற்கும் நீரினை எடுத்தாள்கிறார். இதனை,

“நிழல் நீரும் இன்னாதஇன்னா தமர்நீரும்

இன்னாவாம் இன்னா செயின்”(82)

என்று கூறுகிறார். ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டியனவான நீரும் நிழலும் முதலில் இனியவேனும் பின் நோய் செய்வனவாகும். அதுபோல, சுற்றத்தாரும் உட்பகையாதற்கு உரியவர்கள் என்பதை விளக்குகிறார்.

**இரவு**

மானத்தினை அழிக்கும் இரவுக்கு, அதாவது யாசிக்கும் பழக்கத்திற்கு அஞ்ச வேண்டும் என்பதைக் கூறுவந்த வள்ளுவர், உயிர் காக்கும் பொருட்டு நீரினைக்கூட யாசகம் பெறுதல் கூடாது என்கிறார். “இரவு என்பது யாசித்தல் என்பதாகும்.”(83) என்பர். இதனை,

“ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்கு

இரவின் இளிவந்தது இல்”(84)

என்கிறார். பசுவிற்காகக்கூட நீரினை யாசகம் கேட்டால் அவனுடைய நாவிற்கு அது இழிவினைத் தரும் என்பது வள்ளுவக் கருத்து.

**ஊக்கமுடைமை**

நீர்ப்பூக்களின் தண்டானது நீர் நிலையில் உள்ள நீரின் ஆழத்தின் அளவுக்கு ஏற்பவே இருக்கும். அதுபோல மக்களின் உயிர்வு அவர்களுடைய ஊக்கத்தின் அளவாகவே இருக்கும். இதனை,

“வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்

உள்ளத் தனையது உயர்வு”(85)

என்ற குறட்பாவின் மூலம் நீரினை மனிதர்களின் உள்ளத்தோடு ஒப்புமை கூறியுள்ளார். இதனால், இயற்கை மீது வள்ளுவர் கொண்ட ஈடுபாட்டினைக் காணமுடிகிறது.

**தீ**

தீ சுடராகவும் பெரும் நெருப்பாகவும் அறியப்படும். திருக்குறளில் தீ குறித்த செய்திகள் பின்வருமாறு:

**தீப்புண்:**

தீப்புண், தீயினால் ஏற்பட்ட புண் என விரியும். தீயினால் ஏற்பட்ட புண் புறத்தே வடு இருந்தாலும் உள்ளே ஆறிவிடும். ஆனால் நாவினால் சொன்ன கடுஞ்சொல் நெஞ்சிலே தங்கி வடு போல் ஆறாமல் இருக்கும். இதனை,

"தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே

நாவினாற் சுட்ட வடு"(86)

என்கிறார். தீயினாற் சுட்ட புண்ணையும் நாவினாற் சுட்ட வடுவையும் கூறிப் போந்த வள்ளுவனார், தீயினும் தீச்சொல் கொடிது என்றும் விளக்குகிறார். "ஒருவன் வீட்டில் தீ வைக்கிறான் என்றால், அச்செயலால் அந்த வீடு மட்டுமே எரிகிறது. அத்தீயை வைத்தவன் எரியாமல் தப்பித்துக் கொள்கிறான். தீ வைத்தவனின் கையும் உள்ளமும் எரிவதில்லை. தீப்பிடித்த வீடும் எக்காலத்துக்கும் எரிவதில்லை. குறிப்பிட்ட தன் ஆற்றலுக்கு உட்பட்ட பொருட்களை மட்டுமே எரித்தொழிக்கும். ஒருவன் செய்யும் தீச்செயல் அப்படியன்று. அவன் முதலில் தீமை செய்ய நினைக்கிறான். அவன் மனம் கெடுகிறது. தீமையைச் செய்கிறான். உடல் கெடுகிறது. அவன் செய்கின்ற தீச்செயல் எக்காலத்தும் எவ்விடத்திலும் தீமை பயக்கிறது. தீ, ஒருபால் மட்டுமே தீமை பயக்கிறது. தீச் செயலோ இருபாலும் தீமை பயக்கிறது"(87)என்பர்.

**பேரெரி**

இன்னாச் செயலைப் பெரு நெருப்பாக்கிக் காட்டுகிறார் வள்ளுவர். பெருநெருப்பில் தோய்வது போன்ற துன்பத்தை ஒருவன் செய்த போதிலும் அவன்பால் கோபப்படாமல் இருப்பது நல்லது. இதனை,

"இணர்எரி தோய்வன்ன இன்னா செயனும்

புணரின் வெகுளாமை நன்று"(88)

என்று கூறுகிறார் வள்ளுவர். குற்றம் வருவதற்கு முன்பே, வராமல் காத்துக் கொள்ளாதவனுடைய வாழ்க்கை, நெருப்பின் முன்னே உள்ள வைகோல் போர் போல் ஆகிவிடும். இதனை,

"வருமுன்னர் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்

வைத்தூறு போலக் கெடும்”[89]

என்று கூறுகிறார். வருமுன் காத்தலே நலவாழ்வின் அடிப்படைக் குறிக்கோளாகும். இன்றைக்கு உலகெங்கும் ‘Preventive Medicine’ என்ற பெயரில் இதைத்தான் வலியுறுத்தியிருக்கிறார்கள். குற்றம் கடிதல் அதிகாரத்தில் இடம்பெறும் வருமுன்னர்க் காத்துக் கொள்ளாதான் வாழ்க்கை கொழுந்து விட்டெரியும் தீயின் முன்வைத்த வைக்கோல் போலக் கருகிச் சாம்பலாகும் என்ற எச்சரிக்கைக் குரலும், வரக்கூடிய ஒன்றை அறிந்து, அதனின்றும் தம்மைக் காத்துக் கொள்ளும் அறிவுடையார்க்கு எந்நாளும் துன்பமில்லை என்னும் உறுதிப்பாட்டோடு கூடிய நம்பிக்கையும் காப்பின் இன்றியமையாமையை வாழ்வின் அனைத்துப் பரிமாணங்களுக்குமாய் வலியுறுத்துகின்றன.

சினம் கொள்பவர் பிறரை வருத்துவதுடன் தானும் கெடுவர். கோபமாகிய கொடிய நெருப்பு சினமுற்றரோரையே அழிப்பதோடு, அவர் வீடுபேறு அடையத்தக்க வழிகளையும் அடைத்துவிடும். இதனை,

“சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்

ஏமப் புனையைச் சுடும்”[90]

என்று கூறுகிறார் வள்ளுவர்.

**தீ எச்சம்**

செய்யும் செயலையும், ஒழிக்கும் பகையையும் குறையாக வைக்கக் கூடாது. ஆராய்ந்தால் இவையிரண்டின் குறை தீயின் தீமையைப் போல பெருகி பெருங்கேடாய் அமைந்துவிடும். இதனை,

“வினைபகை யென்றிரண்டின் எச்சம் நினையுங்கால்

தீ எச்சம் போலத் தெறும்”[91]

என்று வள்ளுவர் கூறுகிறார். சிற்ர்களில் குளிர்காலத்தில் தீக்காய்வார்கள். அப்படி அவர்கள் தீக்காயும் போது, அளவுக்கு மீறி நெருங்கிவிட்டால், தீ அவர்களைச் சுட்டு வருத்தும். அத்தீயினால் அவர்கள் தாக்குதலுக்கு ஆட்படுவார்கள். இவ்வாறு சுடுதலும், குளிர்தலும் இன்றி குளிர்காய வேண்டுமெனில், அதிகமாக அணுகாமலும், அதிகமாக அகலாமலும் அமர்ந்து குளிர்காய வேண்டும். அப்போதுதான் அவர்களுக்குரிய பயனும் இன்பமும் கிடைக்கும். இதனை வள்ளுவர்,

"அணுகாது அகலாது தீக்காய்வர் போல்க

இகல்வேந்தர்ச் சேர்ந் தொழுகுவார்"(92)

என்று கூறுகிறார். விரைவில் கோபங்கொள்ளும் மன்னரைச் சார்ந்து வாழ்கின்றவர் அவரை மிக நீங்காமலும், மிக அணுகாமலும் நெருப்பில் குளிர்காய்கின்றவர்களைப் போல இடை நிலத்தில் இருக்க வேண்டும் என்று கூறுகிறார். குணக்கேடர்களான மன்னர்களைச் சேர்ந்தொழுகும் அமைச்சர்கள், அகலாது, அணுகாது தீக்காய்கிறவர்கள் போல இருக்க வேண்டும் என்று எச்சரிக்கிறார்.

**நீருள் நெருப்பு**

தீ முரணிய நீரும் என்பர். நீரின் இயல்பும் நெருப்பின் இயல்பும் முற்றிலும் முரண்பட்டன. நெருப்பை அவிக்கும் பேராற்றலும் நீருக்கு உண்டு. நீரில் மூழ்கியவனைத் தீப்பந்தம் கொண்டோ, விளக்கினைக் கொண்டோ தேடுதல் முடியாது. அதுபோல, கள்ளுண்டு மயங்கியவனைக் காரணம் காட்டித் தெளிவித்தல் முடியாது என்று விளக்குகிறார். இதனை,

"களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்

குளித்தானைத் தீத்துரீஇ யாற்று"(93)

என்பர் வள்ளுவர்.

**சுடாத நெருப்பு**

தீயைக் காட்டிப் பல்வேறு நெறிமுறைகளைக் காட்டிய வள்ளுவர் சுடாத நெருப்பினையும் காட்டுகிறார். “நெருங்கினாற் சுடும் நீங்கினால் யாதும் செய்யாது. இது யாருங் காணும் புறத்தீயின் இயல்பு. யான் கண்ட இவள் காமத்தீயோ நெருங்குதொறும் குளிரும் நீங்குதொறும் சுடும். இப்புதிய அகத்தீ இவளொருத்திக்கு மட்டும் யாண்டுப் பிறந்தது? எனத் தலைவன் வியக்கிறான்”[94] என்பர் வ.சுப.மாணிக்கனார்.

நெருப்புச் சுடும். தீ தன் இயல்பினை மாற்றிக் கொள்ளும் பண்பினை மணிமேகலையில் ஆதிரையின் கற்புக் காட்டி நிற்கும். நெருப்பு தன்னைத் தொடுவாரைச் சுடும். தூர விலகியோரை எதுவும் செய்யாது. நெருப்பு, நெருங்கினால் குளிர்ச்சியாக இருக்கிறது. நீங்கினால் சுடுகின்றது. இத்தகைய புதுமையான தீயை இவள் எங்கிருந்து பெற்றாளோ? இதனை,

“நீங்கின் தெஉம் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்”[95]

என்கிறார் பொய்யாமொழிப் புலவர். ‘தீயாண்டுப் பெற்றாள்’ என்று அவள் கூறுவது அவனுடைய மனோ நிலையினைப் புரிந்து கொள்ளச் செய்கின்றது.

**காமத்தீ**

பொதுவாகத் தீயை அவித்தொழிக்க வேண்டுமெனில், அதிலே நீரைக் கொட்ட வேண்டும். நீரைக் கொட்டாமல் நெய்யைக் கொட்டினால் தீ பற்றி எரியவே செய்யும். களவொழுக்கம் மேற்கொண்ட காதலர்களின் உறவினை ஊரார் அறிந்து தூற்றுகின்றனர். அவ்வாறு ஊராரின் தூற்றலால் காமத்தை ஒரு நாளும் அடக்கிவிட முடியாது. அது நெய்யை ஊற்றி நெருப்பை அணைத்துவிடலாம் என்பதைப் போன்றது என்கிறாள் தலைவி. “களவொழுக்கத்தில் வாழும் காதலர்களைப் பற்றி ஊரார் அறிந்து கொள்ளும்

நிலைமை உண்டாகி விட்டது. பலர் பலவாறாகத் தூற்றிப் பேசுகின்றனர். தூற்றிப் பேசுவது அலர் என்று குறிப்பிடப்பட்டது. இப்படித் தூற்றிப் பேசுகிற பேச்சு காதலர்களுக்கும் அறிவுறுத்தப்படுகிறது. ஊரார் எடுக்கின்ற அலரினால் அவர்களின் காதல் பிணைப்பினை நிறுத்தவோ தடுக்கவோ முடியாது. அப்படித் தடுத்து விடுவோம் என்று நினைப்பது, நெய்யினால் நெருப்பினை அணைத்து விடுவோம் என்று கூறுவது போன்றதேயாகும்.''(96) என்கிறார் திருக்குறளார் வீ.முனுசாமி. இதனை,

"நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்''(97)

என்ற குறளால் காதலர்களின் நாடகத்தை அரங்கேற்றுகிறார் வள்ளுவர்.

மாலைப் பொழுது காதலர்களுக்கு வருத்தத்தைத் தருவதாகும். மயக்கும் மாலைப் பொழுதில் ஆயர்கள் தங்கள் கால்நடைகளை இல்லத்திற்கு அழைத்துச் செல்லும் போது, குழல் ஊதிக் கொண்டுச் செல்வார்கள். குழலோசைக் கேட்டவுடன் மாலை வந்ததை அறிந்து வருத்தமடைகிறாள் தலைவி. இதனை,

"அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை''(98)

என்று கூறுகிறார். ஆயனுடைய புல்லாங்குழல், (அழல்) நெருப்பைப் போல வருத்தும் மாலைப் பொழுதிற்குத் தூதாகி என்னைக் கொல்லும் படையாக வருகின்றது என்கிறாள் தலைவி.

**தீயினும் கொடிது**

காதல் நோயைத் தீ என்று சொல்லுகின்றார்கள். என்னைப் பொறுத்தவரை அது தீயன்று தீயினும் கொடியதாக உள்ளது. தொட்டால் தானே தீ சுடுகிறது. அதைத் தொடாமல் விலகியிருந்தால் சுடுவதில்லை.

ஆனால் இந்தப் பொல்லாத காதல்போல், விலகினாரைச் சுடுகின்ற ஆற்றல் தீயினுக்கில்லை. அப்படியிருக்கக் காமநோயை எப்படித் தீ என்று கூறமுடியும்? தீயினும் கொடியதன்றோ இந்தக் காம நோய் என்கிறாள். இதனை வள்ளுவர்,

"தொடிற்சுடின் அல்லது காமநோய் போல

விடிற்சுடல் ஆற்றுமோ தீ"[(99)]

என்கிறார். நெருப்பு தன்னைத் தொட்டால் சுடுமே அல்லாமல் காமநோயைப் போல் தன்னைவிட்டு நீங்கிய போது சுட முடியுமோ? என்பது வள்ளுவக் கருத்து.

**தீயும் காதலும்**

பரத்தையின் பிரிவால் வருத்தமுற்று, வாயில் மறுக்க வேண்டும் என்று நெஞ்சு கூறுகிறது. அதனால் அவனோடு ஊட வேண்டும் என்று இருப்பேன். ஆனால் கொள்கையற்ற நெஞ்சு அவனைக் கண்டதும் கூடுவேன் என்று, ஊடல் உறுதியற்றதாய் விடுகிறது. இதனை,

"கடவுபு கைத்தங்கா நெஞ்சு என்னும் தம்மொடு

உடன் வாழ் பகை உடையார்க்கு"[(100)]

என்று கலித்தொகைத் தலைவி கூறுவது நோக்கத்தக்கதாகும். இதனை,

"நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ

புணர்ந்தூடி நிற்பே மெனல்"[(101)]

என்கிறார் வள்ளுவர். தீயில் கொழுப்பை இட்டாற் போல உருகும் நெஞ்சை உடையவரான மகளிர்க்கு இசைந்து ஊடி நிற்போம் என்று ஊடும் தன்மை உண்டோ என்பது வள்ளுவக் கருத்தாகும். காதலனைத் தீயாகவும், காதலியை அத்தீயிடையிட்ட கொழுப்பாகவும் கற்பனை செய்திருப்பது அழகியலாகும். இவ்வாறு வள்ளுவர் ஐம்பூதங்களின் ஒன்றான தீயையும், தீயின் இயல்புகளையும் சித்திரித்துள்ளார்.

**காற்று (வளி)**

பழவினை என்னும் இயற்கையினாலும், வேறு காரணங்களினாலும் மக்கட்கு வாதம் முதலிய பிணிகள் வருவதுண்டு. பழவினையால் வருவன தீராத நோயாக இருத்தலும் உண்டு. எனவே தீர்க்கப்படும் நோய் அனைத்திற்கும் வழிவகையினைப் பொதுப்படக் கூறுகின்றனர். உணவு முதலியவற்றால் நோய்கள் வருவன உண்டு என்பதாகும். உணவும் செயல்களும் அவனவன் அளவுக்கு மீறி இருந்தால் நோயுண்டாகும். இதனை,

“மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்

வளிமுதலா எண்ணிய மூன்று”[(102)]

என்கிறார் வள்ளுவர். ஒருவனுடைய உணவும் செயல்களும் அளவுக்கு மேல் கூடினாலும் குறைந்தாலும் மருத்துவ நூலோர் வகுத்த வாதம் (காற்று), பித்தம், கபம் முதலிய மூன்றும் நோயை உண்டாக்கும் என எச்சரிக்கின்றார் வள்ளுவர்.

காமம் உயிரினங்களுக்கு இயற்கையாக எழும் இயல்புணர்ச்சியாகும். அது மலரைவிட மென்மையானது. நினைத்த போது களிப்படைதலும், மகிழ்ச்சி அடைதலும் கள் மயக்கத்திற்குக் கிடைக்காத இன்பம் காமத்திற்கு உண்டு. அத்தகைய காம இன்ப நுகர்வின் போது காதலர்க்கு இடையே காற்று புகுந்து பிரிக்க முடியாத அளவிற்குக் கட்டித் தழுவுதல் இன்பம் தருவனவாகும். இதனை,

“வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை

போழப் படாஅ முயக்கு”[(103)]

என்று வள்ளுவர் கூறுகிறார். ‘வளியிடை போழப்படாஅ முயங்கு’ என்று கூறி இருப்பது சிந்தனைக்குரியதாகும். இவ்வாறு வளி என்ற சொல்லாட்சியை இரண்டு குறட்பாக்களில் மட்டும் பயன்படுத்தியுள்ளார் வள்ளுவர்.

**வானம்**

மழையைத் தருவதினால் வானம் சிறப்பானது என்ற காரணத்தைச் சொன்னவர் வள்ளுவர். 'வான்நோக்கி வாழும் உலகம் ' (குறள்:542) என்பது வள்ளுவரின் அசைக்க முடியாத நம்பிக்கை ஆகும். மழையை விண்ணகம் வழங்கவில்லையானால் நாட்டில் தானம், தவம், மனித வாழ்வு இவையனைத்தும் சிறப்புற நடத்துவதற்கு இயலாது, எனவே தான் ஐம்பூதங்களுள் ஒன்றாக வானத்தினையும் கருதியுள்ளனர். இதனை,

"மண்ணின் மிசைவான் பொய்த்து நதிகள் நம்பி

மன்னுயிர்கள் கண்சாம்பி உணவுமாறி

விண்ணவர்க்கும் சிறப்பில் வரும் பூசையாற்றா

மிக்க பெரும் பசியுலகில் விரவக் கண்டு"

என்று தொண்டர் புராணம் எடுத்துரைக்கிறது."[104] இருவகை அறங்களான இல்லறத்தைச் சிறப்பிக்கும் தானமும், துறவறத்தைச் சிறப்பிக்கும் தவமும் வானின்று பெய்யும் மழை இல்லையின்றேல் நடைபெறாது என்கிறார் வள்ளுவர்.

**வானமும் வாழ்க்கையும்**

வையத்து வாழும் உயிர்களை வானம் பொழிந்து வாழ்விக்கும் வகைமையைச் சங்க இலக்கியங்கள் உரைக்கின்றன. இதனை,

"வறங்கூர் வானத்து வள்ளுறைக் கலமரும்

புள்ளிற் கதுபொழிந் தாங்கு"[105]

"உலகம்

கயங்கண் அற்ற பைதறு காலைப்

பீளொடு திரங்கிய நெல்லிற்கு

நள்ளென் யாமத்து மழைபொழிந்தாங்கே"[106]

என்ற சங்கப் பாடல்களின் வழி அறியலாம். வானத்தையும் வாழ்க்கையையும் ஒருங்கிணைத்து வாழ்ந்த சங்கத்தமிழர் வழி வள்ளுவரும் அதனை ஒப்பிட்டுள்ளார். ஒருமித்த காதலர் ஒருவர் மற்றவர்க்குச் செய்யும் கருணையானது, உயிர் வாழ்கின்றவர்களுக்கு வானத்தில் இருந்து பொழியும் மழையானது அளவறிந்து பெய்தலைப் போலாகும். இதனை,

"வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி"(107)

என்று வள்ளுவர் கூறுகிறார்.

**வான் சிறப்பு**

வள்ளுவர் வான்சிறப்பைக் கடவுள் வாழ்த்துக்கு அடுத்தபடியாக வைத்தார். ஆயினும் கடவுளுக்கும் அச்சிறப்புள்ள வானுக்கும் (மழைக்கும்) என்ன தொடர்பு என்பதை அவர் தெளிவாகக் கூறவில்லை. உரையாசிரியர்களே இவ்விரண்டையும் தொடர்புபடுத்த முயன்றனர். 'கடவுளது ஆணையான் உலகமும், அதற்கு உறுதிப் பொருளாகிய அறம், பொருள், இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையின் சிறப்புக் கூறுதல்' எனப் பரிமேழகர் வான்சிறப்புக்கு விளக்கம் தருகிறார். வான் சிறப்பாவது மழையினது தலைமை கூறுதல். இது, கடவுட் செய்கைத்தாகலான் அதன்பிற் கூறப்பட்டது என்றார் மணக்குடவர். பூலோகத்திலுள்ள தர்ம தானஞ் செய்யும் போது மழையின்றி நடவாது அங்ஙனம் நடக்கில் வான்சிறப்பு வேண்டும் என்றவாறு எனப் பரிதியார் கடவுளுக்கும் மழைக்கும் உள்ள தொடர்பைக் குறித்து யாதும் கூறாது மழைக்கும் அறத்துக்கும் உள்ள தொடர்பையே கூறினார். கடவுளை (அல்லது தேவர்களை) வழிபடுவோர் இருக்கும் நாட்டில் மழை பெய்யும் என்பது காலிங்கர் கருத்து. இனி இப்படி அருட்பெருங் கடவுளரை வழிபட்டொழுகும் நன்னெறியார் உறையுந் தேயத்து மழை

வளங்குன்றாது வாயப்புடைத்தாம் என்பதனாலும், மற்றிவர் முதலாயினார் யாவர்க்கும் மழை இன்றியமையாமையாலும், மற்றிதன் பின்னரே மழை பெய்தற் சிறப்பினை யறிவிக்கின்றது மேலையதிகாரம் என அவர் இரு அதிகாரத்திற்கும் தொடர்பு கூறினார்.

இயற்கை தன் உயிராகிய கடவுளை உணர்த்துதற்குக் கருவியாக நின்று துணை செய்வது என்றும், இயற்கை கடவுளின் உடலாதலால், கடவுள் வாழ்த்துக்குப் பின்னை இயற்கையை வாழ்த்துவது அறம் என்றும் திரு.வி.க கூறினார். இறைவனின் கருணையினாலேயே மழை பொழிகிறது என்பது அவரின் கருத்தாகும்.

கா.அப்பாதுரை தமது மணிவிளக்கவுரையில், கடவுள் வாழ்த்து அதிகாரத்தின்பின், மழையைக் கடவுளாக உருவகித்து, அம்மழை உருவில் கடவுள் வாழ்த்தைத் தொடர்வது வான்சிறப்பு என்ற இவ்வதிகாரம் என்கிறார். மேலும், இயற்கையில் மழையும் மக்கள் வாழ்வில் காதலும் ஆன்மீக உலகில் கடவுளின் கருணையும் நிகராகும் எனக் கொண்டு ஒவ்வொரு குறளின் உரையிலும் இம்மூன்றையும் ஒன்றுக்கொன்று உவமையாக்கி விளக்கம் தந்தார் என்கிறார்.

கடவுளரை வழிபட்டால்தான் வான்மழை பெய்யும் என்பது உரையாசிரியர்களின் கூற்றாகும். ஆனால், கடவுளரை நினைப்பதற்கும், வணங்குதற்கும், வழிபாடு நடத்துவதற்கும் வான்மழை இன்றியமையாதது என்பதை வள்ளுவர் உறுதிசெய்கிறார். மழையின் பொருட்டு நோன்பையோ வழிபாட்டையோ இயற்றுக என வள்ளுவர் கூறவில்லை. கடவுள் வாழ்த்துக்கு அடுத்தபடியாக வான்சிறப்பு வைக்கப்பட்டுள்ளது. வழிபாட்டினால் மழை பொழிகிறது என்று கூறுவதற்குப் பதிலாக மழை பொழிவதனாலே வழிபாடுகளனைத்தும் நடக்கின்றன என்றார் வள்ளுவர். இதனை,

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்

வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"(108)

என்றே கூறுவது நோக்கத்தக்கது. "இயற்கையில், மனித வாழ்வின் அடிப்படைகளைக் கண்ட வள்ளுவர் அதே அடிப்படையை வைத்து இயற்கையில் இறைவனைக் காணவில்லை. இயற்கை உலகத்தைப் பற்றி வள்ளுவருக்குத் தெளிவான நோக்கு இருந்தது. இயற்கை முதன்மையுடையது, பீடுடையது, அழகுடையது என்பவற்றைக் கூறும் வள்ளுவர்,

'மலர்தலும் கூம்பலும் இல்லதறிவு'

என்றும் கூறியுள்ளார். அறிவு என்பதற்கு அழிவு கிடையாது. பூவின் முதலும் முடிவும் போல அன்று, என்று கூறுகின்ற அதே வேளை,

'மலரினும் மெலியது காமம்'

என்றும் கூறுகின்றார். அறிவு பூப்போன்றதல்ல என்ற வள்ளுவர் காமம் பூப்போன்றது என்கிறார். உணர்வுகள் மென்மை பெறுவதில்தான் இன்பம் முகிழ்க்கிறது. எனவேதான் வள்ளுவர் பெண்மை நலத்தை வருணிக்கும் போதும், மலராகவும் நிலவாகவும் தான் கூறுகின்றார். (நலம்புனைந்துரைத்தல்). இத்தகைய தத்துவத் தெளிவோடு அறிவை அழிவற்றது என்று கூறும் வள்ளுவர் அவற்றை இயற்கையில் வைத்துக் காட்டும் வள்ளுவர் இயற்கையில் எப்படி இறைவனைக் காணமுடியும்? கடவுள் வாழ்த்தில் கூட, வாழ்க்கையின் நிம்மதிக்கான ஒரு துணைபோலத்தான் கடவுளைக் காட்டுகின்றார். கடவுளைப் பற்றிய சமய நவிற்சியை அவர் நூலில் எங்கும் காணமுடியவில்லை"(109) என்கிறார் துரை.சீனிவாசன். கடவுளரைக் காட்டிலும் ஒருபடி உயர்த்தி வான் மழையைச் சிறப்பித்துப் போற்றியது உணரப்பெறுகிறது. 'தெய்வம் தெளிமின் தெளிந்தோர் பேணுமின்' என்ற இளங்கோவடிகளின் கூற்று ஒப்புநோக்கத்தக்கது.

வான்மழையை வழிபாட்டுடனோ, இறையருளுடனோ ஒப்பிடாத வள்ளுவர், அறத்தோடு ஒப்பிடுகிறார். தவவேடம் பூண்டு அத்தவவேடத்திற்கு மாறான செயல்களைச் செய்தொழுகும் போலி இருடிகளின் (இருடிதுறவி) இழிவைக் கூறுங்கால் வள்ளுவர்,

"வஞ்ச மனத்தான் படிற்றறொழுக்கம் பூதங்கள்

ஐந்தும் அகத்தே நகும்"(110)

என்றார். மழை அறத்தின் வழியது. அரசும் மக்களும் அறத்தொடு பொருந்த வாழுமிடத்தில் மழை உரிய காலத்தில் பொழிய நிலமும் வளந்தரும். (55, 239, 545, 559). "திருவள்ளுவர் அறக்கருத்துக்களை இயற்கை நிகழ்ச்சிகளில் வைத்துக் கூறுவார். அவருடைய இயற்கை நவிற்சி முழுதும், பொருளியல் அடிப்படை கொண்டதாகவே அமைந்துள்ளது. கடவுள் நம்பிக்கையைக் கூறும் வள்ளுவர் இயற்கையில் இறைமையைக் காணவில்லை. அறம், காதல், இல்லறம் பற்றியும் பேசி அவற்றின் விளக்கத்திற்காக இயற்கையை அமைத்துள்ளார். அறநோக்கிற்கேற்பவே, இயற்கை பற்றிய அணுகல்களும் இணைந்தே செல்கின்றன"(111) என்பர் துரை.சீனிச்சாமி.

மக்களின் அறவாழ்வுக்கேற்றபடி மழைபொழியும், நிலம் பயன்தரும் என்னும் கருத்து தற்கால அறிவியல் அறிவுக்குப் பொருந்தாவிடினும், வள்ளுவர், மழையின் இன்றியமையாமையை, மழையினால் உணவு விளைவதை, தொழில் பெருகுவதை, புல் முதலியன செழித்து நிலம் நலம் பெற ஆற்றுநீர் வரவால் கடலும் செழுமையுறுவதை, மக்கள் வாழ்க்கையில் பலவளம் பெருகுவதை, ஆய்ந்துணர்ந்த அவர் மக்கள் அறவாழ்வினால் மழைவளம் பெருகும் எனவும் வள்ளுவர் நம்பினார். மழையினால் அறங்கள் தழைப்பதையும் எடுத்துக் காட்டினார்.

"தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்

வானம் வழங்கா தெனின்''[112]

மழையினால் அறமும் அறத்தினால் மழையும் சிறக்கின்றன. மழையை இறை வழிபாட்டுடன் ஒப்பிடாத வள்ளுவர் அறத்தோடு ஒப்பிட்டுள்ளமை அறியப் பெறுகிறது.

உயர்ந்த குணத்திற்கு வானத்தை ஒப்பிடுவர். அதனை ஒத்தது தவசிகளின் தோற்றமுமாகும். குற்றமென அறிந்தும் தன் மனமறியச் செய்வார்கள் எனில், அவர்களது உயர்ந்த தோற்றத்தை வானத்திற்கு ஒப்பாகக் கூறவியலாது. தன்நெஞ்சம், தான் அறிந்து செய்யும் குற்றத்தில் ஈடுபடுமானால் வானளாவிய அவனது தவத்தோற்றம் என்ன பயனைச் செய்யும்? இதனை,

''வானுயர் நிலைமையான் எவன்செய்யும தன்நெஞ்சம்

தானறி குற்றம் படின்''[113]

என்று வினவுகிறார் வள்ளுவர்.

**மழை**

பண்டைத் தமிழர் மழையையும் நீரையும் ஆற்றுவளத்தையும் போற்றினர். கடல்நீர் முகிலாகிப் பின் மழையாகப் பொழியும் சிறப்பையும், அதனால் நாட்டில் நீர்வளம் பெருகுவதையும் அதுவே தொழில் வளத்தையும் செல்வ வளத்தையும் நல்கி, மக்கட்கும் பிறவுயிர்கட்கும் நலஞ்செய்வதையும் குறித்து அவர்கள் சிந்தித்துள்ளனர். வள்ளுவரும் வான்சிறப்பை உணர்ந்தவராக, அதன் சிறப்பியல்புகளைப் பதிவு செய்துள்ளார்.

மழை நிலைபெற்றிருப்ப அதனால் உலகமும் நிலைபெற்று வருவதால் அம்மழை உலகத்திற்கு அமிழ்தம் என்று உணரத்தக்கது. மழையினாலேயே பல உயிர்களும் வாழ்கின்றன. அறம், பொருள், இன்பங்களை உண்டாக்குவது மழையே மழையே பல வகை உணவுகளையும் உண்டாக்குகிறது.

அதனால்தான் வள்ளுவரும் மழையை அமிழ்தம் எனக் கூறியிருக்கிறார். ‘அமிழ்தம் என்ற சொல் விண்ணோர் உணவாகிய அமிழ்தத்தையே குறிப்பதாகக் கொண்டு, அமிழ்தமுண்டார் சாவாது நிலை பெறுதலின் உலகத்தை நிலை நிறுத்துகின்ற வானை, அமிழ்தமென்று உணர்க’ என்கிறார் பரிமேழலகர். யாவரையும் இன்பத்தில் அமிழ்த்துவதனால் மழை அமிழ்தமெனப்பட்டது என உரை கூறுவாருமுளர். மழை உலகைக் காப்பது வாழ்விப்பது மேலும் நலஞ்செய்வது என்பது வள்ளுவர் கருத்தாகும்.

“வானின்று உலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று”(114)

வான்சிறப்பு அதிகாரத்தில் மழையின் சிறப்பு, அதன் இன்றியமையாமை, அது பெய்ய வேண்டிய பருவத்தே பெய்யாமல் பொய்த்தால் என்ன நிகழும் என்பவற்றையெல்லாம் தெளிவாக, விரிவாக, நுணுக்கமாக வள்ளுவர் கூறியிருக்கிறார்.

‘மழை ஒரு வியத்தகு பொருள் அ∴து உலகத்தில் உறையும் உயிர்கட்கு நல்ல உணவுப் பொருட்களை உண்டாக்கித் தருகின்றது. மற்றும் அவற்றை உண்டு உயிர் வாழ்வோர்க்குத் தானே ஓர் உணவுப் பொருளாகவும் விளங்குகிறது.’

‘மழை உரிய காலத்தில் பெய்தல் வேண்டும். இல்லையேற் கடல் சூழந்த இப்பெரு வையத்தில் பசிப்பிணி நிலைத்து நின்று உயிர்களை வாட்டும். உயிர்கள் அனைத்தும் துன்பத்தில் அழுந்தி மாளும்.’

‘மழைவளம் குன்றினால் மண்வளம் குன்றும். ஏர் பிடித்துப் பார்காக்கும் ஏருழவர் ஏர் தொடார். இவ்வுலகத்து உயிர்கள் பசிப்பிணியால் வாடும்.’

'பெய்ய வேண்டிய பருவத்தே பெய்யாமல் வாழ்வைக் கெடுத்தொழிப்பதும் மழை. மற்று வாழ்விழந்து கெட்டவர்க்கு உறுதுணையாக நின்று அவர்களை வாழ வைப்பதும் மழை.'

'வானத்தினின்று மழைத்துளி வீழ்தல் வேண்டும். இல்லையெனில் ஆறறிவுள்ள மனித உயிர்களை மட்டுமல்ல பசும்புல்லின் நுனியைக் கூட நாம் பார்ப்பது அரிதாகிவிடும்.'

'வானம், ஆழ்கடலின் நீரை ஆவியாக்கித் தான் குடித்து மழையாகப் பொழிகிறது. அது மழை பொழியத் தவறினால், கடலும் தன் வளங்குன்றும்.'

'வானம் பொய்யாமல் பெய்தல் வேண்டும். பெய்யாமல் வறண்டு விடுமானால், உலகில் வாழ்வாங்கு வாழ்ந்து உயிர் நீத்தவர்கள் நினைவாகச் செய்யும் அறச் செயல்களும் நிகழமாட்டா.'

'மழை பெய்யாது ஒழியுமானல் மற்றவர்கட்காகச் செய்யும் தானமும், வந்த துன்பத்தைத் தாங்கிக் கொள்ளுதலும் ஏனைய உயிர்கட்குத் துன்பம் செய்யாதிருத்தலும் ஆன தவமும் நிலை பெறமாட்டாது.'

'ஒழுக்கம் உயிரினும் சிறந்தது. பல்வேறு சிறப்புக்களை உடையவர்களுக்கும் நீர் இல்லையேல் ஒழுக்கங்கள் அமையாது. மழையின்றி ஒழுக்கம் நிலைபெறாது.'

உலகத்தில் உயிர்கள் இடையறாது பிறந்து, தொடர்ந்து வருகிற நிலைத்த தன்மை ஏற்பட மழையே உதவுவதால் அதனை அமிழ்தம் என்று போற்றுகிறார். உலக இயக்கம் என்னும் நிலைபேற்றை மழையே வழங்குகிறது என்பதால் அது சாவா மருந்தாகிய அமிழ்தம் எனப்பட்டது. உண்பார்க்கு நல்ல உணவுகளை உருவாக்குவதோடு, தண்ணீராகித் தானே உணவாகவும் அமைவது மழை (குறள்:12). உணவை உருவாக்கித் தரும் உழவர்களுக்கு

விளைபொருட்களை விட, விளைபொருளை உருவாக்க உதவும் மழையே வருமானம் (வாரி) என்கிறார் வள்ளுவர்.

“ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்
வாரி வளங்குன்றிக் கால்”(115)

உழவுத் தொழிலுக்கு மழையே முதலீடாகும். எல்லாம் மழை (குறள்:15) என்று கூறி ஆக்கத்திற்கும் கேட்டிற்கும் மழையே காரணம் என்று எச்சரிக்கை செய்கிறார். உலகத்திலே மிகவும் ஆற்றல் மிக்க சக்தி மழையை உருவாக்கித் தரும் சக்தி தான் என்பது வள்ளுவர் தரும் செய்தியாகும். அதனால்தான் தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழுது எழுகின்ற பெண் மிக உயர்ந்த ஆற்றல்மிக்க பெண் (குறள்:55) என்பதைக் கூறவந்த வள்ளுவர், அவளுடைய ஆற்றலுக்கு அளவுகோலாக அவள் பெய்யென்று சொன்னால் மழையும் பெய்யும் என்று கூறுகிறார். இதனை அடியொற்றித்தான் ‘வான்தரு கற்பின் மனையுறை மகளிர்’ (மணிமேகலை) என்றும், ‘கற்பின் நின்றன காலமாரியே’ (கம்பராமாயணம்) என்றும், ‘மழைக்குதவும் பெருங்கற்பின் மனைவியார்’ (பெரியபுராணம்) என்றும் இலக்கியங்கள் கூறுகின்றன.

**மழையும் பசியும்**

மழை பெய்யாமல் நின்று பொய்த்து விடுமானால் உலகம் பசித் துன்பத்தால் வாடும். பசியின் கொடுமை சமுதாயக் கொடுமையாக மாறும். மழை பொய்க்குமானால் மண்ணில் உயிர்கள் வாடும் கொடிய நோய்கள் சூழும். இதனை,

“குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடுஉம்
நாண்அணி களையும் மாண் எழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்

பசிப்பிணி என்னும் பாவி"[116]

என்று மணிமேகலை பசியைப் பாவி எனச் சுட்டும். வான் மழையின் பெருமை உணர்ந்த வள்ளுவர்,

"விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து

உள்நின்று உடற்றும் பசி"[117]

என்று கூறுகிறார். காலந்தவறாது மழை பெய்ய வேண்டும். அதனை விடுத்து மழை பெய்ய வேண்டிய காலத்தில் பெய்யாமல் பொய்த்துவிடுமானால் கடல் சூழ்ந்த பரந்த இவ்வுலகத்தில் பசி தோன்றி உயிர்களையெல்லாம் வருத்தும் என்று கூறுகிறார். வான்மழை இல்லையெனில் மண்ணில் புல்கூட இல்லை என்பதை,

"விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே

பசும்புல் தலைகாண் பரிது"[118]

என்று கூறுகிறார். இயற்கை வளங்கள் செழிக்கும் மரங்கள் மட்டுமல்லாது, ஓரறிவு உயிராகிய புல்கூட முளைக்காது என்பது அவரின் கருத்தாகும். "நாட்டின் ஆட்சி நல்லாட்சியாக இருக்க வேண்டும். ஆளுகின்ற காவலன் நல்ல முறையில் மக்கள் மனம் நிறைவு பெற ஆட்சி செய்தல் வேண்டும். மக்கள் உள்ளம் வேதனைப்படக் கூடாது. மக்கள் மனம் வேதனைப்பட்டால் நாடு கெட்டுவிடும் என்ற குறிப்புக் காட்டப்படுகிறது. நல்ல முறையில் ஆட்சி செய்யும் மன்னவனுடைய நாட்டில், குன்றாத மழையும் நல்விளைச்சலும் இருந்து வரும் என்று கூறுகின்றார். இதனை,

"இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட

பெயலும் விளையுளும் தொக்கு"[119]

என்ற குறளால் விளக்குகிறார். மக்கள் உள்ளத்தின் எழுச்சி உலக இயற்கை முறையையும் தொடும் என்பது உணர்த்தப்பட்டது.

மக்கள் உள்ளம் மகிழ்ச்சியில் இருந்தால் உலகில் மழையும் நன்கு பெய்யும். மனித உள்ளத்தின் ஆற்றல் இயற்கையையும் செயல்புரிய வைக்கும் என்பது சிந்திக்க வேண்டிய ஒன்று. நல்லமுறையில் மக்கள் எல்லோரும் களிப்புற்று மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருக்கச் செய்தால், மக்கள் மனத்தின் வேகம் நன்கு மழை (545) பொழிய வைக்கும்.

மக்கள் உள்ளம் வேதனைப்பட்டு நொந்து துடிக்குமேயானால், உலகத்தின் ஐம்பூதங்களும் நன்கு செயல்படாமல், மழை பொழியாது (559) என்று உணர்த்துகிறார் வள்ளுவனார். இதனை,

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்"(120)

என்று கூறுகிறார். இவ்வாறு ஐம்பூதங்களில் ஒன்றான வானத்தையும், வானத்தோடு மழையையும் குறித்துப் புனைந்துள்ளார்.

குறளில் குறிக்கப்பெறும் நீர்நிலைகள், கடல், ஊருணி, மணற்கேணி, குளம் என்பன. எப்போதும் எல்லார்க்கும் பயன்படும் தன்மை ஊருணிக்கு உண்டு. தோண்டிய அளவாக நீர் சுரப்பது மணற்கேணி. இவற்றின் இயல்புகள் விளக்கப்பட்டுள்ளன. கடல் பெரிதாக இருப்பினும் மழை இல்லையாயின் வற்றும் என்பது பெறப்படுகிறது. பெரிய மடுக்களை நெடும்புனல் என்கிறார் வள்ளுவர். குடிநீருக்கும், விளை நீருக்குமாக, முப்புனல் கூறப் பெற்றுள்ளது. ஒன்று ஊற்று நீர், மற்றொன்று மழை நீர், மற்றொன்று மலையிலிருந்து வரும் ஆற்று நீர். நாடு காவலுக்கு வேண்டிய நீர், மணிநீர் எனப்பெறுகிறது. மணி நீருக்குப் பரிமேலழகர் காணும் உரை, எஞ்ஞான்றும் வற்றாத நீர் என்பதாகும். நீரிற்குத் தனியான சுவையும், நிறமும் இல்லை கலந்த நிலத்தின் தன்மையால், அவற்றைப் பெறுகிறது என்பதையும் குறளில் விளக்கியுள்ளார்.

**கோள்கள்**

வானவியல் கல்வியின்படி, கோள்கள் சுழல்கின்ற போது மினுக்குகின்ற ஆற்றலை அவை பெற்றிருக்கவில்லை. ஆனால், விண்மீன்கள் மின்னும் ஆற்றல் பெற்றவை. நிலவுக்குத் தனக்கென்று தனியாக ஒளி இல்லை. இத்தகைய அறிவியல் உண்மையை வள்ளுவர்,

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்

காதலை வாழி மதி''[(121)]

என்று கூறுகிறார். திங்களே, இப்பெண்ணின் முகத்தைப்போல் ஒளி வீச உன்னால் முடியுமானால் நீயும் இவள்போல் என் காதலை வாழச் செய்யும் உரிமை பெறுவாய் என்கிறார். காதலியின் முகம் ஒளிவிடும் தன்மையுடையது. அத்தகைய ஒளிவிடும் தன்மை நிலவுக்குக் கிடையாது என்பதை உணர்ந்த வள்ளுவர்,

மதியும் மடந்தை முகனும் அறியா

பதியிற் கலங்கிய மீன்''[(122)]

என்று கூறுகிறார். நிலவு மின்னாது, தனக்கென்று ஒளி இல்லாதது ஆனால் காதலியின் முகமோ ஒளிபொருந்தி மின்னுகிறது. மினுக்கும் தன்மை கொண்ட விண்மீன்கள் மிக உயர்ந்த இடத்திலிருந்தே கதிரவனைவிடப் பெரிதாக இருப்பதால் வெண்ணிலவையும், பெண்ணின் முகத்தையும் வேறுபடுத்திப் பார்க்க முடியாமல் கலங்குகின்றன என வள்ளுவர் கூறுகின்றார். அழகியல் நோக்காகக் கூறப்பட்டதெனினும், அவற்றில் அறிவியல் உண்மையும் இருப்பது உணரப் பெறுகிறது.

**கிரகணம்**

சூரிய ஒளி பூமியின் மீது விழும் போது ஏற்படும் நிழல்கூம்பினுள் சந்திரன் நுழைய நேரிடும்போது சந்திர கிரகணம் ஏற்படுகிறது. அந்த நிழல்

கூம்பைத்தான் முன்னோர் பாம்பு என்றனர். கூம்பின் நுனி பாம்பின் வால். கூம்பிற்குள் சந்திரன் நுழைகின்றது என்பதற்குப் பதிலாக பாம்பு வந்து சந்திரனை விழுங்குவதாகக் கூறினர். நிழலை விட்டு சந்திரன் வெளியே வருவதை பாம்பு அதை உமிழ்ந்து விட்டதாகக் கூறினர். இதனை,

மதிசேர் அரவின் மானத் தோன்றும்

மருதம் சான்ற மருதத் தண்பணை"(123)

என்ற சிறுபாணாற்றுப்படை பாடலும் உறுதி செய்கிறது.

காதலனை நான் ஒரு நாள்தான் பார்த்தேன். அதனால் உண்டாகிய அலரோ பாம்பு சந்திரனை விழுங்கிய செய்தி போல் எங்கும் பரவிவிட்டது. இதனை,

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்

திங்களை பாம்புகொண் டற்று"(124)

என்று வள்ளுவர் கூறுகிறார். சந்திரகிரகணத்தைப் பற்றி அக்காலத்து நம்பிக்கையினை வள்ளுவரும் அறிந்திருக்கிறார் என்பது புலனாகிறது.

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு"(125)

குடிபிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து"(126)

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து"(127)

மலரன்ன கண்ணாள் முகம்ஒத்தி யாயின்
பலர்காண தோன்றல் மதி"(128)

விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி"(129)

ஆகிய குறள்களில் சந்திரன் குறித்த செய்திகள் காணப்படுகின்றன.

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்

பின்நீர பேதையார் நட்பு”[130]

என்ற குறளில் வளர்பிறை, தேய்பிறை என்ற கண்ணோட்டத்தில் கூறியுள்ளார். நிலவு தேய்வதும் இல்லை வளருவதுமில்லை என்பது அறிவியல் ஆய்வாகும். ஆனால் வள்ளுவர், அக்காலத்தில் நிலவிய நம்பிக்கையின் அடிப்படையில் கூறியுள்ளார் என்பது பெறப்படுகிறது.

சூரியன்: சூரியனின் கடுமையான வெப்பம் உயிர்களை வருத்தமடையச் செய்யும். எலும்பு இல்லாத உடல் கொண்ட புழுக்கள் முதலியவற்றை வெயில் வருத்துவது போல அன்பில்லாத உயிரை அறக்கடவுள் வருத்துவார் என்று கூறுமிடத்து சூரியனின் கடுமையை வள்ளுவர் கூறியுள்ளார். இதனை,

என்பில் அதனை வெயில்போலக் காயுமே

அன்பில் அதனை அறம்”[131]

என்று கூறுகிறார்.

**தொகுப்புரை**

இவ்வுலகம் நிலம், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐந்து இயற்கைப் பிரிவுகள் உடையது. இந்த ஐந்தினையும் ஐம்பூதங்கள் என்பர். ஒவ்வொருவர் உடம்பிலும் இந்த ஐந்தும் இருக்கின்றன. உலகிலுள்ள இந்த ஐந்து பூதங்களும் ஒன்று சேர்ந்து நடைபெறுகின்ற நிகழ்ச்சி மழை ஒன்றுதானாகும்.

பொறுமைக்கு உலகில் போற்றப்படுவது நிலமாகும். நிலத்தினை அகழ்வாரும், பிறரை இகழ்வாரும் ஒப்பிடப்படுகின்றனர். நிலத்தினை அகழ்வதற்கு தோண்டுவதற்குக் கடுமையான கருவி இருப்பது போலப் பிறரை இகழ்வார்க்கு உள்ளம் இருக்கின்றதென்பது குறிப்பாகும். நிலமும் நீரும் கலக்கும்பொழுது அவை பிரிக்க முடியாத படி ஒன்றுபடும். நிலம் காதலர் மன ஒற்றுமைக்கு உவமை காட்டப்படுகிறது.

நிலம் தன்னுடன் கலந்த நீரைத் தன்னிறமாகவும் தன் சுவையாகவும் ஆக்கிவிடும். நிலம் பயிர்கள் வளர்வதற்கு ஏற்ற இடம். அது பலவகையான வளமையுடையது. நிலம் மக்கள் யாக்கையைத் தாங்கும். புகழில்லாத உடம்பினைத் தாங்கும் நிலம் விளைவு குன்றும். நிலம் தன்னிடம் அறைந்தவனது கையை வலிக்கச் செய்கிறது. நிலம் கடுங்கோல் அரசனைச் சுமையாகக் கருதிக் கொள்கிறது. குணங்களால் நிறைந்தவர் தன்மை குன்றின் நிலம் அவரைப் பாரமாக நினைக்கும். தரையில் ஓடும் தேரையும், கடலில் ஓடக்கூடிய கப்பலையும் உவமை காட்டுகிறார்.

நிலம் பெண்ணாக உருவகிக்கப்படுகிறது. அந்த பூமித்தாய் சிரிக்காமல் இருக்கச் சோம்பல் முறிக்க வேண்டும். நிலம், நாளும் கவனித்தல் வேண்டும். இல்லையேல் மனைவி போல் பிணங்கிவிடும்.

நீரின்றி உலகம் இல்லை. நீர் ஊருக்கு உணவளிக்கும் ஊருணியாய். நீர் (ஊருணி) பேரறிவாளனின் ஒப்புரவிற்கு உவமையாகிறது. நீர் தான் விழ்ந்த நிலத்தின் இயல்புக்கேற்ப நிறம் சுவை முதலியவற்றை அடைகிறது. கரையுள்ள குளம் நீரை வீணாக்குவதில்லை. கரையில்லாவிடில் நீர் வீணாகிவிடும். அதுபோல சுற்றத்தோடு கலவாத வாழ்க்கையும் அழிந்துவிடும்.

ஊருணி என்ற சொல் சங்க இலக்கியத்தில் எங்கும் இடம்பெறவில்லை. ஊருநீர் என்ற சொல் மணிமேகலையிலும் ஊருண்கேணி என்ற சொல் குறுந்தொகையிலும், புறநானூற்றிலும் இடம் பெறுகின்றன. ஊருணி என்பது பாண்டி நாட்டு வழக்கு. வள்ளுவத்தில் பயன்படுத்தப்பட்ட ஊருணி, கேணி போன்ற சொற்கள் இப்போதும் செட்டிநாட்டு மக்களிடம் வழக்கில் உள்ளன.

கள்ளுண்டவனைக் காரணங்கூறித் திருத்த முடியாது. நீர் இனியதாகும் அதுவும் நோய் செய்யுமாயின் இன்னாதாகும். நீரை இரந்து பெறுதல் அவமானமாகும். ஊற்றுநீர் இறைக்க இறைக்க ஊறுவதாகும். ஒருவனின்

ஊக்கம் வாழ்க்கையில் உயர்வைத் தரும் என்பதற்கு, நீரின் அளவே அதனுள் வளரும் மலர்களும் உயரும் என்ற கருத்துச் சிறப்பிற்குரியதாகும்.

நாணம், ஆண்மை என்ற படகுகளைக் காமம் என்னும் கடும் வெள்ளம் அடித்துச் சென்றுவிடும். வெள்ளம் இழுத்துச் செல்வதை அறிந்திருந்தும் அதனுள் பாய்கின்றவரைப் போல் வெற்று ஊடல் பயன்தாரது என்கிறார் வள்ளுவர்.

கடலால் சூழப்பட்ட உலகில், மழையை உருவாக்க உதவுகிற கடலும் மழையில்லை என்றால், தன்னியல்பில் குறைந்து, கடல்வாழ் உயிரினங்களும் அழிந்துவிடும்.

கடல் காதலர்களுக்குக் காமத்தை மிகுத்து வருத்தம் செய்வதாகும். அன்பில்லாதவர்களின் மீது நேசம் வைப்பது கடலைத் தூர்ப்பதற்குச் சமமாகும். இறையருளால் தான் பிறவிப் பெருங்கடலைக் கடக்க வழிகாட்டும்.

காமத்தைக் கடலோடு ஒப்பிட்டு, காமம் கடல் போன்றது என்கிறார். காமமாகிய கடலை நீந்துவதற்கு அரிதின் முயன்றும் அதன் கரைகாண முடியாமல் வருந்தும் தலைவியின் நிலையை எடுத்துரைத்துள்ளார் வள்ளுவர்.

இவ்வுலகில் எல்லா நன்மைகளையும் அடையத்தக்கவர் யாரெனில், பிறன்மனை உரிமையானவளின் தோள்களைச் சேராதவனே என்று வள்ளுவர் கூறுகிறார்.

தீ சுடராகவும் பெரும் நெருப்பாகவும் குறளில் அறியப்படுகிறது. கொடுங்கோல் அரசனிடம் விலகாமலும், அணுகாமலும் இருப்பதற்குத் தீக்காய்தலின் தன்மையினை எடுத்துக் கூறுகிறார்.

தீயச்சொல் உள்ளத்தில் ஆறாமல் வடுவாகி நிற்கும். ஆனால் தீயினால் சுட்ட புண் ஆறிவிடும். தீயை விட கொடுமையாது ஒருவனின் தீயச்சொல் என்பதை உரைக்கிறார்.

காணாதப் பொருள்களைத் தீயைக் கொண்டு (தீப்பந்தம்) காணுதல் வழக்கமாகும். பொருள்கள் தீயொளியில் தெளிவாகத் தெரியும் என்பதைக் காட்டுகிறார்.

குற்றம் வருவதற்கு முன்பே, வராமல் காத்துக் கொள்ளாதவனுடைய வாழ்க்கை, நெருப்பின் முன்னே உள்ள வைகோல் போர் போல் ஆகிவிடும்.

நெருப்பு தன்னைத் தொடுவாரைச் சுடும். தூர விலகியோரை எதுவும் செய்யாது. ஆனால் இங்கு வள்ளுவர் நெருப்பு, நெருங்கினால் குளிர்ச்சியாக இருக்கிறது. நீங்கினால் சுடுகின்றது. இத்தகைய புதுமையான தீயை இவள் எங்கிருந்து பெற்றாளோ? என வினவி ஒரு புதுமைத் தீயினை உண்டாக்குகிறார்.

ஊரார் எடுக்கின்ற அலரினால் அவர்களின் காதல் பிணைப்பினை நிறுத்தவோ, தடுக்கவோ முடியாது. அப்படித் தடுத்து விடுவோம் என்று நினைப்பது, நெய்யினால் நெருப்பினை அணைத்து விடுவோம் என்று கூறுவது போன்றதேயாகும்.

இளகிய மனத்தினையுடைய பெண்களின் ஊடல் வெற்று ஊடல் ஆகும். இளகிய மனத்தினை உடையயோர்க்குத் தீயில் கொழுப்பை இட்டாற் போல உருகும் நெஞ்சை உடைய மகளிர் என்ற உவமை சிறப்பிற்குரியதாகும்.

வளி (காற்று) குறித்து இரண்டு பாடல்களில் குறிப்பிடுகின்றார். நோய் குறித்து ஒன்றும், காமம் குறித்து ஒன்றுமாக உரைக்கிறார். காதலர்களின்

நெருக்கத்தைக் குறிக்க, காற்றுப் புகாவண்ணம் இறுக அணைத்தலைக் குறிப்பிடுகிறார் வள்ளுவர்.

வானம் மிக உயர்ந்ததாகக் கூறப்படுகிறது. இது தவசிகள் தோற்ற உயர்வுக்கு உவமையாகக் காட்டப்படுகிறது. மழை இல்லையேல் வானோர்க்குப் பூசனை நடைபெறாது என்று குறிப்பிடுவது சிந்தனைக்குரியது. இல்லத்தார் செய்யும் தானத்திற்கும் துறவோர் செய்யும் அறத்திற்கும் முதற் காரணம் மழையே என்று சிறப்பிக்கப்பட்டது.

வான்மழையை வழிபாட்டுடனோ, இறையருளுடனோ ஒப்பிடாத வள்ளுவர், அறத்தோடு ஒப்பிடுவது நோக்கத்தக்கது.

மழை என்பது நீரைமட்டும் குறித்து நிற்பதன்று. அது ஒரு செயலினை நிகழ்ச்சியினை உணர்த்துவதாகும். மழை பெய்தல் என்பது வழக்கு. மழையை அமிழ்தம் என்று கூறப்படுகிறது.

மழை பொய்த்தால், இயற்கை வளங்களான மரங்கள் மட்டுமல்லாது, ஓரறிவு உயிராகிய புல்கூட முளைக்காது என்பது அவரின் கருத்தாகும்.

நல்ல முறையில் ஆட்சி செய்யும் மன்னவனுடைய நாட்டில், குன்றாத மழையும் நல்விளைச்சலும் இருந்து வரும் என்று கூறுகின்றார்.

உலகத்திலே மிகவும் ஆற்றல் மிக்க சக்தி மழையை உருவாக்கித் தரும் சக்தி தான் என்பது வள்ளுவர் தரும் செய்தியாகும். அதனால்தான் தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழுது எழுகின்ற பெண் மிக உயர்ந்த ஆற்றல்மிக்க பெண்ணின் ஆற்றலுக்கு அளவுகோலாக அவள் பெய்யென்று சொன்னால் மழையும் பெய்யும் உறுதி செய்கிறார்.

மழை சிலகாலம் பெய்யாமல் வறண்டாலும் மீண்டும் உடன் பெய்து வளங் கொடுக்கும் இயல்பினது என்பதை வள்ளுவர் கூறுகிறார்.

இயற்கை நிகழ்வுகளான ஐம்பூதங்களின் இயக்கத்தையும், அதன் மூலம் மனிதர்கள் பின்பற்றக்கூடிய வாழ்க்கை நெறிகளையும் தம் குறட்பாக்களின் மூலம் தெளிவுபடுத்தியமை உணரப் பெறுகிறது.

எக்காலத்திற்கும் பொருந்திவரும் கருத்துக்களை வள்ளுவர் கூறியிருந்த போதும், அவர் கால நம்பிக்கைகளையும் தம் குறட்பாக்களில் பதிவு செய்துள்ளமையும் பெறப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**

1.தொல். பொருள்:635.

2. புறம்:2:16.

3. திருக்குறளார் வீ.முனுசாமி, திருக்குறள் உரை விளக்கம், ப.107.

4. குறள்:736.

5. குறள்:734.

6. குறள்:737.

7. குறள்:742.

8. குறள்:271.

9. சிலம்பு: காடுகாண்காதை: 6466.

10. குறள்: 151.

11. குறள்: 307.

12. தவத்திரு குன்றக்குடி அடிகளார், (திருக்குறள் பேசுகிறது), குறள் களஞ்சியம், ப. 640.

13. குறள்: 452.

14. குறள்:1323.

15. க.த.திருநாவுக்கரசு, (ஒளிவிளக்கு), குறள் களஞ்சியம், ப.739.

16. குறுந்.40.

17. குறள்: 1039.

18. குறள்:1040.

19. குறள்:496.

20. குறள்1101.

21. குறள்: 576.

22. சாமி.பழனியப்பன், குறளில் இயற்கை, பக்.5758.

23. குறள்:572.

24. குறள்:406.

25. சாமி.பழனியப்பன், குறளில் இயற்கை, ப.59.

26. குறள்: 407.

27. குறள்: 239.

28. குறள்:570.

29.குறள்: 1003.

30. குறள்:189.

31. குறள்:239.

32. குறள்:570.

33. குறள்:572.

34. குறள்:990.

35. குறள்:1003.

36. குறள்:990.

37. குறள்: 101.

38. குறள்: 213.

39. குறள்:247.

40. குறள்: 353.

41. குறள்:389.

42. குறள்:544.

43. குறள்:547.

44. குறள்:386.

45. குறள்:452.

46. குறள்:20.

47. குறள்:12.

48. புறம்.18:2021.

49. குறுந்.137:7.

50. முருகு.293.

51. பெரும்.409, 410.

52. சிறுபாண்114.

53. குறுந்.41:11.

54. குறள்:13.

55. குறள்:710.

56. சாமி.பழனியப்பன், குறளில் இயற்கை, ப.116.

57. குறள்:20.

58. குறள்:8.

59. குறள்:17.

60. கி.ஆ.பெ.விசுவநாதம், (திருக்குறளில் விஞ்ஞானம்), வள்ளுவம் பன்நோக்குப் பார்வை, ப.98.

61. திருக்குறளார் வீ.முனுசாமி, திருக்குறள் அதிகார விளக்கம், ப.891.

62. குறள்:103.

63. குறுந்.137:7.

64. குறள்:149.

65. திருக்குறளார் வீ.முனுசாமி, திருக்குறள் அதிகார விளக்கம், ப.896.

66. குறள்:496.

67. அகம்.28.

68. குறள்: 1137.

69. குறள்: 1164.

70. குறள்: 1175.

71. திருக்குறளார் வீ.முனுசாமி, (திருக்குறள் அதிகார விளக்கம்), குறள் களஞ்சியம், ப.891.

72. குறள்:1200.

73. குறள்:1137.

74. குறள்:1134.

75. குறள்:1287.

76. அகம்.316:1113.

77. குறள்:215.

78. ரா.பி. சேதுபிள்ளை, திருவள்ளுவர் நூல்நயம், பக்.99100.

79. குறள்:396.

80. குறள்:1161.

81. குறள்:523.

82. குறள்:881.

83. திருக்குறளார் வீ.முனுசாமி, (திருக்குறள் அதிகார விளக்கம்), குறள் களஞ்சியம், ப.1002.

84. குறள்:1066.

85. குறள்: 595.

86. குறள்:129.
87. சாமி.பழனியப்பன், குறளில் இயற்கை, ப.116.
88. குறள்:308.
89. குறள்: 435.
90. குறள்: 306.
91. குறள்: 674.
92. குறள்: 691.
93. குறள்: 929.
94. வ.சுப.மாணிக்கம், வள்ளுவம், ப.27.
95. குறள்: 1104.
96. திருக்குறளார் வீ.முனுசாமி, குறள் களஞ்சியம், (திருக்குறள் அதிகார விளக்கம்), ப.1012.
97. குறள்: 1148.
98. குறள்:1228.
99. குறள்: 1159.
100. கலித்.77:2324.
101. குறள்: 1260.
102. குறள்: 941.
103. குறள்:1108.
104. இ.சுந்தரமூர்த்தி, வான்மறை வள்ளுவம், ப.41.
105. கலித்:146:5253.
106. நற்:22.
107. குறள்: 1192.
108. குறள்:18.
109. துரை.சீனிவாசன், இலக்கியத்தில் இயற்கை, பக்.3233.
110. குறள்:271.
111. துரை.சீனிச்சாமி, வள்ளுவரின் இயற்கைத் தத்துவம், தமிழாசிரியர் கருத்தரங்க ஆய்வுக் கோவை, 1973, சென்னை.
112. குறள்:19.
113. குறள்:272.

114. குறள்:11.

115. குறள்: 14.

116. மணி.பாத்திரம் பெற்ற காதை:7680.

117. குறள்: 13.

118. குறள்:16.

119. குறள்:545.

120. குறள்:559.

121. குறள்: 1118.

122. குறள்:1116.

123. சிறுபாண்.178179.

124. குறள்: 1146.

125. குறள்: 782.

126. குறள்: 957.

127. குறள்: 1117.

128. குறள்: 1119.

129. குறள்: 1210.

130. குறள்: 782.

131. குறள்: 77.

## இயல் – ૩

## விலங்கினங்கள்

வள்ளுவம், தான் தோன்றிய காலத்தோடு நின்று விடாமல் எந்த நூற்றாண்டு மனிதனுக்கும் வாழச் சொல்லிக் கொண்டிருக்கிறது வாழ்க்கையைச் சொல்லிக் கொண்டிருக்கிறது. வள்ளுவம் இலக்கியம் என்னும் நிலையில் நின்று விடாமல், மனித வாழ்வியல் கூறுகளைக் காட்டும் எழுத்துப் பதிவுகளாக உள்ளது. சராசரி மனிதன் அன்றாட வாழ்க்கையில் ஒழுக வேண்டிய நெறிமுறைகளின் தொகுப்பாகத் திருக்குறள் படைக்கப்பட்டுள்ளது.

திருக்குறள் ஒரு வாழ்வு நூல். அறநூல் என்பதற்கும் வாழ்வு நூல் என்பதற்கும் வேறுபாடு உண்டு. அறநூல்கள் பல சமயச் சார்பும் அறநெறியை விதிகளாக வகுத்துக் கூறும் போக்கும் மிக்கன. ஆனால், வாழ்வு நூல் என்பது வள்ளுவர் புதுமையாகக் கண்டது. இது அற நூலுடன் ஒற்றுமை உடையது என்பதைத் தவிரத் தனக்கெனப் பல தனித் தன்மைகளை உடையது. இங்ஙனம் திருவள்ளுவர் வாழ்வு நூலாக எழுதுவதற்குத் தமிழ்ப் பண்பாடு அடித்தளமாக இருக்கின்றது.

தமிழ்ப் பண்பாடும் இயற்கை சார்ந்ததாக அமைந்துள்ளது. தமிழர்கள் வாழ்வியலை இயற்கையோடு பிணைத்துக் கொண்டனர். புலவர்கள் இயற்கையின் பங்களிப்பைத் தம் பாடல்களில் பதிவு செய்தனர். இயற்கையின் பங்களிப்பு மக்களின் வாழ்வியலோடு இணைந்தே காணப்படுகிறது. அவ்வாறு வாழ்வியலில் தொடர்புடைய விலங்கினங்கள், அவற்றின் மேன்மை, தன்மைகளை வள்ளுவர் தம் குறட்பாக்களில் உவமைகளாகவும், உருவகங்களாகவும், அவை வாழ்வதற்குத் துணை செய்வனவும் பதிவு செய்துள்ளவற்றை ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

**விலங்கு**

குறுக்காக வளரக் கூடியவை அனைத்தும் விலங்கு[1] (That which is transverse a cross or crosswise) என குறிப்பிடப்படுகிறது. விலங்கு என்ற சொல்லோடு 'மா' என்ற சொல்லும் இணைக்கப் பெற்றது. கருப்பொருள் குறித்துத் தொல்காப்பியம் கூறுகையில் விலங்கை 'மா' என்றே குறிப்பிடுகிறது. இதனை,

"தெய்வம் உணாவே மா மரம் புள் பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப"[2]

என்ற நூற்பா அடிகளின் வழி அறியலாம். "கணம், சாலம், வியூகம், குலம், மருப்பு, விருந்தம், குமரம், சிருங்கம், கூலம், இலாங்கூலம், துவக்கு, அதள், உரிவை"[3] என்று விலங்குகளுக்குரிய வேறு பெயர்கள் ஆசிரிய நிகண்டில் குறிப்பிடப்பட்டுள்ளன.

திருக்குறளில், வாழ்வியலை விளக்குவதற்கு விலங்குகளின் தன்மைகளைக் கூறியுள்ளார் வள்ளுவப் பெருந்தகை. சிங்கம், புலி, நரி, யானை, குதிரை, கவரிமா, பெண்மான், முயல், காளை, பசு, ஆடு ஆகிய விலங்குகள் பற்றிய செய்திகள் குறளில் இடம்பெற்றுள்ளன. அவை, ஊன் உண்ணும் விலங்குகள், தாவரம் உண்ணும் விலங்குகள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.

ஊன் உண்ணும் விலங்குகளாகச் சிங்கம், புலி, நரி ஆகிய விலங்குகள் காணப்படுகின்றன. தாவரம் உண்ணும் விலங்குகளாக யானை, குதிரை, கவரிமா, பெண்மான், முயல், காளை, பசு, ஆடு போன்றவை அறியப்படுகின்றன. ஊன் உண்ணாத விலங்குகளை மட்டுமே மனிதன் தன்னிடம் வைத்துப் பழக்கப்படுத்தியுள்ளான். இவை தவிர, முதலை, மீன்,

ஆமை, எலி, பாம்பு, புழு போன்றவைகளும் குறள்களில் பயின்று வந்துள்ளன. இது மனித வாழ்விற்குப் பல்லுயிர்களின் இணைவு தேவை எனபதை உணர்த்துகின்றது.

**சிங்கம்**

விலங்குகளில் தலைமைச் சிறப்புடையது சிங்கம். சிங்கத்தை அரிமா என்ற பெயராலும் வழங்குவர். இவ்அரிமா, விலங்குமான், கோண்மா, உளைமான், வயமான் போன்ற பல சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில், வலிமையும் பிடரிமயிர் அழகுடனும் காணப்படும் விலங்காதலால் சிங்கம், அரிமா என்ற சொல்லால் குறிக்கப் பெற்றுள்ளது. பிடரிமயிர் அழகு செய்யும் கழுத்தினையும் நீண்ட கூர்மையான நகங்களையும் உடைய அரிமாவின் தோற்றத்தினை,

"தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகிர்

அரிமான் வழங்குஞ் சாரற்"(4)

என்ற பதிற்றுப்பத்தின்அடிகள் விளக்கும். வள்ளுவர் அதனை, 'ஏறு' என்ற சொல்லால் குறிக்கின்றார்.

**ஏறு**

'ஏறு' எனும் சொல் ஆணினத்தைக் குறிக்கிறது.(5) மரையானின் ஆணினத்தைக் குறிக்க 'ஏறு, 'விடை' எனும் சொற்கள் சங்க இலக்கியத்தில் குறிக்கப் பெற்றுள்ளன. இதனைக் குறுந்தொகை (321), மலைபடுகடாம் (331) இவற்றின் வழி அறிய முடிகிறது. "ஆமானின் ஆணினத்தைக் குறிக்க 'ஏறு' எனும் சொல் மட்டும் இடம்பெறுகின்றது. அச்சொல் இரு இடங்களில் குறிக்கப் பெற்றுள்ளது.

"தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு" (அகம்.238:7)

"ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண்நின்று" (திரு.315)

என்ற அடிகள் இதனை விளக்குவனவாகும். மரையா, மரையானின் ஆணினப் பெயர், மானின் ஆணினப் பெயரோடு பொருந்தி வருவதனை இதன்வழி அறியலாம்''[6] என்ற மா.பரமசிவனின் கூற்று ஒப்பு நோக்கத்தக்கது. ஏறு என்ற சொல் சங்க இலக்கியத்தில் பிற விலங்கினத்தின் ஆணினப் பெயராக விளங்கியதையும் அறியப் பெறுகிறது.

சங்க இலக்கியத்தில் விலங்கினைக் குறிக்கும் ஆண்பாற் பொதுப் பெயர்களாக 'ஏறு' குறிப்பிடப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தில் 'ஏறு' என்னும் பெயர் புல்வாய், உழை, மரை, கவரி, பன்றி, பெற்றம், எருமை, காரம், சுறா என்ற ஒன்பது விலங்குகளுக்கும் பொருந்தும் என விளக்கப்பட்டுள்ளது.[7] "ஏறு பெண்ணின் மேல் ஏறும் ஆண்விலங்கு என்றும், எருது ஏர், ஏரி, ஏர்த்தொழிற்குரிய காளை''[8] எனவும் விளக்கம் தருவர் ஞா.தேவநேயன். ஏற்றை என்ற சொல், ஏறு என்பதன் அடியாகப் பிறந்த சொல்லாகும். ஏறு, ஏற்றை, எருது போன்ற சொற்கள் ஆண் விலங்கினையே குறிக்கின்றன. தொல்காப்பியர் ஆற்றலோடு புணர்ந்த ஆண்பாற்கெல்லாம் ஏற்றை[9] எனும் சொல் உரியது எனக் குறித்துள்ளார்.

சிங்கத்தின் பெருமித நடையை வள்ளுவர் பெரிதும் சிறப்பித்துக் காட்டுகிறார். சேந்தன் திவாகரத்தில் சிங்கம் குறிக்கும் வேறு சொற்களாக, ஆளி, மடங்கல், அரி, சண்டீரம், கேசரி, மிருகபதி, வயமா, சிங்கம்[10] என்றும், சூடாமணி நிகண்டில், அரி, வயப்போத்து, சீயம், அறுகு, பூட்கை, மிருகராசன், பஞ்சானம்[11] என்றும் குறிக்கப் பெறுகின்றது.

நற்பண்புகளுடைய பெண்ணைத் துணைவியாகப் பெற்றவன் சிங்கம் போல் பெருமித நடையுடன் தலை நிமிர்ந்து வாழலாம். அத்தகைய நல்ல

மனைவியைப் பெறாதவர்க்குச் சிங்கம் நடப்பது போன்ற பீடுநடை இல்லை தலை குனிந்தே வாழ வேண்டும் என்பதை,

> “புகழ்புரிந்த இல்லில்லோர்க்கு இல்லை இகழ்வார்முன்
> ஏறுபோல் பீடு நடை”[12]

என்ற குறளால் விளக்குகின்றார். “சிங்கம் மிக்க வலிமையுடைய விலங்கு அதன் வலிமை, பகை விலங்குகளையும் நடுங்கச் செய்யும் தன்மை வாய்ந்தது. பெருவலிமை உடைய அரசனுக்குச் சிங்கத்தைக் காட்டாகக் கூறுவர் புலவர். சிங்கம் மலையும் மலைசார்ந்த குறிஞ்சி நிலப் பகுதியில் உள்ள மலைச்சாரல்களில் வாழும் இயல்புடையது இத்தகைய சிறப்பு வாய்ந்த விலங்கு, தன் நடையின் மூலம் வள்ளுவரையும் ஈர்த்துள்ளது என்பது அறியத்தக்கது. காடுகளுக்கு அழிவு நேராமையே இவற்றால் பெறும் பயன். ஆதலின், இவைகளை ‘வனச் செல்வங்கள்’ என்று இன்றும் போற்றுகின்றனர்”[13] என்பர் இல.செ.கந்தசாமி. “ஆண் சிங்கம் போல நடக்கச் சிலருக்கு முடியுமாம். யாருக்கு? மாண்புடைய மனைவியைப் பெற்றவருக்கு ஆண் சிங்கம்போல் நடக்க முடியுமாம்! யார் முன்னால்? தன் சினேகிதன் முன்னாலா? அல்ல தன்னை இகழ்பவன்முன் நடப்பான் என்று கூறுகிறார். இது எவ்வளவு பெரிய சிறப்பு! ஆனால் தம்மைத் தூற்றுகிறவர்முன் நல்ல மனைவியைப் பெறாதவனால் ஆண் சிங்கம் போல் நடக்க முடியாது என்று வள்ளுவர் வற்புறுத்திக் கூறிவிட்டார்”[14] என்பர் கி.ஆ.பெ.விசுவநாதம்.

பெண்கள் ஒழுக்கநெறியுடன் இருக்க வேண்டும் என்ற கருத்தினை வள்ளுவர் வலியுறுத்துகிறார். “இல்லறவியலில் கூறுகின்ற அறமே மனைத்தக்க மாண்பாகும். இல்லற ஒழுக்கமே இல்லாளின் ஒழுக்கமாதலின் அவளிடம் அவ்வொழுக்கமில்லாத போது இல்லறமே இல்லையாம். ‘தாஅனாட்டித் தனாது நிறுப்பாக’ இதனைப் பன்முறையும் உடன்பாட்டானும் எதிர் மறையானும் கூறி

வற்புறுத்துகிறார் வள்ளுவனார். பொருள் நாடி, இவன் உலகில் உழைக்கச் சென்ற போது இல்லிருந்து இல்லறம் நடத்துவாள் இவள் பெண்ணாதலின், அவளிடத்தே, மனைத்தக்க, மனைமாண்பு எனும் மனைமாட்சி இல்லாமற் போனால், இல்லறமே இல்லையாம். இவனிடத்தே மனை மாட்சியில்லாது போயினும், அவளிடத்தே அ.்.து உண்டாயின் அ.்.து போதும். அவ்விடத்தில் இல்லறம் சிறந்து விளங்கும். அவளிடத்தே இல்லற ஒழுக்கம் இல்லையானால் இவனை இகழ்வார் பலர் ஆவர். இவனது மனையாட்டி, இருவர்மாட்டும் நன்மை யமைந்த புகழ் வளருமாறு விரும்பி, இல்லறத்தை நன்கு நடத்தி வருவாளாயின், இல்லறம் தலை சிறந்து விளங்கும் அப்போது மனைமாட்சி இல்லாத மணாளனும், தன்னை இகழ்பவர் முன்னே, ஏறுபோலப் பெருமித நடை நடந்து செல்லலாம். இல்லாளிடத்தே மனைமாட்சி உள்ளதால், இகழ்வார் வாயெல்லாம் அடங்கும். அத்தகைய இல்லாளை இல்லாதவன் தன்னளவில் மனைத்தக்க மாண்புடையவனாய் உலகில் சிறந்தவனாய் விளங்கினாலும், இகழ்வார் முன் தலையிறங்கி மறைந்துதான் போய் வாழ்தல் வேண்டும்”[(15)] என்பர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார்.

ஒரு சமுதாயத்தில் நேரடிப் பாதிப்பை ஏற்படுத்துவது அரசியல். அரசியல் எல்லாவற்றிலும் கலந்தே காணப்படுகிறது. அத்தகைய அரசியல்தான் ஒரு சமுதாயத்தின் எழுச்சிக்கும் வீழ்ச்சிக்கும் முழுமுதற் காரணமாகிறது. ஒரு நாட்டின் அரசியல் ஆரோக்கியமானதாக இருந்தால்தான் அந்த நாட்டின் வளர்ச்சியும் மக்களின் வளர்ச்சியும் சிறப்பானதாக இருக்க முடியும். அதுமட்டுமன்றி பிற நாட்டு மக்களும் நம்பும்படியான, பாராட்டும் படியான அரசியல் நடவடிக்கைகள் அமைதல் வேண்டும். எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கின்ற, சமமாகப் பார்க்கின்ற அரசியலே தலைசிறந்த

அரசியலாகும். ஓர் அரசிற்கு இருக்க வேண்டிய ஆறு அங்கங்களை வரிசைப்படுத்துகிறார் வள்ளுவர். இதனை,

"படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும்

உடையான் அரசருள் ஏறு"(16)

என்கிறார். படையையும், குடிமக்களையும், உணவுப் பொருட்களையும், நல்ல அமைச்சர் குழாம்களையும், அண்டை நாடுகளுடனான நட்புறவையும், நாட்டைச் சுற்றிய அரணாகிய எல்லைப் பாதுகாப்பையும் கவனத்தில் கொண்டதாக அரசியல் நெறிகள் இருக்க வேண்டும். இந்நெறிகளை வகுத்துக் கொள்ளாத அரசு கையூட்டு, ஊழல், சகிப்புத்தன்மையின்மை, தீவிரவாதம், பசி, பிணி, பஞ்சம், கொலை, கொள்ளை, அந்நிய நாடுகளின் அவநம்பிக்கை, முதலானவற்றை எதிர்கொண்டாக வேண்டிய நிலைக்குத் தள்ளப்படும். இத்தகைய நிலை ஏற்படாமல் தடுப்பது அந்நாட்டின் தலைவனுக்குக் கடமையாகும்.

'இறை மாட்சி' என்ற அதிகாரத்தின் முதல் குறளில், மக்களைக் காப்பாற்றும் பொறுப்புள்ள அரசனை 'இறை' என்று கூறினார் வள்ளுவர். மன்னனை இறைவன் என்று பல குறட்பாக்கள் கூறுகின்றன. (எ.கா.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு

இறைஎன்று வைக்கப் படும்"(17)

'மாட்சி' என்பது 'சிறப்பு' என்று பொருள்படும். அரசனுக்குரிய ஆறு உறுப்புகளையும் கூறி, இவையனைத்தும் பெற்றிருப்பதே அவன் வெற்றிக்குக் காரணம் என்று கூறப்பட்டதாகும். வள்ளுவர் கூறும் 'ஏறு' என்ற சொல்லாட்சி 'பெருமித நடை', 'ஆளுமை' 'ஆண்மை' ஆகியவற்றைக் குறிப்பதற்காக எடுத்தாளப்பட்டிருக்கிறது என்பது புலனாகிறது.

**புலி**

காட்டில் வாழும் விலங்குகளில் ஊக்கமுடையது. சேந்தன் திவாகரத்தில் ‘கொடுவரி, உழுவை, குயவை, வேங்கை, வல்லியம், வயமா, புல், வயவரி’ என்றும், பிங்கல நிகண்டில் ‘வியாக்கிரம், வேங்கை, வியாளம், கொடுவரி’ என்றும் குறிக்கப்பெற்றுள்ளன. “கொடுவரி தாக்கி”(18) என்று கலித்தொகைக் குறிப்பிடுகிறது.

புலி ஆற்றல் வாய்ந்த விலங்கு. அது மரங்கள் அடர்ந்த காடுகளிலும், மூங்கில் நிறைந்த மலைச் சாரல்களிலும் வாழும் இயல்புடையது. மலைப் பிளவுகளிலும் கற்குகைகளிலும் பதுங்கியிருக்கும். இது யானை, மான் முதலிய பிற விலங்குகளை மறைந்திருந்து தாக்கும். புலியின் நகங்கள் மிகவும் கூரியதாக இருக்கும். இதன் பிடியிலிருந்து தப்புவது என்பது அரிய செயலாகும். காட்டில் பிற விலங்குகளைப் புலி தாக்குவதை,

“இருள்முகைச் சிலம்பின் இரைவேட்டு எழுந்த
பணைமருள் எருத்தின் பல்வரி இரும்போத்து
மடக்கண் ஆமான் மாதிரத்து அலறத்
தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு
நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி”(19)

என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

புலி தாக்க வருமாயின் அதனைக் கண்டு யானை அஞ்சும் என்று வள்ளுவர் கூறுகின்றார். புலி யானையை வேட்டையாடும் வீரத்தை அகநானூறு கூறுகிறது.(20) வலிய கருவியும் ஆள் துணையும் ஒன்று சேர்ந்து இருப்பினும் மனவலிமை இல்லாதவர்கள் வெற்றி பெற இயலாது. மனவலிமை உடையவர்கள் அத்தகைய துணை வலிமை இல்லையெனினும் வெற்றி

பெறுவார்கள் என்பதைப் புலியின் வாயிலாக வள்ளுவர் உணர்த்துகிறார். இதனை,

"பரியது கூர்ங்கோட்டத்து ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்"(21)

என்கிறார்.

பேராற்றல் வாய்ந்த புலி, மான்களையும் பன்றிகளையும் கொன்று தின்னும் கொன்ற விலங்குகளின் உடலை இழுத்துச் சென்று அது விரும்பும் இடத்தில் போட்டுத் தின்றுவிட்டு, எஞ்சியதை அப்படியே விட்டுச் செல்லும் இயல்புடையது. அவ்வாறு விட்டுச் சென்றதை மற்ற விலங்குகளும் பறவைகளும் உண்டு மகிழும். புலி பெரும் பசியால் வாடி வருந்துமாயினும் தன்னால் கொல்லப்பட்ட விலங்கு இடப்பக்கமாக வீழ்ந்து இறக்குமாயின் அதைத் தனது தோல்வியாகக் கருதி அதனை உண்ணாமல் விடுத்து, வலப்பக்கமாக வீழ்ந்து இறக்கும் விலங்குளையே உண்ணும் கொள்கை உடையது. இவ்வாறு தானும் உண்டு, எஞ்சியதைப் பிறவற்றிற்கும் பயனாகும்படி செய்கின்ற புலி போன்ற மனவலிமையும் சீரிய கொள்கையும் உடையவர்களோடு நட்புக் கொள்ள வேண்டும் என்பது புலவர்களின் அறிவுரையாகும். இதனை,

"புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
உரனுடையாளர் கேண்மையொடு
இயைந்த வைகல் உளவாகி யாரோ"(22)

என்று புறநானூறு கூறுகிறது. அகநானூறு 238ஆம் பாடலின் அடிகள் 'ஆமான் புலியால் வலப்பக்கத்தில் தாக்கப் பெற்று இறந்தது' என்ற செய்தியும், புறநானூறு 323ஆம் பாடலின் அடிகள் 'புலியால் ஆமான் கொல்லப்பெற்றது' என்ற செய்தியும் கிடைக்கின்றன.

தவ வலிமை இல்லாதவன் தவத்தினர்க்குரிய வலிய புறத் தோற்றங்களைக் கொண்டிருப்பது புலியின் தோலைப் போர்த்துக் கொண்டு பயிரை மேய்ந்து அழிவு செய்வது போன்றது ஆகும். இதனை,

“வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்

புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று”(23)

என்கிறார் வள்ளுவர். உலகில் வலிமையில்லாத சிலர் தங்களை மிகுந்த வலிமையுடையவர்கள் போல் காட்டிக் கொள்வார்கள். அவர்கள் புலியின் தோலைப் போர்த்துக் கொண்டு பயிர்களை மேயும் பசுப்போல, வல்லவர்களாய் நடித்துக் கொண்டே தீமைகளை, பெருமை தராத செயல்களைச் செய்வார்கள் என்பதைப் புலித்தோல் கொண்டு விளக்குகிறார் வள்ளுவர்”(24) என்பர் இல.செ.கந்தசாமி.

பசு தனக்குரிய புல்லை மேய்ந்து கொண்டிருக்கும் போது, அருகில் உள்ள பசுமையான பயிரைப் பார்த்து விடுகிறது. பசுவின் மனம் அலை பாய்கிறது. உடனே பசு புலித்தோலைப் போர்த்திக் கொண்டு நெல் வயல் பக்கம் சென்று பயிரை மேய ஆரம்பிக்கிறது. பசுவைப் புலி என்று நினைத்துப் பயந்து யாரும் அருகே செல்லவில்லை. புலி புல் தின்னப் போவதில்லை என்றே பலரும் நினைத்துவிட்டனர். மன உறுதி இல்லாதவன், மனம், புலன்களைக் கட்டுப்படுத்தாமல் புலன்கள் செல்லும் வழியில் மனத்தை செலுத்துபவன். மன உறுதியுடையவன் போல் தவக்கோலம் போடுகிறான். இது பசு புலித்தோல் போர்த்தி வலிமையான தோற்றத்தைக் கொண்டது போலாகும். மனத்தில் வலிமையில்லாமல், புலன்கள் போக்கி மனத்தைச் செலுத்துபவன், மன உறுதிக்கு எடுத்துக்காட்டாய் விளங்கும் தவசிகளைப் போல் கோலம் பூண்டிருப்பதால், மக்கள் நல்லவன் என்று நினைத்து ஏமாந்து

விடுவார்கள். தவசிதானே தவறான செய்கையில் ஈடுபட மாட்டார் என்றும் நினைத்து விடுவர்''[25] என்பர் சி.இராஜேந்திரன்.

'பெற்றம் புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு மேய்ந்தது' என்று கூறப்பட்டுள்ளது. இதில் 'பசு' என்ற சொல்லாட்சி காணப்படவில்லை. பெற்றம் என்றால் பசு என்று பொருள்படும். பெற்றம் என்றால் 'பசு' என்று கலித்தொகையும் குறிப்பிடுகிறது.[26] பெற்றதால் பெற்றரோர் என வழங்கப்படுவது போல், பசுவின் மடியிலிருந்து பால் பெற்றதினால் அப்பெயர் வழங்கப்பட்டுள்ளது. திரட்சியான மடியிலிருந்து பெற்றதினல் பெற்றஅம் பெற்றம் எனப் பெயர் பெற்றுள்ளது.

**நரி**

காட்டில் வாழும் தன்மையுடையது. நாயைப் போல் காணப்படுவது நரியாகும். நரியின் உடல் முழுவதும் நரைத்த வெளிர் பூத்த மஞ்சள் நிறத்தில் முடிகள் காணப்படும். நரி நரை என்பதன் அடியாகப் பிறந்தது. நரை என்பது மருவி நரி என வழங்கப்படுகிறது. நரி அதன் உடம்பிலுள்ள முடியால் பெற்ற பெயராகும். நரியில் சிறிய வகை குறுநரி என்றும், கூட்டமாகத் திரிவதால் கணநரி என்றும் அழைக்கப்படுகிறது. (நற் : 164:9, கலித்.65:25, அகம்.94:8, 337:15, 375:6, புறம்.: 359:3, 369:16, 373:37 பதிற். 22:35) புத்திக் கூர்மையுள்ள விலங்காகவும் ஏமாற்றும் தன்மையுடையதாகவும் அறியப்படுகிறது. உருவமும் வலிமையும் மிகக் குறைந்த விலங்கு. யானை சேற்றில் சிக்கிவிட்டால் அதனை எளிதில் நரி வென்றுவிடும். வலிமை குறைந்தவர்கள் கூட இடமறிந்து சூழலறிந்து செயல்பட்டால் எளிதாக வெற்றி பெற முடியும். அச்சம் அறியாதனவும், வேலேந்திய வீரர்களைக் குத்திக்கோத்த தந்தங்களை உடையனவும் ஆகிய ஆண் யானைகள், கால் அழுந்தும் சேற்று நிலத்தில் புகுமாயின் அற்ப நரியும் கொன்றுவிடும். இதனை,

“காலாழ் களரில் நரியடும் கண்ணஞ்சா

வேலாள் முகத்த களிறு”[27]

என்று வள்ளுவர் கூறுகிறார். இடனறிந்து செயல்பட்டால், வலியவனைக்கூட எளிதில் வென்றுவிடுவான் எளியவன் என்பதை எடுத்துக் கூறுகிறார்.

**யானை**

யானைகள் பண்டைக் காலத்தில் வேளாண்மைக்குப் பெரிதும் பயன்பட்டு வந்தன. ‘மாடு கட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல்லென்று யானைகட்டிப் போரடிக்கும் அழகான தென்மதுரை’ என்னும் இலக்கிய அடிகளால் நன்கு அறியலாம்.

சங்க இலக்கியத்தில் யானையைக் குறிக்க யானை, களிறு, வேழம், பிடி, கைவல்மான், ஒருத்தல், மா, கோட்டுமா, வாரணம், குஞ்சரம், நாகம், அடுமான், மதமா, கயமா, மலையமா, பகடு, இரும்பிணம், உம்பல், பிணிமுகம் எனும் பத்தொன்பது பெயர்கள் இடம் பெற்றுள்ளன. உரிச்சொல் நிகண்டு “தும்பி, கயம், கறையடி, குஞ்சரம், தோல், உம்பல், இடம், வேழம், கரி, அத்தி, பகடு, போதகம், வாரணம், தந்தி, உவா, களிறு, மாதங்கம், நாகம், கைம்மா”[28] எனப் பத்தொன்பது பெயர்களைக் குறிப்பிட்டுள்ளது.

யானை என்ற பெயர் அகண்டது பெரியது என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது. யானை நீண்டு உயரமாக இருப்பதால் நெடுநல்யானை[29] என்றும், கண்டோர் மலையென்று மருளும் உருவம் உடையதால்,

“வரை மருளும் உயர் தோன்றல்

வினை நவின்ற போர் யானை”[30]

என்றும், யானை கண்டோர் திகைக்கும் வண்ணம் பெரிதாக இருப்பது சுட்டப்பட்டுள்ளது. அதன் தோற்றத்தால் இடப்பட்ட பெயராக யானை என்பது

அமைந்துள்ளது. களிறு ஆண் யானையைக் குறிக்கும் பெயராகும். யானையின் சத்தத்தைப் பிளிரல் என்பர்.

வள்ளுவர், யானை என நான்கிடங்களிலும், களிறு என நான்கிடங்களிலும் ஆக எட்டுக் குறள்களில் யானையினை எடுத்தாள்கிறார். ஒரு குறளில் யானையின் ஊக்கமற்ற சிறுமையைப் புலப்படுத்திய வள்ளுவர், ஏனைய குறள்களில் அதன் பெருமையினை நிலைநாட்டியுள்ளார்.

ஊக்கமுடைமை அதிகாரத்தின் இரு குறள்களில் யானையைப் பற்றிக் குறிப்பிடப் பெறுகிறது. யானை அம்புகளால் புண்பட்டாலும் மனம் தளராமல் தன் பெருமையை நிலை நிறுத்தும். அதுபோல ஊக்கமுடையவர்கள் தம் உயர்வுக்கு அழிவு வந்த போதும் மனம் தளராமல் தம் பெருமையை நிலை நாட்டுவர். இதனை,

“சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பின்

பட்டுப்பாடு ஊன்றும் களிறு”(31)

என்று கூறுகிறார். போர்க்களத்தில் யானையானது பல அம்புகளால் புண்பட்டிருந்த போதிலும் தளராமல், தன் பெருமையை நிலைநிறுத்தும். ஊக்கமுடையவர்கள் தமது முயற்சிக்கு இடையூறுகள் வந்தாலும் மனம் தளராமல் செயல்பட்டுத் தமது பெருமையை நிலைநிறுத்துவார்கள்.

போர்க்களத்தில் யானை வீரத்துடன் போரிட்டுக் கொண்டிருக்கிறது. எதிரிகளை மிதித்துத் துவைத்துக் கொண்டிருக்கிறது. தான் மேற்கொண்ட செயல்மீது சிறிதும் கவனம் சிதறாமல், செயலாற்றிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதன்மீது கட்டுக்கட்டாய் அம்புகள் பாய்ந்திருக்கின்றன. ஆனாலும் அந்த ஆண் யானை முன்னிலும் வேகமாகப் போரிட்டுக் கொண்டிருக்கிறது.

தன் மீது அம்புகள் பாய்ந்ததைப் பற்றி அந்த யானை கவலை கொள்ளவில்லை.

மனத்தில் ஊக்கத்துடன் செயலாற்றுபவர்கள், தான் மேற்கொண்ட செயலை முறையுடன் செய்வார்கள். அப்படி ஒரு செயலைச் செய்யும் போது அதில் எந்தத் துன்பம் வந்தாலும், சற்றும் தளராமல் மேற்கொண்ட செயலைத் தொடர்ந்து செய்வார்கள் தோல்வி அடைய நேரிட்டாலும் அதைக்கண்டு துவண்டுவிட மாட்டார்கள். சிறப்பாக அதைச் செய்ய முயற்சிப்பார்கள். செய்து முடிப்பார்கள்.

அடிபட்ட யானை தளராது மேற்கொண்ட செயலை முன்னிலும் முனைப்புடன் செயல்படுத்தும். அதுபோல, மன உறுதி படைத்த, ஊக்கமுடன் உழைப்பவர்கள் எடுத்துக் கொண்ட செயலில் எந்தத் துன்பம் வரினும் சளைக்காமல் சிறப்பாகச் செய்வார்கள்.

யானை பருத்த உடம்பை உடையது கூர்மையான கொம்புகளை (தந்தங்கள்) உடையது. ஆயினும் ஊக்கமுள்ள புலி தாக்கினால் அதற்கு அஞ்சும். இதனை,

"பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை

வெரூஉம் புலிதாக் குறின்"(32)

என்கிறார் வள்ளுவர். யானை எல்லா விலங்குகளையும் விட பெரியது கூர்மையான தந்தங்களை உடையது. ஆனாலும் மனத்தில் ஊக்கமுடைய புலி தாக்கினால் அதற்கு அஞ்சும். விலங்குகளில் யானைதான் மிகப் பெரியது. அதைவிட உயரமான விலங்குகள் இருந்தாலும் உருவத்தில், வலிமையில் பெரியது யானைதான். உருவத்தில் மட்டுமல்ல, கூர்மையான தந்தங்களையும் பெற்றுள்ளது. ஆனாலும் அது புலியிடம் மோதுதல் இயலாது.

புலி உருவத்தில் சிறியது. அதனிடம் நீண்ட தந்தம் போன்ற தாக்கும் கருவிகளில்லை. அதன் நகங்கள் சிறியது. ஆனால் கூர்மையானது, வலிமையானது. இப்படிப்பட்ட மனவலிமையுள்ள புலியைக் கண்டவுடன், உடல் வலிமை உள்ள யானை அச்சப்படும். ஒதுங்கி வேறு பக்கமாக மோதாமல் சென்றுவிடும். மனத்தில் உறுதியுடனும் ஊக்கத்துடனும் செயல்பட்டால் பகைவர் வலிமையுடன் இருந்தாலும் வெற்றி பெற முடியும். செயல்கள் பெரிதாக இருந்தாலும், மன வலிமையுடனும் ஆர்வத்துடனும் செயல்பட்டால் எடுத்துக் கொண்ட செயலை, தடைகள் பல வந்தாலும் வெற்றிகரமாகச் செய்ய முடியும். உடல் வலிமையைவிட மன வலிமையும் ஊக்கமும் இருந்தால் வெற்றி நிச்சயம் கிடைக்கும்.

ஊக்கமுடையவனின் செயலுக்கும் ஊக்கமில்லாதவன் செயலுக்கும் யானையை உவமை காட்டியிருப்பது மாறுபாடாகத் தெரிகிறது. யானை இயற்கையிலேயே பெருவலிமை பெற்றிருந்தும் பிற உயிர்களைத் தாக்கும் நிலை அதற்கு இல்லை என்பதும் ஆனால் எதிர்க்க நேர்ந்து சினம்கொண்டு போருக்குப் பயிற்றுவிக்கப்பட்ட யானை தன் ஊக்கத்தில் சிறிதும் குன்றாது நின்று போர் புரியும் என்பதும் புலனாகிறது.

புலிக்கும் யானைக்கும் உள்ள வேறுபாடுகளை அவை உண்ணும் உணவின் மூலம் அறிந்து கொள்ளலாம். புலி இறைச்சி உண்ணும் இயற்கை உடையதாயிருப்பதால் பிற விலங்குகளின் மீது பாய்ந்து செல்ல வேண்டிய இன்றியமையாமை அதற்கு இயல்பாய் அமைந்திருக்கின்றது. யானை தழையுண்ணும் விலங்காதலின் இந்நிலை அதற்கில்லை. புலி நன்மை செய்தார், தீமை செய்தார் என்ற பாகுபாடின்றி எதிர்ப்பட்ட அனைவரையும் கொல்லும், யானை அங்ஙனமின்றித் தனக்குத் தீமை செய்தாரையே அறிந்து தீமை செய்யும் இயல்புடையது.

யானை புலிக்கு அஞ்சும் என்று சொல்லிய போதும், யானைக்கும் புலிக்கும் காட்டில் அடிக்கடி சண்டை ஏற்படும் என்பதும், யானை தன் நீண்ட கொம்புகள் சிவப்பேறும்படி புலியைக் குத்திக் கிழிக்கும் என்பதும் சங்க இலக்கியங்களில் காணப்படும் செய்தியாகும்.(33) இதனை,

"மறங்கொள் இரும்புலித் தொல்முரண் தொலைத்த
முறஞ்செவி வராணம்"(34)

என்ற கலித்தொகை அடிகள் இதனைத் தெளிவுறுத்தும்.

படைச்செருக்கு அதிகாரத்தில் இரண்டு குறளில் யானையை எடுத்தாள்கிறார். உயர்ந்த வீரமுடைய படையே செருக்குடையது என்ற கருத்தினை அவ்வீரனின் வாய்மொழியாகக் கூறுகிறார் வள்ளுவர். இதனை,

"கானமுயல் எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது"(35)

என்று குறிப்பிடுகிறார். காட்டு முயலைக் குறி தவறாமல் எய்து வீழ்த்திக் கொன்ற அம்பை ஏந்துவதைக் காட்டிலும், யானை மேல் எறிந்து குறி தவறிய வேலைத் தாங்குதல் சிறந்தது. இதனால் வீரனுடைய எண்ணம் உயர்ந்து விளங்க வேண்டுமே தவிர தாழ்ந்து செல்லக் கூடாது என்பது கருத்து. அடைவது எளிதல்ல எனினும், இலட்சியம் உயர்ந்து நிற்க வேண்டும் என்பதை வலியுறுத்தி நிற்கின்றன.

அடர்ந்த காட்டில் வேட்டையாடித் தேடிச் செல்லும் போது முயல் ஒன்று தென்படுகிறது. அதைக் குறி தவறாமல் அடித்து வீழ்த்தி விடுகிறான் வெற்றி பெறுகிறான். வேட்டையாடச் சென்ற மற்றொருவன் கருத்த பெரிய, கூர்மையான தந்தங்களை உடைய யானையைக் குறி வைத்துக் கையில் உள்ள வேலால் தாக்குகிறான். யானை சினத்துடன் அவனை எதிர்கொள்கிறது. மீண்டும் தாக்கிப் பாய்கிறான். யானை மேல் பட்ட வேல்,

அதைக் கீழே வீழ்த்தாமல் தரையில் விழுகிறது. தனது முயற்சியில் தோல்வியுறுகிறான்.

பயந்து நடுங்கி ஓடும் சிறு முயலை அடித்துக் கொன்றது உண்மையான வெற்றியல்ல வலிமை மிகுந்த யானையை எதிர்கொண்டு நெஞ்சில் உறுதியுடன் தாக்கி, முடிவில் தோல்வியடைந்தாலும் அது தான் பெருமை. அதில்தான் உண்மையான வெற்றி அடங்கியுள்ளது.

தோற்றவன் வெற்றியாளன் ஆகிறான். வெற்றி பெற்றவன் பெற்றது வெற்றியே அல்ல. போரில் புறமுதுகிட்டு ஓடும் கோழையைத் துரத்தி வீழ்த்துவதைவிட எதிர்த்து வரும் வீரனிடம் சண்டையிட்டுத் தோற்பதுதான் பெருமை. வெற்றி பெறுவதும், தோல்வி அடையவதும் முடிவைப் பொறுத்தல்ல, எடுத்துக்கொண்ட இலக்கைப் பொறுத்து இருக்கிறது. பெருமையும், சிறுமையும் எடுத்துக்கொண்ட செயல்களின் தன்மையைப் பொறுத்தது. முடிவில் அடையும் வெற்றி தோல்வியைப் பொறுத்தல்ல என்பது புலனாகிறது.

தன் கையில் இருந்த வேலை ஒரு யானையின் மேல் எறிந்து துரத்திவிட்டு, வருகின்ற களிற்றுக்கு வேல் நாடித் திரிபவன், தன் மார்பில் தைத்திருந்த வேலைக் கண்டு பறித்து மகிழ்ச்சியடைவான். இதனை,

“கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்

மெய்வேல் பறியா நகும்”(36)

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. ஒரு யானையைக் கொல்லும்படி கையிலுள்ள வேலை எறிந்துவிட்டு, வேறு ஒரு யானையின் மீது எறிய வேலைத் தேடி அலைபவன் தனது மார்பில் குத்தியுள்ள வேலைக் கண்டு அதைப் பிடுங்கிக் கொண்டே மகிழ்வான்.

யானைப் போரில் வீரமும் நெஞ்சுறுதியும், வேல் எறிவதில் மிக்கத் திறமையும் வாய்ந்த வீரன் போர்க்களத்தில் கையில் கூரிய வேலுடன் நிற்கிறான். அவனைத் தாக்க யானை ஒன்று வேகமாக வருகிறது. தன் கையில் உள்ள வேலை அந்த யானையைத் தாக்கி அந்த வீரன் வீழ்த்துகிறான்.

ஒரு யானையை வீழ்த்திவிட்டு திரும்புகையில், வேறு ஒரு யானை எதிர் வருகிறது. அதைத் தாக்க கையில் வேலில்லை. அப்போது, தன்னுடம்பில் பாய்ந்திருக்கும் வேலை எடுத்து, எதிரே வரும் யானையைத் தாக்க தனக்கு வேல் கிடைத்த மகிழ்ச்சியில் அதை மார்பிலிருந்து பிடுங்கி யானையைத் தாக்குகிறான். யானை வீழ்கிறது. அதைப் பார்த்ததும் மனத்தில் ஒரு மகிழ்ச்சி ஏற்படுகிறது.

பெரிய இலக்கை எட்டும் போது, வரும் துன்பங்கள் ஏதும் தெரியாது. எடுத்துக் கொள்ளும் இலக்கு எப்போதும் பெரிதாக இருக்க வேண்டும்.

வினைசெயல்வகை என்ற அதிகாரத்தில், ஒரு வினையைச் செய்கின்ற காலத்தே அவ்வினை அதனோடு தொடர்புடைய பல வினைகளைச் செய்ய தூண்டும்படி செய்யப்படுகின்றன. காட்டில் யானைகளைப் பிடிக்க விரும்புவார், முதற்கண் முயன்று பிடித்த ஒரு யானையைப் (கும்கி) பழக்கிய பிறகு அதனைக் கொண்டு பல யானைகளைப் பிடித்தல் வழக்கமாகும்.

ஒருவர் தாம் செய்யும் செயலால் அதைப் போன்ற மற்றொரு செயலைச் செய்து முடித்துக் கொள்ள வேண்டும். அச்செயல் மதங் கொண்ட யானையைக் கொண்டு மற்றொரு யானையைப் பிணைத்தது போன்றதாகும். இதனை,

"வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்

யானையால் யானையாத் தற்று"[37]

என்கிறார் வள்ளுவர். "யானைக் கொண்டு யானையைப் பிடிப்பது போன்று ஒரு தொழிலைக் கொண்டு மறு தொழிலினையும் முடித்துக் கொள்ள வேண்டுமென்று அறிவுறுத்தும் கருத்து ஆழ்ந்து சிந்திக்க வேண்டியதொன்றாகும்"[38] என்பர். 'யானையால்' என்று கூறாமல், 'நனைகவுள் யானை' என்றார். 'நனைகவுள் யானை' என்றால் 'மதம்பிடித்த யானை' என்று பொருளாகும்.

யானையால் வேறொரு யானையைப் பிடிப்பது போல ஒரு செயலைத் தொடங்கியவன் அச்செயலாலேயே வேறொரு செயலையும் செய்து முடித்துக் கொள்வான். பெருங் குழிகள் வெட்டி வைத்து அதன்மீது புற்களைப் பரப்பியும், நேரடியாக விரட்டியும், வேட்டையாடியும் பிடிப்பதுண்டு. பிடித்து வந்த யானையைப் போருக்காவும், பிற வேலைகட்காகவும் பழக்குவர். யானையைப் பழக்கப் பாகர்கள் குறியீட்டுச் சொற்களைப் பயன்படுத்துவர். அதனை அடக்குவதற்கு அங்குசம் என்ற கருவியைப் பயன்படுத்துவர்.

யானை அறிவு நிறைந்த விலங்கு. யானையை அறிவுடை மக்களோடு ஒப்பக் கருதுவர். இத்தகைய பெருஞ் சிறப்புடைய யானை மதம் பிடித்துக் கொண்டால் அதன் கண்களைத் திரையிட்டு மறைத்து விடுவார்கள். பருவ மங்கையர் தங்கள் மார்பைத் துணியிட்டு மறைப்பது, களிற்றின் கண்களைத் திரையிட்டு மறைப்பது போன்றது என்று வீரச் சுவையுடைய யானையின் செயலை இன்பச் சுவைக்கு எடுத்துக்காட்டாக்குகிறார் வள்ளுவர். இதனை,

"கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்

படாஅ முலைமேல் துகில்"[39]

என்கிறார். பெண்ணின் சாயாத மார்பகங்களின் மேல் இட்ட ஆடை மதம் கொண்ட ஆண்யானையின் மீது அணிந்த முகப்படாம் போல இருக்கும். யானையின் இரு மத்தகங்கள் முகத்தில் பருத்துத் திரண்டு இருக்கும். அந்த மத்தகங்களை மறைக்கவும், யானைக்கு அழ கூட்டவும் முகப்படாம் போர்த்தப்பட்டிருக்கும்.

முகப்படாம் போர்த்தப்பட்ட யானை முகம் அழகுடையதாகவும், பார்பவனின் மனத்தில் ஓர் அச்சத்தைத் தரக்கூடியதாகவும் இருக்கும். அதன் முகப்படாம் யானைப்பாகனைத் தவிர யாரும் தொட முடியாத இடத்தில் இருக்கும்.

கன்னிப்பெண் பருத்துத் திரண்ட சாயாத மார்பகத்தை உடையவள். அதன் மேல் அவள் அணிந்திருக்கும் மார்புக் கச்சையைப் பார்த்தால், முகப்படாம் போர்த்தப்பட்ட யானையின் மத்தகத்தை நினைவுப்படுத்துகிறது.

காதலன் தவிர யாரும் தொட முடியாதது மார்புக்கச்சை, யானைப் பாகன் தவிர யாரும் தொட முடியாத மத்தகங்கள். ஆனால் முகப்படாம், யானையைத் துன்பத்திலிருந்து காப்பாற்றும். மார்புக்கச்சை எதிரே நிற்பவனின் துன்பத்தைக் குறைக்கும், மனத்தில் இன்பத்தை, கிளர்ச்சியை ஏற்படுத்தும்"[40] என்பர் சி. இராஜேந்திரன்.

யானை பற்றிய வேறொரு செய்தியைப் 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரத்தில் விளக்குகிறார். தன் கையில் பொருள் கொண்டு ஒருவன் ஒரு செயலைச் செய்தல் மலை மீது ஏறி நின்று யானைகள் போர் புரிவதை அச்சமின்றிக் காண்பது போன்றதாகும். இதனை,

"குன்றேறி யானைப்போர் கண்டாற்றல் தன்கைத்தொன்று

உண்டாகச் செய்வான் வினை"[41]

என்று வள்ளுவர் கூறுகிறார். கையில் பொருளை வைத்துள்ளவர் தாம் எண்ணிய வினை இனிது நிறைவேற வேண்டுமெனின் அதனைத் தகுதியாரிடம் ஒப்படைத்து விடுகிறார்கள். வேண்டிய பொருளை வேண்டியாங்கு அவர்களுக்கு வழங்கி விடுகிறார்கள். பின்னர், அந்தச் செயலை செய்யும் போது ஏற்படும் சிக்கல், தொல்லை, துன்பம், வேதனை அனைத்தும் அந்த ஏவலாளர்களே ஏற்று இறுதியில் ஒழுங்காக அச்செயல் முடிக்கப்படும். பொருள் கொடுத்தவர் எவ்விதக் கவலையும், அச்சமும் இன்றி இருந்த இடத்திலே இருந்து கொண்டு, தாம் பணித்த வினை செயல்பட்டு வருவதைக் கவனித்துக் கொண்டே இருந்து, இறுதியில் அச்செயல் நன்கு நிறைவேறுவதைக் கண்டு வெற்றி மகிழ்ச்சியில் திளைக்கிறார்கள்.

தாம் மலையுச்சியில் இருந்து கொண்டு, மலையடிவாரத்தில் நடைபெறும் யானைப்போர்க் காட்சியைப் பாதுகாப்புடன் கண்டு களிக்கும் தன்மையும், கையில் பெரும் பொருள் வைத்துக் கொண்டுள்ளவர்கள் எந்த ஒரு செயலையும் அதனைச் செய்து முடிக்க வல்லவர்களிடம் விடுத்து தாம் எவ்விதத் துன்பமும், அச்சமும், கவலையும் இன்றி அச்செயல் இனிது நிறைவேறி வருதலைக் கண்டு மகிழும் தன்மையும் ஒருவாறு ஒத்திருத்தலை உணர்த்துகிறார் வள்ளுவர்.

பண்டைக் காலத்தில், யானைப்போர் நடந்ததையும், அதனை மக்கள் பாதுகாப்பான இடத்திலிருந்து கண்டு களித்ததையும் குறளின் வழி அறியமுடிகிறது. இன்றும் யானைத் திடல் என்றும் கரிமேடு என்றும் பல ஊர்களில் இருப்பது யானைப்போரின் எச்சங்களாகும்.

அச்சம் அறியாதனவும், வேலேந்திய வீரர்களைக் குத்திக்கோத்த தந்தங்களை உடையனவும் ஆகிய ஆண் யானைகள், கால் அழுந்தும் சேற்று நிலத்தில் புகுமாயின் அற்ப நரி கொன்றுவிடும். இதனை,

“காலாழ் களரில் நரியடும் கண்ணஞ்சா

வேலாள் முகத்த களிறு”[42]

என்று வள்ளுவர் கூறுகிறார். இடனறிந்து செயல்படவில்லை என்றால், வலியவனை எளியவன் வென்று விடுவான் என்ற கருத்துப் பெறப்படுகிறது.

**குதிரை**

சங்க இலக்கியத்தில் குதிரையைக் குறிக்க ‘மா, குதிரை, கலிமா, கடுமா, பரி, பாய்மான், இவுளி, வரியுளை, நன்மா’ போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. குதிரை என்பது பொதுப்பெயராகச் சுட்டப்பட்டுள்ளது. குதிரை என்பதற்கு “குதிப்பது அல்லது தாண்டுவது”[43] என்பர் ஞா.தேவநேயன். இதனை,

“விட்ட குதிரை விசைப்பி னன்ன

விசும்பு தோய் பசுங்குழை”[44]

என்ற குறுந்தொகைப் பாடலால் அறிய முடிகிறது. குதிரை ‘மா’ என்னும் பொதுப் பெயராலும், அதன் செயல், உருவம், நிறம் ஆகியவற்றின் அடிப்படையிலும் பெயர் பெற்றுள்ளது. மக்களின் வாழ்க்கைக்குப் பல்வேறு வகைகளில் அவை உதவியதால் குதிரைக்குப் பல்வேறு பெயர்கள் வழங்கப் பெற்றுள்ளன. போர்த்தொழில் வல்ல குதிரைகள் “வினை மாட்சிய விரை புரவி”[45] என்று புறநானூறு சுட்டுகிறது. அக்காலத்தில் குதிரைகள் பெரிதும் போருக்குப் பயன்படுத்தப்பட்டன. நால்வகைப் படையுள் குதிரைப் படையும் ஒன்று என்பது குதிரைகளின் சிறப்புக்குச் சான்றாகும். போருக்குப் பயன்படுத்தப்படும் குதிரைகள் நன்கு பழக்கப் படுத்தப்பட்டனவாக இருக்கும். யானைகளைப் பயிற்றுவிப்பவர்களைப் ‘பாகர்கள்’ என்றும், குதிரைகளைப் பழக்குபவர்களை ‘வாதுவர்கள்’ என்றும் (மணி.கச்சி மாநகர் புக்க காதை) மணிமேகலைச் சுட்டுகிறது.

போர் வந்தபோது போர்க்களத்தில் தள்ளிவிட்டு ஓடும் (பயிற்சியில்லாத) அறிவற்ற குதிரை போன்றவரின் உறவைவிடத் தனிமையே மிகவும் சிறந்தது. இதனை,

"அமரகத்து ஆற்றருக்கும் கல்லாமா அன்னார்

தமரின் தனிமை தலை"[(46)]

என்கிறார் பொய்யாமொழிப் புலவர். வீரன் ஒருவன் போர்க்களத்தில் போரிட்டுக் கொண்டிருக்கும் போது அவனது குதிரை அவனைக் கீழே தள்ளிவிட்டு ஓடுவிடுவது போலத் தீய நண்பர்களும் தக்க சமயத்தில் கைவிட்டு விடுவார்கள். எனவே தீய நண்பர்களிடம் பழகுவதைவிட, தனித்து இருப்பது தலை சிறந்தது என்கிறார் வள்ளுவர். வீரனைக் கீழே தள்ளிவிட்டு ஓடிவிடும் குதிரையின் செயலைத் தீய நட்பினருக்கு உவமையாக்கியுள்ளார்.

'மா' என்பது விலங்குகட்கெல்லாம் பொதுச் சொல்லாயினும், இங்குக் குதிரையைக் குறிப்பதாக உரையாசிரியர் கூறுகின்றனர். கல்லாமா என்பது, போர்க்களப் பயிற்சி அளிக்கப்படாத போர்த்தொழில் பழகாத விலங்கு என்பது பொருளாகும். யானைக்கும் மா என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் பயின்ற வந்துள்ளது. மலைபோன்ற உருவத்தையுடைய யானை 'மலையமா' (நற்.77:1) என்றும், மதத்தை உடைய விலங்கு 'மதமா' (பரி:20:19) என்றும் கூறப்பட்டுள்ளதும் ஒப்புநோக்கத்தக்கது. போர்க்களத்தில் யானைப்படையும் உண்டு என்பதும் பெறப்படுகிறது.

பகடு (எருது)

பசுவினத்தில் ஆணினத்தைக் குறிப்பதற்குப் பகடு, விடை, காளை, ஏறு, எருது போன்ற பெயர்களும் இடம்பெற்றுள்ளன. பகடு என்பது எருதினைக் குறிக்கும் சொல்லாகும். பகடு என்பதற்கு அகலம் என்று பொருள். புறநானூற்றில் 'பகட்டெழில் மார்பன்' (புறம்.13:3) என்பதற்கு அகன்ற அழகிய

மார்பு எனப் பொருள் சுட்டப்பட்டுள்ளது. எனவே பகடு அகன்ற பெரிய காளையைக் குறிக்க வழங்கிய சொல்லாகும். பட்டினப்பாலையில் 'பகட்டெருத்தில் பல சாலை' (பட்.52) என்பதில் பகடு பெரிய என்ற பொருளில் குறிக்கப் பெறுகிறது. வயலின்கண் உழவர்கள் அறுத்துப் போட்ட ஆம்பலின் பூக்களைக் கன்றை ஈன்ற பசுவானது தின்றது. அதன் மிச்சத்தை, உழுதுவிட்டு ஓய்ந்த நடையை உடைய எருது தின்பதை,

"வயல்வெள் ஆம்பல் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
ஓய்விடு நடைப்பகடு ஆரும்"(47)

என்ற நற்றிணைப் பாடலடிகளால் அறியலாம். நீர் இல்லாத பாலை நிலத்தின் அரிய வழியில், சகடத்தை இழுத்துச் செல்லும் எருதுகளை அகநானூறு,

"கொடுங்கோல் உமணர் பகடுதெழி தெள்விளி"(48)

என்று குறிப்பிடும். பகடு வண்டி இழுக்கவும், உழவிற்கும் பயன்பட்ட எருதினைக் குறிக்க வழங்கிய சொல்லாகும்.

எருதுகள் தளராத முயற்சியுடையன. வண்டியை இழுத்துச் செல்லும் எருதுகள் சேற்று நிலமாயினும், மேடாயினும், பள்ளமாயினும், மணற்பாங்கான பகுதியாயினும் முயற்சியோடு அவைகளைக் கடந்து செல்லும் ஆற்றலுடையன. வண்டியை இழுக்கும் பொழுது இரண்டு எருதுகளும் ஒருங்கு இணைந்தும், மூக்குகள் நிலத்தினைத் தொடும் அளவிற்கு மிகக் குனிந்தும், கால்களை மடக்கி வைத்தும் இழுத்துச் செல்லும் என்பதை,

"மருங்குஒற்றி மூக்கு ஊன்றித்தாள் தவழ்ந்து வாங்கி"(49)

என்று சீவக சிந்தாமணி தெரிவிக்கின்றது. இடுக்கண் அழியாமை என்ற அதிகாரத்தில் காளையின் உயர் குணத்தை வள்ளுவர் கூறுகிறார். இதனை,

“மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற

இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து”(50)

என்று கூறுகிறார்.

காளை பார வண்டியை இழுத்துச் செல்ல நேருங்காலை மணல், சேறு, மேடு முதலிய தடைகள் நேர்ந்த போதெல்லாம் முயன்று இழுத்துச் செல்லும். அதுபோலக் கலங்காதவனை அடைந்த துன்பம் துன்பப்பட்டு ஓடிவிடும் என்கிறார்.

உழவுக்குத் தனி அதிகாரம் வகுத்துள்ளார் வள்ளுவர். உழவுத் தொழிலின் மேன்மையை,

“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர்மற் றெல்லாம்

தொழுதுண்டு பின்செல் பவர்”(51)

என்கிறார். உழுதுண்டு வாழ்பவரே வாழ்பவராவர். ஏனைய தொழில்களைச் செய்பவர் அவரை வணங்கி அவர்களின் பின்னால் செல்பவரேயாவர். இத்தகைய உழவுத் தொழிலுக்கு மிகவும் இன்றியமையாதது காளை யாகும். ஏற்றம் இரைப்பதற்கும் உழுவதற்கும் மட்டும் அல்ல அவைகளின் சாணம் கூட எருவாகப் பயன்படுகிறது. எருவின் முக்கியத்துவத்தை உணர்த்த வந்த வள்ளுவர், ‘ஏரினும் நன்றால் எருவிடுதல்’ என்கிறார். வேளாண்மை செய்வதற்கு எருதுகளின் பங்கு முக்கியத்துவம் பெறுகிறது.

**பசு**

சங்க இலக்கியத்தில் பசுவில் பெண்ணைக் குறிக்க ‘ஆ, ஆன், கறவை, சேதா, மூதா, பெற்றம், நாகு, கோ’ போன்ற பெயர்கள் வழங்கப்பட்டன. ஆ என்ற பெயர் பசுக்கள் எழுப்பும் ஒலியினால் அமைந்த பெயராகும். அவை கூட்டமாக இருந்ததால் நிரை என்றும் அழைக்கப்பெற்றன.

பசு செல்வமாக (மாடு) மதிக்கப்பட்டதால் உயர்வு கருதி ‘கோ’ (கலித்.103:37, 167:3) என வழங்கப்பட்டுள்ளது. (கோஅரசன் என்ற சொல்லாட்சியும் உண்டு) பசுவிடம் பால் கறப்பதால் கறத்தல் என்னும் தொழில் ஆகுபெயராய் பசுவிற்கு ஆகி வந்துள்ளது. பசுக்கள் மாலை நேரத்தில் தம் கன்றுகளை நினைத்து வீடு திரும்புவதை,

“மழைவிளை யாடுங் குன்றுசேர் சிறுகுடிக்

கறவை கன்றுவயிற் படரப் புறவிற்”(52)

என்று குறுந்தொகையின் பாடலடிகளின் வழி அறியலாம்.

பசுக்கள் செல்வமாகக் கருதப்பட்டதினால், அவைகளுக்கு உணவிடுதலும், தண்ணீர் கொடுப்பதும் இன்றும் மக்களிடையே தொடர்கிறது. தெரு வழியாக வரும் பொழுது மக்கள் அவைகட்குத் தண்ணீர் வைக்கிறார்கள். அத்தண்ணீரும் தங்கள் முயற்சியால் கொணர்ந்தாக இருக்க வேண்டும். இரந்து பெற்றுக் கொடுத்தல் இழிவாகும் என்று கூறுகிறார் வள்ளுவ ஆசான். இதனை,

“ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு

இரவின் இளிவந்தது இல்”(53)

என்கிறார். பசுக்கள் பால் மற்றும் இறைச்சிக்காக வளர்க்கப்படுகின்றன. அவை ஏர் உழுவதற்கோ, ஏற்றம் இறைப்பதற்கோ, வண்டி இழுப்பதற்கோ பயன்படுத்தப்படவில்லை. “அரசன் செம்மையாக ஆட்சி செய்யான் எனின் பசுக்கள் தரும் பயன் குறைந்து விடும் என்று வள்ளுவர் கூறுகின்றார். செங்கோல் செலுத்தப்படவில்லை எனில் பருவமழை குன்றிவிடும் என்பதும் பொதுவாக அன்றிருந்த கொள்கையாகும். மழையின்றேல் பசும்புல்லும் முளைப்பது அரிதாகிவிடும். மேய்ச்சல் நிலங்களில் பசுக்களுக்கு வேண்டிய பசும்புல் இல்லை எனில் இயல்பாகவே பயன் குன்றிவிடும். அன்றியும் பால்

தரும் பசுக்களுக்குப் பசும்புற்களே நல்ல தீவனமாகும் என்பதையும் கருத்திற்கொண்ட வள்ளுவர், 'காவலன் காவான் எனின் ஆ பயன் குன்றும்' என்று சுருங்கச் சொல்கின்றார். பசுக்கள் கயிற்றை அறுத்துக் கொண்டு பசிய பயிர்களை மேய்ந்து விடுதலும் உண்டு என்பதைக் குறள் கூறுகின்றது"[54] என்பர் இல.செ.கந்தசாமி.

துவ வலிமை இல்லாதவன் தவத்தினர்க்குரிய வலிய புறத் தோற்றங்களைக் கொண்டிருப்பது பசு, புலியின் தோலைப் போர்த்துக் கொண்டு பயிரை மேய்ந்து அழிவு செய்வது போன்றது ஆகும். இதனை,

"வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று"[55]

என்கிறார் வள்ளுவர். 'பெற்றம் புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு மேய்ந்தது' என்று கூறப்பட்டுள்ளது. பெற்றம் என்றால் பசு என்று பொருள்படும்.

**ஆடு**

சங்க இலக்கியத்தில் ஆடு என்பது பொதுப் பெயராகச் சுட்டப்பட்டுள்ளது. ஆட்டினைக் குறிக்க 'ஆடு, வெள்ளை, துருவை, தகர், மை' போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஆடு அதன் தலையாட்டத்தினால் வந்த பெயராகும். சங்க இலக்கியத்தில் ஆடுகின்ற தலையை உடையது என்றே கூறப்பட்டுள்ளது. "ஆடுதலைத் துருவின்"[56] என ஆடுகின்ற தலையை உடைய செம்மறியாடு குறிக்கப்பட்டுள்ளது. "யாடுடையிடை மகன்"[57], "யாடு பரந்தன்ன மாவின்"[58], "பல்யாட்டின் நிரை"[59] என குறிக்கப்பட்டுள்ளது.

‘தகர்’ செம்மறியாட்டைக் குறிக்கும் சொல்லாகும். ‘தகர்’ என்பது தகர்தல், பெயர்தல், அதாவது இடம்விட்டு இடம் பெயர்தலாகும். செம்மறியாடுகளை மேய்ப்பதற்காக ஓரிடம் விட்டு, மற்றொரு இடத்திற்கு ஓட்டிச் செல்வர். இன்றும் ஆடு மேய்ப்பவர்கள் இடம் பெயர்தலைக் காணலாம். தொல்காப்பியர் ஆட்டில் ஆணுக்குரியதாக,

“மோந்தையுந் தகரும் உதளும் அப்பரும்
யாத்த என்ப யாட்டின் கண்ணே”(60)

என்கிறார்.

“மேழகத் தகரொடு சிவல் விளையாட”(61)

“ஏழகத் தகரொடு உகளும் முன்றில்”(62)

“ஏழகத் தகரொடு எகினம் கொட்கும்”(63)

என கௌதாரி, நாய் ஆகியவற்றுடன் விளையாடும் செம்மறிக் கிடாய்கள் சுட்டப்பட்டுள்ளன. தகர் அதன் செயலால் இடப்பட்ட பெயராகும். தகர் என்ற சொல்லை வள்ளுவர் பயன்படுத்தியுள்ளார். வலிமையுடைய அரசன் தக்க காலம் பார்த்து ஒடுங்கியிருப்பது போர் செய்கின்ற ஆட்டுக்கிடாய் தன் பகையான கிடாயை மோதி அழிப்பதற்குப் பாயும்முன் பின்னே கால் பெயரும் தன்மையதாகும். இதனை,

“ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து”(64)

என்கிறார் வள்ளுவர். இரண்டு ஆட்டுக்கிடாய்கள் போரிடும் போது, திடீரென்று இரண்டும் பின் வாங்கும். அவ்வாறு பின் வாங்குவது தோற்பதற்கோ, சோர்ந்து போவதற்கோ அல்ல. மேலும் வலிமையோடு மோத அவைகள் அவ்வாறு பின் வாங்குகின்றன. (தற்கால கருவிகளில் (துப்பாக்கி, ஏவுகணை) பின்னோக்கி

விசையை அழுத்த செலுத்தப்படுபவை (குண்டுகள்) முன்னோக்கி வேகமாகப் பாய்கின்றன).

வலிமையும் ஆற்றலும் உடையவர்கள் தங்கள் பகைவருக்கு அஞ்சி, அடங்கி, ஒடுங்கி இருப்பதைப் போல் தோற்றமளிப்பார்கள். அவர்கள் அவ்வாறு காட்டிக் கொள்வது பகைக்கு அஞ்சி அல்ல. ஆட்டுக்கிடாய் பின் வாங்குவது போலப் பின் வாங்கிப் பின் பகையை ஒழிப்பார்கள். "அக்கால மக்கள் போர் புரிவதில் மிகவும் நாட்டங் கொண்டவர்கள். மனிதர்களிடையே போர் புரிய வாய்ப்பில்லாத போது சேவல்களையும், ஆட்டுக்கிடாய்களையும் ஒன்றோடொன்று மோதவிட்டு வேடிக்கை பார்ப்பது அவர்களது வழக்கமாகும். அத்தகைய காட்சிகளை வள்ளுவரும் கண்டுள்ளார்"[(65)] என்பர் இல.செ.கந்தசாமி.

**கவரிமாவும் பிணையும்**

மான் மாட்சிமை, அழகு என்ற பொருளில் பெயர் வழங்கப்பட்டுள்ளது. மான் என்ற சொல் மானினத்தின் பொதுப் பெயராகும். மானின் மென்மைத் தன்மையும், மருண்ட நோக்கும், அழகும் பெண்களுடன் ஒப்பிடப்படுவதால், இவ்விலங்கிற்கு, அழகு என்ற அடிப்படையில் மான் என்ற பெயர் வழங்கப்பட்டிருக்கின்றது. சங்க இலக்கியத்தில் 'இரலை, புல்வாய், நவ்வி, கலைமான், உழைமான், கடமான், வருடைமான்' என ஐந்து வகை மானின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

உடம்பு முழுவதும் மயிர்க்கற்றையாலான விலங்கு 'கவரி' என அழைக்கப்பட்டது. கவரி என்பது முடியைக் குறிக்கும் சொல்லாகும். கவரிமா உடல் முழுவதும் முடியால் ஆனது. காரணம் இது பனி மிகுந்த மலைப்பகுதிகளில் வாழ்வதால், அங்குப் பொழியும் பனியிலிருந்து காத்துக்

கொள்ள, உடல் முழுவதுமுள்ள முடி கவசம் போலக் காணப்படும். இதனால் முடியைக் குறிக்கும் கவரி அவ்விலங்கினைக் குறித்தது.

சில பெண்கள் தம் கூந்தலோடு செயற்கையான முடியை இணைத்துக் கட்டுவர். இதனைச் 'சவுரி' என்பர். கவரி என்பதே மருவி சவுரி என்றாயிற்று. பதிற்றுப்பத்தில், மகளிர் கவரி முடியைக் கொண்டு கொண்டையிட்டதை,

"கவரி முச்சி கார்விரி கூந்தல்
ஊசல் மேவல் சேயிழை மகளிர்"(66)

என வருணிக்கின்றது. கவரி என்பது அதன் உடம்பிலுள்ள முடியினால் அமைந்த பெயராகும். உரையாசிரியர்கள் கவரி என்பது மானினத்தைச் சேர்ந்தது எனக் கருதி கவரிமான் என உரை யாத்துள்ளனர்.

கவரி பனி மிகுந்த பகுதிகளில் வாழக்கூடியதென்பதை, "நரந்தைப் புல்லை உண்ணும் கவரிமான், குவளை மலர் பூத்திருக்கும் அழகிய சுனைகளில் உள்ள நீரைப் பருகிப் பக்கத்தில் இருக்கும் மர நிழலில் தன் துணையோடு மகிழ்ந்திருக்கும் இமயமலை,"(67) "முள் முருக்க மரங்கள் அடர்ந்து வளர்ந்துள்ள இமயமலையின் பக்க மலையில் தூங்குகின்ற கவரிமான்கள்"(68) என்பன போன்ற செய்திகள் விளக்கும். கவரிமான் தமிழகத்து விலங்கல்ல. இது திபெத்தில் உள்ள 'யாக்' என்னும் எருது போன்ற ஒரு பொதி சுமக்கும் விலங்கு என்ற பி.எல்.சாமியின் கூற்று ஒப்புநோக்கத்தக்கது.

"நரந்தை நறும்புல் மேய்ந்து கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி யயல
தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும்
வடதிசை யதுவே வான்றோ யிமயம்"(69)

என்ற புறநானூற்றுப் பாடலில், நரந்தம் புல் இமயமலைச் சாரலில் வளர்கின்றது. கவரிமா அதை விரும்பி மேய்கின்றது. “பழந்தமிழர் நரந்தம் புல்லொடு கங்கையாற்றையும், இமயத்தையும், கவரிமானையும் இணைத்தே அறிந்திருந்தனர்”(70) என்பர் பி.எல்.சாமி. கவரிமா என்பது இமயமலைச் சாரலில் வாழும் ‘யாக்’ என்றழைக்கப்படும் விலங்காகும் என்பது பெறப்படுகிறது.

தன் மயிர்த்திரளில் ஒரு மயிரை இழக்க நேர்ந்தாலும் உயிர் வாழ விரும்பாத கவரிமானைப் போன்று மானமுடையவர்கள் மானம் அழிய நேர்ந்தால் அதனைத் தாங்காது இறப்பர். இதனை,

“மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்”(71)

என்கிறார் வள்ளுவர். மானம் அழிய வாழாப் பெரியோர்க்கு மயிர் உதிர்ந்தால் வாழாத கவரிமாவை உவமையாக்கியுள்ளார்.

**பிணை**

சங்க காலத்தில் மானினத்தில் ஆண் இனத்தை ஏறு என்றும் பெண்ணினத்தைப் பிணை என்றும் கூறுதல் மரபாகும். பிணை, புல்வாய், நவ்வி, உழை, கவரி (தொல்.மரபியல்:601) என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. பெண்மானைப் போன்ற அழகிய, அச்சப்படும் இளமைப் பார்வையும் நாணமும் உடைய இவளுக்குப் பொருத்தமில்லாத அணிகலன்களை இவள் அணிவது ஏனோ? எனக் கூறுமிடத்து பெண்ணைப் பெண்மானாக பிணையாக உருவகப்படுத்தியிருக்கிறார். இதனை,

“பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணிஎவனே ஏதில தந்து”(72)

என்கிறார் வள்ளுவர். “தெளிவு என்னும் அகப்பொருள் கிளவியைச் சேர்ந்தனவாகும். தெளிவற்ற காதலருள் ஒருவர், மற்றொருவரின் உள்ளக்

குறிப்பினை அறிய முயலுகின்றனர். பெரிதும் தலைவனே, தலைவியின் உள்ளக் குறிப்பினை அறிவதற்குத் துடிப்பது இயற்கையாகும்.

"அச்சமும் நாணும் மடனுமுந் துறுத்த

நிச்சமும் பெண்பா குரிய என்ப"[73]

என்பது தொல்காப்பியர் கருத்து. "அச்சம், நாணம், மடம் ஆகிய பண்புகள் பெண்ணிற்குரியனவாகக் கூறப்படுவதால், தலைவி தலைவனுடைய உள்ளக்கருத்தை அறிய முயலுவதாகச் சொல்ல இயலாது. மேலும், பெருமையும் உரனுமுடைய (தொல்.களவு.7) தலைவன் தன் குறிப்பை வெளிப்படையாகக் காட்டிக் கொள்வும் முடியும். எனவே, ஆண்மகனே தலைவியின் உள்ளக்கருத்து என்னவென்பதை அறிய முயலுவது இயற்கை"[74] என்பர் க.த.திருநாவுக்கரசு.

மற்றொரு குறளில், இது காலனா, இது கண்ணா, பெண்மானா, யான் அறியேன் இம்மூன்று பொருள்களின் குணங்களையும் இப்பெண்ணின் பார்வையில் காண்கிறேன் என்கிறார். இதனை,

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்

நோக்கம்இம் மூன்றும் உடைத்து"[75]

என்கிறார் வள்ளுவர். பெண்ணின் பார்வைக்குப் பெண்மானின் பார்வையை ஒப்பிடுகிறார். மருண்ட பார்வை பார்க்கும் இப்பெண்ணின் பார்வை பிணையின் பார்வையோடு ஒப்புமை கூறுகிறார்.

பெண்ணின் பார்வையை நோக்கு என்ற சொல்லாட்சியால் குறிப்பிடுகிறார். ஒன்றை அல்லது ஒருவரைப் பார்ப்பது என்பது வேறு நோக்குவது என்பது வேறு. இவற்றுள் நோக்குதல் என்பதன் பொருள் திட்ப நுட்பமானதாகும். நோக்கு என்பது மேலோட்டமான பார்வையன்று அழுந்திக்

காணும் அகக்காட்சி. பிறன்மனை நோக்காத பேராண்மை என்ற குறளில் இப்பொருளுண்மையை அறியலாம். பார்ப்பதற்கும், காண்பதற்கும், நோக்குவதற்கும் வேறுபாடு காணப்படுகிறது. ‘கண்ணொடு கண்ணினை நோக்கு ஒக்கின்’ என்று வள்ளுவரும், ‘நோக்கு அரிய நோக்கே’ என்று மாணிக்கவாசகரும், ‘அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்’ என்ற கம்பரும் கூறிய வாக்குகளை ஒப்பு நோக்கலாம். குறளில் காணப்படும் காதலியின் பார்வை அப்பெண்ணின் உள்ளக்கிடக்கையை உணர்த்தும் நோக்காகிறது. வள்ளுவப் பெண்ணின் நோக்கு, ஒரு குறிப்பு காட்டி இருப்பதை அறியமுடிகிறது.

**முயல்**

முயல்கள் காடும் காடு சூழ்ந்த பகுதிகளில் வாழும் இயல்புடையன. இவைகளின் கண்கள் பெரியதாகவும் செவிகள் நீண்டும் இருக்கும். “நெல்லியின் இளஞ்சிவப்புப் பழம் முயலின் கண்ணுக்கு (அகம்.284) உவமிக்கப்பட்டிருக்கின்றது”(76) என்பர் பி.எல்.சாமி.

மிகச்சிறிய விலங்கு வகைகளில் ஒன்று முயல். முயலின் நிறம் வெண்மையாகும். முல்லை நிலத்தில் காணப்படும் வெண்மை நிறப் பூ முல்லை என வழங்கப்படுவது போல, முல்லை நிலத்து விலங்கு முயல் எனக் குறிக்கப்பட்டுள்ளது. முயல் எப்பொழுதும் ஒடுங்கியே இருக்கும். முயல் எப்பொழுதும் தலையையும் கால்களையும் சேர்த்துப் பதுங்கி இருக்கும். முல்லை நிலப் புறவில் முயல்கள் பதுங்கி இருத்தலை,

“நறும்பூம் புறவி னொடுங்கு முயலரியும்”(77)

“முயல் வந்து கறிக்கு முன்றிற்”(78)

“வன்பாலாற்... அங்கட் குறுமுயல் வெருவ”(79)

என்ற சங்க இலக்கியங்களின் வழி அறியலாம். காட்டு முயலைக் குறி தவறாமல் எய்து வீழ்த்திக் கொன்ற அம்பை ஏந்துவதைக் காட்டிலும், யானை மேல் எறிந்து குறிதவறிய வேலைத் தாங்குதல் சிறந்தது. இதனை,

“கான முயலெய்த அம்பினில் யானை

பிழைத்தவேல் ஏந்தல் இனிது”[80]

என்கிறார் வள்ளுவர். வீரர் அல்லாதாரை வென்று புகழ் பெறுதலைவிட வீரரை வெல்ல முயன்று தோல்வியடையினும் அதுவே சிறந்த வெற்றியாகும் என்ற கருத்தை விளக்க, முயலை அம்பெய்து வெற்றி கொள்வதைக் காட்டிலும், யானைக்குக் குறிவைத்து அது பிழைபட்டுப் போமாயினும் அது சிறப்புடையதாகும். சிறிய காரியங்களில் முயன்று வெற்றி பெறுவதைவிட, பெரிய காரியங்களில் முயன்று தோல்வியடைவது சிறப்பு என்கிறார் வள்ளுவர். முயலைக் கொல்வதற்கு அம்பு பயன்படும். யானையைக் கொல்வதற்கு வேல் பயன்படும். சிறிய முயலுக்கு அம்பும், பெரிய யானைக்கு வேலும் பற்றி வள்ளுவர் கூறுவது சிந்தனைக்குரியதாகும். வில்லில் நாணேற்றி முயலை அம்பால் கொன்றுவிடலாம். கையிலுள்ள வேலைக் கொண்டே யானையைத் தாக்க முடியும். ஏனெனில் அடுத்தக் குறளிலும் “கைவேல் களிற்றொடு போக்கி”[81] என்றும் வள்ளுவர் கூறுவதிலிருந்து அறியப் பெறுகிறது.

**முதலை**

நீரிலும் நிலத்திலும் வாழக்கூடியது முதலை. முதலை மேற்புறம் கருமை நிறத்துடன் சொர சொரப்பான உருவ அமைப்புடன் காணப்படும். வழிப்போவாரைக் கொல்லும் வளைந்த கால்களையுடைய ஆண் முதலை வாழும் கடற்கரையை,

"கொடுங்கான் முதலைக் கோள்வ லேற்றை

வழிவழக் கறுக்குங் கானலம் பெருந்துறை"(82)

எனக் குறுந்தொகைக் கூறுகிறது. மன்னர்கள் தங்கள் அரண்மனையைச் சுற்றி அகழி தோண்டி, அதில் முதலைகளை வளர்ப்பதைப் பதிற்றுப்பத்து (53:68) எடுத்துக்காட்டியுள்ளது. பாதுகாப்பிற்காக முதலைகள் வளர்க்கப்பட்டன. நீரில் இருக்கும் பொழுது முதலைக்கு வலிமை அதிகமாக இருக்கும். அது நீருள் இருக்கும் பொழுது மிகப் பெரிய யானையைக்கூட எளிதில் இழுத்துவிடும். ஆனால் நீரைவிட்டு வெளியே வருமானால் அதனை நரிகூட மிக எளிதில் இழுத்துச் சென்றுவிடும். இதனை,

"நெடும்புனல் வெல்லும் முதலை அடும்புனலின்

நீங்கின் அதனைப் பிற"(83)

என்கிறார் வள்ளுவர். "ஒரு செயலைச் செய்யக் காலம் பார்ப்பது போல, இடத்தையும் பார்த்தே செய்ய வேண்டும் என்று முதலையை வைத்து அறிவு புகட்டுகின்றார் வள்ளுவர். இடங்கர், கராம் என்பன முதலையின் வகைகளில் சிலவாகும். முதலை, தான் ஈன்ற குட்டியைத் தின்னும் அன்பற்ற விலங்கு. முதலை நீரில் வாழும் பிற உயிரினங்களையும் வஞ்சகமாகப் பிடித்துத் தின்னும் இயல்புடையது. அதன் கண்களிலிருந்து இயல்பாகவே நீர் வழிந்து கொண்டிருக்கும். இதனைக் கண்ட பிற உயிரினங்கள், உயிர்களைப் பிடித்துத் தின்ற செயலை எண்ணி வருந்தி, முதலை கண்ணீர் வடிக்கின்றது என்றும் இனி உயிர்களைப் பிடித்துத் தின்னாது என்றும் கருதி அருகில் சென்றால் அவைகளையும் பிடித்துத் தின்றுவிடும். இதுபோல் சிலர் தவறான செயல்களை வேண்டுமென்றே செய்துவிட்டுப் பிறகு செய்த தவற்றிற்கு வருந்துவது போல் பொய்யாகக் கண்ணீர் விடுவர். இத்தகைய வஞ்சகர்கள்

விடும் கண்ணீரை முதலைக் கண்ணீர் என்று கூறுவது உலக வழக்கு''[84] என்பர் இல.செ.கந்தசாமி.

**ஆமை**

ஆமை என்பதற்கு 'அம்' என்பதே வேர். "மேற்புரம் திரண்டு வீக்கமாக இருப்பது ஆமையின் தோற்றமாகும். எனவே வீக்கம், திரட்சி என்ற பொருள் தரும் அம் எனும் வேரிலிருந்து தோன்றியதே ஆமை''[85] என்பர் சு.சௌந்தர பாண்டியன்.

சங்க இலக்கியத்தில் ஆமை குறித்த செய்திகள் காணப்படுகின்றன. "வயலைக் காவல் செய்யும் உழவர், தாம் சுடுகின்ற நத்தையை, ஆமையின் முதுகின் மேல் உள்ள ஓட்டின் மேல் உடைத்துத் தின்பதை''[86] நற்றிணை கூறுகிறது. ஆமை என்ற பெயர், அதன் உருவ அமைப்பினால் வந்த பெயராகும். குளத்தில் ஆமை வசிக்கும்[87] என்ற செய்தி புறநானூற்றில் காணப்படுகிறது.

மனிதனின் விருப்பம் சமுதாய நெறிகளுக்கும் கட்டுப்பாட்டுக்கும் உட்பட்டது. மனிதன் ஒழுக்கத்தோடு செயல்பட வேண்டுமானால் புலன் அடக்கத்தோடு செயல்பட வேண்டும். அப்படிப் புலனடக்கத்தோடு செயல்படும் போது மனிதன் எதிலும் சுகத்திற்கு முதன்மை தராமல் அறிவுக்குத்தான் முதன்மை தர வேண்டும். அந்த அறிவை விரிவு செய்ய நமக்கு மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து புலன்கள் உள்ளன. இவற்றைச் சுகம் பெறுவதற்காகப் புலன் வழியே உணர்வுகளை அனுப்பாமல் அறிவு நிலையில் கட்டுப்படுத்திச் செயல்பட வேண்டும். எனவே, மனிதன் தன் ஆசைகளை, சுகங்களைப் பெறப் பண்பாட்டு எல்லையில் கட்டுப்பட்டும் செயல்பட வேண்டும். அந்த எல்லையில் ஐம்புலன்களைச் செலுத்துவது அடக்கப் பண்பாகும். கடலில், கப்பலைச் செல்ல வேண்டிய திசைக்குச் செலுத்தும் மாலுமியைப் போல் மனிதர்கள் ஐம்புலன்களை வாழ்க்கையின் இலட்சியத்தையும் பண்பாட்டையும் நோக்கிச் செயல்படுத்த வேண்டும்.

ஒரு பிறப்பில் ஐம்புலன்களைத் தீய நெறிகளில் செலுத்தித் துன்பப்படும் மனிதர்களைப் பார்க்கின்றோம். எனவே மனிதர்கள் ஐம்புலன்களை நல்ல நெறிகளில் செலுத்தி வாழ்வது அடக்கத்தின் வல்லமையாகும். இந்த வல்லமையைப் பெற்றால் உடனே மனிதன் பல துன்பங்களிலிருந்து விடுபட்டு வாழலாம். இந்த விடுதலை எப்பிறவி எடுத்தாலும் பெற முடியும் என்பதைச் சொல்ல வந்த வள்ளுவர்,

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்

எழுமையும் ஏமாப்பு டைத்து"[88]

என்கிறார். "ஆமை தலையையும் நான்கு கால்களையும் வெளியே நீட்டி ஊர்ந்து செல்கிறது. அப்போது தீங்கு வரும் என்று உணர்ந்தால் தலையையும் நான்கு கால்களையும் தன் ஓட்டுக்குள் அடக்கிப் பாதுகாப்புப் பெறுகின்றது. அதுபோல, மனிதர்கள் ஐம்புலன்களால் செயல்படும் போது அச்செயல்களின் நன்மை, தீமைகளைப் பகுத்தறிந்து ஐம்புலன்களை அடக்கி வாழ வேண்டும். ஐம்புலன்களின் அடக்கம் என்பது உணர்வின்றிச் செயல்படுத்த அல்ல, அவ்வடக்கம் அளவுக்கும், மரபுக்கும், மாண்புக்கும் கட்டுப்பட்டு எல்லை மீறாமல் ஐம்புலன்களின் உணர்வுகளைக் கட்டுப்படுத்திச் செய்தல் வாழ்க்கை நெறியாகும். அப்படி வாழ்வது தனக்கும், பிறருக்கும் துன்பமில்லாத தூய வாழ்வாகப் பரிணமிக்கும்.

மனிதர்கள் துன்பமில்லாத இனிய வாழ்வைப் பெற ஐம்புலன்களை அடக்கி அறிவு நிலையில் செயல்பட வேண்டும்"[89] என்பர் சுபாசு.

ஒருவன் தன்னுடைய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளையும் ஆமை தன் உடல் உறுப்புக்களை உள்இழுத்துப் பகையிடமிருந்து காப்பாற்றிக் கொள்வது போலக் காப்பாற்றிக் கொண்டால் அவன் எழுகின்ற அனைத்துப் பிறவிகளிலும் அது பெருமையைச் சேர்க்கும்.

**எலி**

எலி, கருப்பை, வெள்ளெலி என எலியின் மூன்று வகைகளைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. எலி வீட்டிலும் வயல்வெளிகளிலும் வளை அமைத்து வாழக்கூடியது. வீட்டில் உள்ள எலியை இல்லெலி (குறுந்.107:3, அகம்.122:13) என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

படைமாட்சி என்ற அதிகாரத்தில், பகைப்படைகள் எலிகளைப் போலக் கடலாகத் திரண்டு வந்து ஆரவாரம் செய்தாலும், சிறிய தொல்படை நாகத்தைப் போல மூச்சு விட்டதும் அது முற்றிலும் அழிந்து போகும். இதனை,

“ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை

நாகம் உயிர்ப்பக் கெடும்”(90)

என்கிறார் வள்ளுவர். எலி, உவரி, நாகம் என மூன்று இயற்கைப் பொருட்களை ஒருங்கிணைத்து குறள் யாத்துள்ளார் வள்ளுவர்.

**பாம்பு**

எலிக்குப் பகை பாம்பு. அது எலிகளைப் பிடித்துத் தின்னும் பழக்கமுடையது. பாம்புகள் உள்ள இடத்தில் எலிகள் இராது. எலிகள் பெருங் கூட்டமாக ஒன்று திரண்டு கடல் போலப் பேரொலி செய்தாலும், ஒரு நாகம் எதிர்நின்று சீறின் அவைகள் ஓடிவிடும். அதுபோல திறனற்ற மக்கள் பலர் கூடி ஆரவாரிப்பினும், திறனுடைய ஒருவனை அவர்களால் வெல்ல இயலாமல், தோற்று ஓடிப் போவார்கள் என்று வள்ளுவர் கூறுகிறார்.

மனப்பொருத்தம் இல்லாதவரோடு ஒருவன் வாழும் வாழ்க்கை ஒரு குடிசையில் பாம்போடு உடன் வாழ்வதைப் போன்றது. இதனை,

“உடம்பாடு இலாதவர் வாழ்க்கைக் குடங்கருள்

பாம்போடு உடனுறைந் தற்று”(91)

என்கிறார். ஒத்தக் கருத்துடையவர்களோடு இணைந்து வாழ்தல் வேண்டும். கருத்து ஒற்றுமை இல்லாத ஒருவனோடு கூடி வாழ்வது பாம்போடு சேர்ந்து வாழ்வது போலத் தீமையையே விளைவிக்கும் என்று கூறுகிறார்.

பிறிதொருவிடத்தில் பாம்பு குறித்து வள்ளுவர் பேசுகிறார். காதலனை நான் ஒரு நாள்தான் பார்த்தேன். அதனால் உண்டாகிய அலரோ, பாம்பு சந்திரனை விழுங்கிய செய்தி போல் எங்கும் பரவிவிட்டது. சந்திரகிரகணம் நடைபெறுவதைப் பாம்பு சந்திரனை விழுங்குவதாக அக்கால மக்கள் நம்பினர். சந்திரனைப் பூமி கடக்கும் போது பூமியின் நிழல் சந்திரனின் மீது படுகிறது. இதனைச் சந்திரகிரகணம் என்கிறது அறிவியல். இவ்வறிவியல் உண்மை, சந்திரனை இராகு என்ற பாம்பு விழுங்குவதாக மக்களிடையே கருத்து நிலவுகிறது.

**புழு**

புழுவைப் பற்றி வள்ளுவர் கூறியுள்ளார். புழுவிற்கு எலும்பு இல்லை. அது உற்று உணரும் ஓரறிவுயிர் என்பார் தொல்காப்பியர். புழு கதிரவனின் வெப்பத்தால் தாளாது அழிந்துபடக் கூடியது. ஆதலின் புழுக்கள் ஈரமுள்ள இடங்களிலும் பசுமையான இலை தழைகள் மீதும் இருந்து வெப்பதிலிருந்து தப்பிப் பிழைத்து வாழ்கின்றன.

எலும்பு இல்லாத உடல் கொண்ட புழுக்கள் முதலியவற்றை வெயில் வருத்துவது (காய்வது) போல அன்பில்லாத உயிரை அறக்கடவுள் வருத்தும். இதனை,

“என்பில் அதனை வெயில்போலக் காயுமே

அன்பில் அதனை அறம்”(92)

என்கிறார் வள்ளுவர். புழுவை உவமை காட்டி, அன்பில்லாவிட்டால் உண்டாகும் குற்றங்களைக் கூறுகிறார் வள்ளுவர்.

**மீன்**

உழைத்துக் களைத்த மக்களுக்கு உல்லாசமானதொரு செயல் வேண்டப் பெறும். அதுவே விளையாட்டு. அவற்றுள் சூதாட்டத்தைப் பற்றி மிகப் பேசுகிறது குறள். “சூதாடலை, வட்டாடுதல், கவறு என்ற பெயர்களால் அழைக்கின்றது. விளையாட்டிற்காகத் தொடங்கப் பெற்ற இது, வினையாகப் பொருள் அழிவிற்கும், பகைக்கும், காலக் கொலைக்கும் காரணமான போது, நீதி நூல்கள் இவற்றைக் கடிய வேண்டியதாயிற்று”[93] என்பர் ச.தண்டபாணி தேசிகர்.

சூதாடுகிறவர்கள் ஒன்றெய்தி நூறிழப்பர். அதாவது ஒரு பொருளைப் பெற நூறு பொருள்களை இழந்துவிடுவார்கள் என்று கூறுகிறார். அதேவேளையில் ஒன்றை இழந்து நூறைப் பெறுபவர்களும் இருப்பார்கள். அவ்வாறு சூதினால் பொருள் வென்றாலும், சூது வேண்டாம் என்கிறார். தான் வெல்லும் ஆற்றலை உடையவனாயினும் சூதாடலை விரும்பக்கூடாது. வெற்றியால் வரும் பொருளும் தூண்டில் இரும்பை இரை என மயங்கி மீன் விழுங்கினாற் போன்றது. இதனை,

“வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று”[94]

என்பது வள்ளுவர் கருத்து. மீன் பிடிப்பவர்கள் மீனைப் பிடிப்பதற்குத் தூண்டில் போடுவார்கள். அத்தூண்டிலில் உள்ள புழுவைக் கொக்கியில் பார்த்த மீன் இரை என நினைத்து விழுங்கப் போகும். மீன் மடிந்து பிறருக்கு இரையாகும். அதுபோல, பிறர் பொருளைச் சூதினால் கவர எண்ணினால், அழிந்து போவார்கள் என்று வள்ளுவர் கூறுகிறார். மீன் பிடிப்போன், உயிர் போக்குக் கருவியை (தூண்டில்) உணவாகக் காட்டும் செயலையே உவமையாகக் கூறியது சிறப்பிற்குரியதாகும்.

## தொகுப்புரை

விலங்குகளில் யானை, புலி, குதிரை, நரி, பசு, காளை, ஆடு, முயல், ஆமை முதலியன குறள்களில் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் யானையே, குறளில் பெரும்பாலான இடங்களில் (எட்டு இடங்கள்) பேசப்படுகின்றது. அதனைப் பிடிப்பதற்காகக் காடுகளில் படுகுழி வெட்டி, அதன் மேல் மெல்லிய குச்சிகளைப் பரப்பி, மண்ணிட்டு மூடி, வாழை முதலிய உணவுப் பொருட்களை நட்டு வைப்பார்கள். அதன் பக்கத்தில் பழக்கப்பட்ட யானையின் (கும்கி) மூலம் அதனைத் தன்வயப்படுத்துவார்கள். யானையை வைத்து யானையைப் பிடிக்கின்ற தொழில் நுட்பம் வள்ளுவர் காலத்தில் இருந்துள்ளது.

அக்காலத்தில் யானைப் போர் நடந்ததை குறளின் வழி அறியமுடிகிறது. அப்போரினை மக்கள் பெரிய மலைகளின் மேல் நின்று வேடிக்கைப் பார்த்ததும் அறியப் பெறுகிறது.

யானை, பெரிய வலிமையுள்ள விலங்காயினும் சேற்றில் அகப்பட்டுக் கொள்ளுமாயின், நரி, அதனை வீழ்த்திவிடும். புலி தாக்கினால், யானை அஞ்சும். வேடர்கள் யானையை அம்பாலும், வேலாலும் வேட்டையாடுவர். அம்பு தைத்தாலும் யானை சோராது கடமையில் தவறாது பெருமையை நிலை நாட்டும் போன்ற கருத்துக்கள் பெறப்படுகின்றன.

நன்கு பயிற்றப்பட்ட குதிரை, போரில் சளைக்காது என்பதும், பயிற்றப் பெறாத குதிரை, கடும் போரில் வீரனை வீழ்த்திவிட்டு ஓடும் என்பதும் குதிரையின் இயல்புகளாக உணர்த்தப் பெறுகின்றன.

கவரிமா என்பது இமயமலையில் வாழும் விலங்காகும். தற்போது அது யாக் என்று அழைக்கப்படுகிறது. பனிப் பகுதிகளில் வாழ்வதால், தன்

மயிர்த்திரளில் ஒரு மயிரை இழக்க நேர்ந்தாலும் அதிகமான பனியின் காரணமாக அவை உயிரிழக்க நேரிடும் என்பதை வள்ளுவர் அறிந்திருக்கிறார்.

தகர் (ஆடு), சண்டையிடும் போது முட்டுவதற்காகப் பின் வாங்கி முன்னேறிச் சென்று தாக்கும் தன்மையது.

நரி, தானாகக் கொல்லும் வலி இன்மையால், சேறு முதலியவற்றில் அகப்பட்டுக் கொண்ட யானை முதலான விலங்குகளைத் தின்னும் தந்திரம் உடையது.

பசு, வீட்டில் வளர்க்கப்படும் விலங்காகும். பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலான பொருட்களை ஆபயன் என்று கூறுவர். காளை வண்டி இழுக்கப் பயன் பெறுவதும் குறிக்கப் பெறுகின்றன.

முயல், ஆமை போன்ற விலங்கினங்களையும், பாம்பு, எலி, புழு, மீன் போன்ற ஊர்வனவற்றையும் குறளில் பதிவு செய்துள்ளார் வள்ளுவர். இது மனித வாழ்விற்குப் பல்லுயிர்களின் இருப்புத் தேவை என்ற தற்கால பல்லுயிர்ச் சிந்தனை முன்பே தமிழகத்தில் இருந்ததை வெளிப்படுத்துகின்றது.

இல்வாழ்க்கை சிறக்க வேண்டுமெனில் மனைமாட்சி அவசியம். இல்லறத்தில் ஒழுக்கம் தவறுமானால், நிமிர்ந்த நடையுடனும், நேர் கொண்ட பார்வையுடனும் நடத்தல் இயலாது. இல்லற ஒழுக்கம் பெண்ணிடமிருந்து தொடங்குகிறது. மனைத்தக்க மாண்புடைய பெண்ணை இல்லாளாகப் பெற்றவன் சிங்கம் போல கம்பீரமாக நடை போட முடியும் என்பதை வலியுறுத்துகிறார்.

மன வலிமை உடையவர்கள் யாருடைய துணை இல்லாமல் போனாலும், வெற்றி பெறுவார்கள் என்பதைப் புலியின் செயலைக கொண்டு உவமையாகக் காட்டுகிறார் வள்ளுவர்.

தவ வலிமை இல்லாத போலியான மனிதர்கள் தவ வலிமையுடையவர் போன்ற தோற்றத்தினால் மக்களை ஏமாற்றுவார்கள் என்பதைப் புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பசு மேய்வதைச் சுட்டுகிறார்.

வலிமை குறைந்தவர்கள் கூட இடமறிந்து செயலாற்றினால் எளிதாக வெற்றி பெற முடியும் என்பதை நரியின் செயல் வழியாக எடுத்துக்காட்டுகிறார்.

ஊக்கம் உடையவர்கள் தம் உயர்வுக்கு இடையூறுகள் வந்த போதும் மனம் தளராமல் தம் பெருமையை நிலைநாட்டுவதை யானை போர்க்களத்தில் அம்புகளால் புண்பட்ட போதிலும், தளராமல் போரிடும் குணத்தோடு ஒப்புமை கூறுகிறார்.

பருத்த உடம்போடு இருந்த போதிலும் மனத்தில் ஊக்கமில்லாத யானை பாயும் புலியிடம் தோற்றுவிடுகிறது. ஊக்கமுடையவனின் செயலுக்கும் ஊக்கமில்லாதவன் செயலுக்கும் யானையை உவமை காட்டியிருப்பது மாறுபாடாகத் தெரிவது ஆய்வில் பெறப்படுகிறது.

போர்க்களத்தில் புறமுதுகிட்டு ஓடும் கோழையைத் துரத்தி வீழ்த்துவதைவிட, எதிர்த்து நின்று போரிடும் வீரனிடம் சண்டையிட்டுத் தோற்பது பெருமை தரும் என்பதற்கும் யானையை உவமை காட்டியுள்ளார் வள்ளுவர்.

தாம் அடைய நினைக்கும் பெரிய இலக்கை எட்டும் போது, வரும் துன்பங்கள் ஏதும் தெரியாது. எடுத்துக் கொள்ளும் இலக்கு எதிர்கொள்ளும் இலக்கு எப்போதும் பெரிதாக இருக்க வேண்டும் என்ற கருத்தினை விளக்குவதற்கும் யானையைச் சுட்டி பொருள் விளக்குகிறார்.

ஒரு செயலைத் தொடங்கியவன் அச்செயலாலேயே வேறொரு செயலையும் செய்து முடித்துக் கொள்வான் என்பதற்கு யானையைக் கொண்டு யானையைப் பிடிப்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

வீரச்சுவையுடைய யானையின் செயலை இன்பச் சுவைக்கு எடுத்துக்காட்டுகிறார் வள்ளுவர். காதலன் தவிர பிறர் தொட முடியாத காதலியின் மார்புக்கச்சைக்கு உவமையாக முகப்படாம் போர்த்தப்பட்ட யானையின் தந்தத்தை உவமையாகக் காட்டியுள்ளார். காதலியின் தளராத மார்புகள் துணி போர்த்தப்பட்ட யானைத் தந்தம் போன்று எழுச்சியுடன் இருக்க வேண்டும் என்பதை இன்பச்சுவையோடு வள்ளுவர் கூறியது அறியப் பெறுகிறது.

ஒரு வினையைப் பாதுகாப்புடன் நிகழ்த்திட வேண்டும். கையில் பெரும் பொருள் வைத்துக் கொண்டிருப்பவர்கள் எந்த ஒரு செயலையும் அதனைச் செய்து முடிக்க வல்லவர்களிடம் ஒப்படைத்து, தாம் எவ்விதத் துன்பமும், அச்சமும், கவலையுமின்றி அச்செயல் நிறைவேறுதல் கண்டு மகிழும் தன்மைக்கு யானைப் போரினை உவமை காட்டுகிறார்.

போர்ப் பயிற்சியில்லாத குதிரை உற்ற நேரத்தில் வீரனைத் தள்ளிவிட்டு ஓடிவிடும். அதுபோல தீய நட்பினரும் தக்க நேரத்தில் கைவிட்டு விடுவார் என்கிறார். கல்லாமா என்று பொதுப் பெயரினை வள்ளுவர் பயன்படுத்தியுள்ளார். மா என்பதினால் குதிரையைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் கூறுகின்றனர். அக்காலத்தில் யானைப்படையும் இருந்துள்ளது. யானைக்கும் மா என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளதும் ஆய்வில் பெறப்படுகிறது.

தடைகள் பல வந்த போதும் கொண்ட கொள்கையில் உறுதியாக இருந்து செயல்படுபவருக்கு உவமையாகப் பகடு (காளை) உவமையாக்கப்பட்டுள்ளது.

பசுவிற்கு நீர் தருவதாக இருந்தாலும்கூட தங்களது சொந்த முயற்சியால் கொணர்ந்ததாக இருக்க வேண்டும். அக்காலத்தில் பசு செல்வமாகக் கருதப்பட்டிருந்த காரணத்தினால், இரத்தல் இழிவு என்பதை அழுத்தமாக உரைப்பதற்குப் பசுவினைக் காட்டியுள்ளார்.

அரசனுடைய ஆட்சி நல்லாட்சியாக இல்லாவிடில் பசுவினால் கிடைக்கக் கூடிய பயன்கள் குன்றிவிடும். மன்னனுடைய ஆட்சி சரியாக நடைபெறவில்லையெனில் வானம் பெய்யாது. அதனால் பசும்புல்லும் தழைக்காது. புசும்புல்லைத் தின்னாத பசுவும் பால் தராது என்பதை உள்ளடக்கமாக வைத்து குறள் யாத்துள்ளமை ஆய்வில் கண்டுணரப் பெறுகிறது.

வலிமையும் ஆற்றலும் உடையவர்கள் தங்கள் பகைவர்க்கு அஞ்சி, அடங்கி, ஒடுங்கி இருப்பதைப் போன்று தோற்றமளிப்பார்கள். தக்க சமயத்தில் வெற்றி பெறுவார்கள். இதனை ஆட்டுக்கிடாய், சண்டையின் போது பின் வாங்கி மோதும் செயலுடன் ஒப்பிட்டுள்ளார் வள்ளுவர்.

மானத்துடன் வாழ்பவர்களின் செயலுக்கு, அதிக பனியின் காரணமாக ஒரு மயிரை இழந்தாலும் உயிர் வாழ முடியாத கவரிமாவை ஒப்பிடுகிறார் வள்ளுவர்.

பெண்களின் பார்வைக்கு மான் பிணையின் பார்வையை ஒப்பிட்டுள்ளார் வள்ளுவர். பெண்ணின் பார்வையை நோக்கு என்ற சொல்லாட்சியால் குறிப்பிடுகிறார். ஒன்றை அல்லது ஒருவரைப் பார்ப்பது என்பது வேறு நோக்குவது என்பது வேறு. இவற்றுள் நோக்குதல் என்பதன் பொருள் திட்ப

நுட்பமானதாகும். நோக்கு என்பது மேலோட்டமான பார்வையன்று அழுந்திக் காணும் அகக்காட்சியாகும். குறளில் காணப்படும் காதலியின் பார்வை அப்பெண்ணின் உள்ளக்கிடக்கையை உணர்த்தும் நோக்காகிறது. வள்ளுவப் பெண்ணின் நோக்கு, ஒரு குறிப்பு காட்டி இருப்பது ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

சிறிய வினைகளில் முயன்று வெற்றி பெறுவதைவிட, பெரிய செயல்களில் முயன்று தோற்பது சிறப்பாகும் என்பதை விளக்க வந்த வள்ளுவர், சிறிய வினைக்கு முயலையும், பெரிய வினைக்கு யானையையும் உவமை காட்டியுள்ளார். சிறிய முயலுக்கு அம்பும், பெரிய யானைக்கு வேலும் பற்றிக் கூறியிருப்பது சிந்தனைக்குரியதாகும்.

ஒரு செயலைச் செய்ய காலம் பார்த்து காரியம் ஆற்றல் வேண்டும் என்று முதலையை வைத்து அறிவு புகட்டியுள்ளார் வள்ளுவர். நீரில் இருக்கும் போது முதலைக்கு வலிமை அதிகமாக இருக்கும். ஆனால் நீரைவிட்டு வெளியே வருமானால் அதன் வலிமை குறைந்துவிடும் என்பதை ஆழ்ந்து உற்று நோக்கி வள்ளுவர் உரைப்பது அறிய முடிகிறது.

புலன் அடக்கத்திற்கு ஆமையை உவமைகாட்டுகிறார் வள்ளுவர். துன்பம் வருகின்ற போது ஆமையானது தனது கை, கால்களை ஓட்டிற்குள் அடக்கிப் பாதுகாப்பது போன்று ஐம்புலன்களின் அடக்கத்தோடு வாழ்வது தனக்கும், பிறருக்கும் துன்பமில்லாத தூய வாழ்வாக இருக்கும் என்பதை உணர்த்த வள்ளுவர் ஆமையின் செயலினை எடுத்துக்காட்டுகிறார்.

ஊர்வனவற்றுள் பாம்பு, மிகக் கொடியது. அதற்கு என்ன நன்மை செய்தாலும் அதனுடன் சேர்ந்து வாழ முடியாது. அது, எலியை விரும்பி உண்ணும். பகைப்படைகள் எலிகளைப் போலக் கடலாகத் திரண்டு

வந்தாலும், ஊக்கத்துடன் இருக்கும் படை பாம்பைப் போல மூச்சு விட்டதும் அது முற்றிலும் அழிந்து போகும் என்பதை விளக்குகிறார்.

சந்திரகிரகணத்தை அறிந்திருந்த வள்ளுவர், இராகு என்ற பாம்பு சந்திரனை விழுங்குவதாகக் காட்டுகிறார். அக்காலத்தில் நிலவிய கருத்தினை அவ்வாறே பதிவு செய்துள்ளமை அறியப் பெறுகிறது.

புழு என்பு இல்லாதது அது வெயிலைக் கண்டால் வாடி இறக்கும். புழுவைக் காட்டி, அன்பில்லாவிட்டால் உண்டாகும் துன்பத்தைக் கூறுகிறார்.

மீன், புழுவை விரும்பி உண்ணும். பிறர் பொருளைச் சூதினால் கவர எண்ணினால், அச்சூதினாலேயே அவர்கள் அழிவது திண்ணம் என்பதை உணர்த்த வள்ளுவர் தூண்டில் புழுவை உணவாக விரும்பி உண்ணும் மீனினை உவமையாகக் காட்டியுள்ளார்.

மனிதர்களின் செம்மாந்த வாழ்க்கைகது விலங்கு, பறவை, இயற்கை ஆகியன கொண்டு வள்ளுவர் வழிகாட்டுவதை குறள்கள் மூலம் அறியமுடிகிறது.

திருவள்ளுவர், இயற்கை எக்காலத்தவர்க்கும் வாழ்வின் ஆதாரம் என்பதைக் குறள்களில் ஆங்காங்கே உணர்த்திக் காட்டுகிறார்.

**சான்றெண் விளக்கம்**

1. தமிழ் லெக்சிகன், தொகுதி 7, ப.3712.
2. தொல்.அகத்.20.
3. வீ.சொக்கலிங்கம் (ப.ஆ), ஆசிரிய நிகண்டு, ப.85.
4. பதிற்.12:45.
5. அகம்238.
6. மா.பரமசிவன், சங்க இலக்கியத்தில் மரையா, குருகு, ப.30.)
7. தொல்.மரபியல்:584586.
8. ஞா.தேவநேயன், முதல் தாய்மொழி (அ) தமிழாக்க விளக்கம், ப.70.
9. தொல்.1549.
10. வீ.சொக்கலிங்கம் (ப.ஆ), ஆசிரிய நிகண்டு, ப.95.
11. மேலது, ப.108.
12. குறள்: 59.
13. இல.செ.கந்தசாமி, திருக்குறளில் வேளாண்மை, ப.88.
14. கி.ஆ.பெ.விசுவநாதம், (வள்ளுவரும் குறளும்), குறள் களஞ்சியம், ப.206.
15. தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், (வள்ளுவரும் மகளிரும்), குறள் களஞ்சியம், ப.442.
16. குறள்: 381.
17. குறள்:388.
18. கலித்.49:1.
19. அகம்.238:48.
20. அகம்.347:1317.
21. குறள்: 599.
22. புறம்.190.
23. குறள்:273.
24. இல.செ.கந்தசாமி, திருக்குறளில் வேளாண்மை, ப.89.
25. சி.இராஜேந்திரன், திருக்குறள் உவமைநயம், ப.48.
26. கலித்.104:67.
27. குறள்: 500.
28. உரிச்சொல் நிகண்டு, ப.24.
29. குறுந்.77:4.

30. மதுரைக்.4748.

31. குறள்: 597.

32. குறள்:599.

33. பி.எல்.சாமி, விலங்கின விளக்கம், ப.57.

34. கலித்.42:12.

35. குறள்:772.

36. குறள்:774.

37. குறள்: 678.

38. திருக்குறளார் வீ.முனிசாமி, (திருக்குறள் அதிகார விளக்கம்), குறள் களஞ்சியம், ப.954.

39. குறள்: 1087.

40. சி.இராஜேந்திரன், திருக்குறள் உவமைநயம், ப.230.

41. குறள்:758.

42. குறள்: 500.

43. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.40.

44. குறுந்.74:12.

45. புறம்.16:1.

46. குறள்:814.

47. நற்.290:13.

48. அகம்.17:13.

49. சீவக.சிந்.2784.

50. குறள்: 624.

51. குறள்:1033.

52. குறுந்.108:12.

53. குறள்: 1066.

54. இல.செ.கந்தசாமி, திருக்குறளும் வேளாண்மையும், பக்.5960.

55. குறள்:273.

56. நற்.192:4, அகம்.274:4

57. குறுந்.221:4, நற்.266:3.

58. பதிற்.78:13.

59. மலை.416.

60. தொல்.1547.
61. பட்.77.
62. பட்.141.
63. பெரும்பாண்.326.
64. குறள்:486.
65. இல.செ.கந்தசாமி, திருக்குறளும் வேளாண்மையும், ப.81.
66. பதிற்.43:12.
67. புறம்.132:47.
68. பதிற்.11:2122.
69. புறம்.122.
70. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப.86.
71. குறள்: 969.
72. குறள்: 1089.
73. தொல்.களவு.8.
74. க.த.திருநாவுக்கரசு, (ஔி விளக்கு), குறள் களஞ்சியம், பக்.772773.
75. குறள்:1085.
76. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், 24.
77. ஐங்.421:2.
78. புறம்.328:15.
79. புறம்.384:46.
80. குறள்: 772.
81. குறள்:774.
82. குறுந்.324:12
83. குறள்:495.
84. இல.செ.கந்தசாமி, திருக்குறளும் வேளாண்மையும், ப.95.
85. சு.சௌந்திரபாண்டியன், சொல்லாராய்ச்சி அமுதம், ப.38.)
86. நற்.280:67.
87. புறம்.70:23.
88. குறள்: 126.
89. சுபாசு, பதிவும் பார்வையும், பக்.2224.
90. குறள்: 763.

91. குறள்: 890.

92. குறள்: 77.

93. ச.தண்டபாணி தேசிகர், (திருக்குறள் அழகும் அமைப்பும்), குறள் களஞ்சியம், ப.311.

94. குறள்:931.

# இயல் – 4

## புள்ளினங்கள்

இயற்கையின் படைப்புகள் பலவாயினும், அதில் புள்ளினங்களின் வகைகளும், சிறப்புகளும் அளவிடற்கரியன. அவற்றைத் தம் பாடல்களில் பாடாதப் புலவர்கள் இல்லை எனலாம். வள்ளுவனாரும், புள்ளினங்களின் அழகியல் கூறுகளையும், அவற்றின் செயல்களையும் குறள்களில் பதிவு செய்துள்ளமையை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

புள் அல்லது பறவைப் பெயர் விளக்கம்

பறக்கும் உயிர்கள் அனைத்திற்கும் பொதுப்பெயர் பறவை. இஃது பறத்தல் என்னும் செயலால் வந்த பெயர். பறப்பவற்றுள் முட்டையிட்டுக் குஞ்சி பொறிக்கும் உயிரினங்களே (வௌவால் தவிர) பறவை என வழங்கப்படுகின்றன.

புள் என்ற சொல் குறித்து, தமிழ் லெக்சிகன் “Wing Feather”(1) என்று குறிப்பிடுகிறது. சிறகு அமைந்தவை புள் என்ற சொல்லைக் குறிக்கும். “புள் என்ற சொல் பறவை எனும் பொதுப் பெயரைக் குறிக்கும்”(2) என்று தமிழ்ப் பெயரகராதி குறிப்பிடுகிறது. “பறவை, அவிட்டநாள், ஓர் விளையாட்டுக் கருவி, வண்டு, இறகு”(3) எனப் புள் குறித்தச் சொல்லிற்குத் தமிழ்ப் பெயரகராதி விளக்கம் கூறுகிறது.

சங்க இலக்கியத்தில் பல்வேறு பறவைகள் குறித்த செய்திகள் காணப்படுகின்றன. “சங்க இலக்கியத்தில் அறுபது பறவைகள் சுட்டப்பட்டுள்ளன. அவை குருகு, கருங்கால் வெண்குருகு, வெள்ளாங்குருகு, சிறு வெள்ளாங்குருகு, யானையங் குருகு, கூழைக்கடா, வரித்தலைவாத்து,

கொக்கு, நாரை, செந்நாரை, செவ்வரிநாரை, நந்து நாரை, புதா (பெருநாரை), அன்றில், மகன்றில், அன்னம், கணந்துள், கம்புள், நீர்க்கோழி, நீலக்கோழி, சிரல், சிறுவெண்காக்கை, கோழி, கானக்கோழி, இதல், சிவல், பூழ், காக்கை, அண்டங்காக்கை, கிளி, கின்னரம், குயில், மனையுறைக் குருவி, மலைக்குருவி, தூக்கணாங் குருவி, கூகை, குரால், குடிஞை, ஆண்டலை, ஊமன், கரும்பருந்து, செம்பருந்து, தேன் குடிச்சான் பருந்து, எருவை, கழுகு, பாறு, பொகுவல், எழால், குடுமி எழால், புறா, மணிப்புறா, வரிப்புறா, போகில், மயில், வங்கா, வானம்பாடி, தற்பாடி, வாவல், வண்டு, இருதலைப்புள் போன்றவையாகும்."(4)

புள் என்ற சொல் குறளில் இரு இடங்களில் கையாளப் பெற்றுள்ளது. புள் என்ற சொல் கூடாவொழுக்கம், நிலையாமை ஆகிய இரு அதிகாரங்களில் இரு குறள்கள் குறிப்பிடுகின்றன. புள் என்ற சொல்லைத் தவிர பறவை என்ற பொதுச் சொல் குறளில் காணப் பெறவில்லை. எனினும் புட் பறந்தற்றே என வரும் தொடரில் புள்ளின் வினையான பறத்தல் கூறப்படுகிறது. பறவை என்பது புள்ளின் இயல்பு வினையான பறத்தல் என்பதன் காரணப் பெயராகும். புள் என்ற சொல்லோடு பறவை என்ற பொதுச் சொல்லும் பழங்கால நூல்களில் கூறப்பட்டிருக்கின்றது. எனினும் குறளில் பறவை என்ற தனித்தச் சொல் காணப் பெறவில்லை.

யாக்கை நிலையாமையைக் கூறவந்த போதுங்கூட நட்பை வள்ளுவர் கூறுகிறார். உடம்போடு உயிர்க்குள்ள உறவு, தான் இருந்த முட்டை தனியே இருக்க அதை விட்டுப் பறவை பறந்தாற் போன்றது என்கிறார். இதனை,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு"(5)

என்கிறார். “முட்டையை விட்டுப் பறவை பிரிவதைப் போலவோ, கூண்டைவிட்டுக் குருவி பிரிவதைப் போலவோ உடம்பைவிட்டு ஒரு நாளைக்கு உயிரும் பிரிந்துவிடும் என்பதே குறளின் கருத்து. உடம்போடு உயிரிடை தொடர்பு என்று கூறாமல், நட்பு எனக் கூறியது ஆழ்ந்த பொருள் உடையதாகும்”[6]என்பர் கி.ஆ.பெ.விசுவநாதம்.

தவக்கோலத்தில் மறைந்து கொண்டு தவமல்லாதவற்றைச் செய்ய விரும்புதல் வேடன் புதரில் மறைந்து பறவைகளைப் பிடிப்பதற்குச் சமமாகும். இதனை,

“தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள் சிமிழ்த் தற்று”[7]

என்கிறார் வள்ளுவர். தவவேடம் தாங்கி மகளிரை ஏமாற்றும் வஞ்சகர்களைப் புதரில் மறைந்து பறவைகளைக் கொல்லும் வேடனுக்கு உவமையாகக் காட்டுகிறது. புள்சிமிழ்த்தற்று, கூடாவொழுக்கத்தின் தீமைகளையும், தீயவொழுக்கத்தினரின் கொடுமைகளையும், இழி தன்மைகளையும் குறிப்பதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**குறளில் இடம்பெற்றுள்ள பறவைகள்**

குறளில் ஐந்து பறவைகள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. அவை அன்னம், மயில், காக்கை, கூகை, கொக்கு ஆகிய புள்ளினங்களாகும். மற்றும் மயிலின் மயிற்தோகையும் ‘பீலி’ என்ற சொல்லாட்சியுடன் இடம் பெற்றுள்ளது.

**அன்னம்**

அன்னம் அழகிய தோற்றத்தினால் பெற்ற பெயராகும். அ என்பதற்கு அழகு என்ற பொருளுண்டு. அம் வீக்கம், திரட்சி எனப் பொருள்படும்.

அழகியதும் திரண்டதுமான பறவை, அன்னம் என வழங்கப்பட்டுள்ளது. நீர்வாழ்ப் பறவைகளில் அழகிய பறவை அன்னம். இ∴து தூய வெண்மை நிறத்துடன், சிவந்த குறுகிய கால்களுடன் திரண்டு காணப்படும். இதனைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. “அன்னம் வெண்மை நிறத்தில் காணப்படுவதைக் கடற்கரையில் கிடக்கும் சங்கினைத் தன் துணையென எண்ணி மிதிக்கும் செயலும்,”(8) “பொய்கையில் அன்னச் சேவலைப் பிரிந்த பெடை, நீரில் விழும் நிலவின் நிழலைத் துணையென எண்ணுவதும்,”(9) “வண்ணாத்தி கஞ்சிப்பசை கொண்டு துறையில் தோய்த்துவிட்டதை ஒத்த மயிர் உடையது”(10) போன்றவை விளக்கும். அன்னத்தின் கால்கள் சிவந்து, குறுகியதாக இருப்பதை,

“விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்”(11)

“குறுங்கா லன்னங்”(12)

என்ற சங்க இலக்கிய அடிகள் விளக்கும். அன்னம் குறுகிய கால்களைக் கொண்டுத் தத்தித் தத்தி நடப்பதும், வாத்தைப் போன்று கொழு கொழுவென்று, அதிக உயரமின்றி, வெண்மை நிறத்துடன் காணப்படுவதாலும் அழகு என்ற பொருளில் அன்னம் பெயர் பெற்றுள்ளது.

இருபதாம் நூற்றாண்டின் தமிழ்ப் பெயரகராதி அன்னம் என்ற சொல்லின் வேற்றுச் சொற்களாக “அஞ்சம், உன்னம், எகினம், ஓதிமம், மராளம், வக்கிராங்கம்”(13) ஆகிய சொற்களைச் சுட்டுகிறது. “சங்க காலத்தில் பறக்கும் வாத்து இனப்பறவை அன்னம் என்று கூறப் பெற்றதாகத் தெரிகிறது”(14) என்பர் பி.எல்.சாமி. “வெண்மையான சிறகுகளை உடைய அன்னப் பறவையின் கால்கள் சிவந்த நிறத்தோடு, குறுகியதாகவும், அடிப்பகுதியில் தோலுடையதாகவும் இருக்கும் என்றும் அது வானத்தில் மிக வேகமாகப் பறந்து செல்லும் இயல்புடையது என்றும் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

புன்னை மரங்கள் நிறைந்த நெய்தல் நிலப்பகுதிகளில் வாழும் அன்னம் தனது குஞ்சுகளுக்குக் கடலிலிருந்து இரை கொண்டு செல்லும். பாலையும் நீரையும் கலந்துவைப்பினும் பாலை மட்டும் உண்ணும் ஆற்றல் உடையது என்று கூறும் கருத்தினை, வள்ளுவமோ சங்க இலக்கியங்களோ குறிப்பிடவில்லை”[15] என்பர் இல.செ.கந்தசாமி.

குறளில் அன்னப்பறவையைக் கூறாமல் அதன் சிறகு பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்னச் சிறகினை, அன்னத்தின் தூவி என்றழைக்கிறார் வள்ளுவர். தலைவியின் மென்மை நலத்தைப் புனைந்துரைக்கும் தலைவனின் வாய்மொழியாகக் கூறப்பட்டுள்ளது. மிக மென்மையான அனிச்சமலரும், அன்னப் பறவையின் சிறகும் காதலியின் பாத அடிக்கு நெருஞ்சி முள் போன்றவை என்று கூறுகிறார். இதனை,

“அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்”[16]

என்கிறார் வள்ளுவர். அன்னத்தின் நடையைப் பெண்ணின் நடையோடு ஒப்பிட்டு மகிழ்வர் கவிஞர். இராமன் சீதையின் நடையை அன்னத்தின் நடையோடு ஒப்பிட்டு மகிழ்ந்ததை,

“ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்”

என்று கம்பர் அழகுபடக் கூறுவது நோக்கத்தக்கது.

மென்மையான அனிச்சமலரும், அன்னத்தின் சிறகுகளும் அப்பெண்ணின் பாதங்களுக்கு நெருஞ்சி முள் போல வருத்தத்தினைக் கொடுக்கும் என்று கூறுகிறார். அப்பெண்ணின் பாதங்கள் மென்மையானதைச் சொல்லவந்த வள்ளுவர், மிகவும் மென்மையான உவமைகளால் ஒப்பிட்டிருப்பது சிறப்பிற்குரியதாகும். நலம் புனைத்துரைத்தல் அதிகாரத்தில் அனைத்துக்

குறள்களிலும் இயற்கையினை உவமை காட்டியிருக்கிறார் வள்ளுவர். அனிச்சம், பலவகையான மலர்கள், மூங்கில், தளிர்நிறம், முத்து, நறுமணம், குவளைமலர், அனிச்சமலர் காம்பு, மதி, விண்மீன், மதியில் உள்ள மறு, அன்னப்பறவையின் சிறகு ஆகிய அனைத்தும் இயற்கைப் பொருட்களாக இருப்பது அறியப் பெறுகிறது. இவை மனித உணர்வுகளுக்கு உந்துதலாகவும் வடிகாலாகவும் விளங்கி வருகின்றன.

**மயில்**

குறிஞ்சி நிலக் கருப்பொருளாகிய மயில் அழகுமிகுந்த பறவை. மயிலைக் குறிக்க மயில், மஞ்ஞை, தோகை போன்ற சொற்கள் இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. மயில் என்ற சொல் 'மை' என்பதன் அடியாகப் பிறந்தது. மயிலின் நிறம் கருமை கலந்த நீலநிறத்தில் காணப்படும். பிற பறவைகளுக்கு இல்லாத தனிச்சிறப்பு, மயிலின் நீண்ட தோகையாகும். முகிலைக் கண்டால் மயில் மகிழ்ந்தாடுதல் இயல்பு. "மழை வரவு அறியா மஞ்ஞை ஆலும்"[(17)] என்று ஐங்குறுநூறு கூறும்.

மயில் அழகிய பறவை. அதன் தோகை அழகிலும் அழகியது கண் போன்ற உருவ அமைப்பினைக் கொண்டது. தோகையுடையது ஆண் மயில் என்றும், தோகையற்றது பெண் மயில் என்றும் இனம் பிரிக்கலாம். மயிலின் சாயலைப் பெண்ணின் சாயலோடு ஒப்பிட்டு மகிழ்கின்றார் வள்ளுவர். இன்று இந்தியாவின் தேசிய பறவையாக இருப்பதும் சுட்டப் பெறுகிறது.

வலியறிதலில் தான் செய்யக் கருதிய வினைவலி, அதனைச் செயல்படுத்தும் தன்வலி, அதனை விலக்கலுறும் மாற்றானின் வலி ஆகிய நான்கும் மன்னனால் மிக நுணுக்கமாக அளந்தறியப்படல் வேண்டும். இதனை,

"பீலிபெய் சாக்காடும் அச்சிறும் அப்பண்டம்

சால மிகுத்துப் பெயின்''[18]

என்கிறார். மயிலிறகு ஏற்றிய வண்டியாயினும் அதிகமாக ஏற்றப்பட்டால் வண்டியின் அச்சு முறிந்து போவதைப் போல், வல்லமை உள்ள ஒருவன் தன் பலம் தெரியாமல் செயல்பட்டால் பலமில்லாதவரிடத்திலும் கூடத் தோற்றுப் போவான் என்பதை எடுத்துரைக்கிறார். ''இந்தக் கருத்து மயில் தோகையையும் வண்டி அச்சையும் மட்டும் பொறுத்ததாக இல்லை. உலகத்தில் உள்ள அத்தனையும் இதில் இருக்கின்றன. உணவு உயர்ந்ததாக இருந்தாலும், அளவோடு சாப்பிடு! இல்லையானால் அது உடம்பை முறித்துவிடும்''[19] என்பர் கி.ஆ.பெ.விசுவநாதம். (பெயின்-Pain) பெயின் என்பது ஆங்கிலத்தில் வலியைக் குறிக்கப் பயன்படும் Pain ஆக இருப்பதையும் எடுத்துக் கூறலாம்.

பிறிதொரு குறளில் இன்பத்துப்பாலின் முதல் அதிகாரமான தகையணங்கு உறுத்தல் என்ற அதிகாரத்தில் முதற்குறளில் மயில் பற்றிய செய்தி உள்ளது. அடர்ந்த அழகிய கூந்தலையுடைய இப்பெண் தேவமகளா! மயிலோ! மானிடப் பெண்ணோ! என என் நெஞ்சு மயங்குகின்றது. இதனை,

''அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை

மாதர்கொல் மாலுமென் நெஞ்சு''[20]

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. இவை யாவும் பெண்ணின் அழகினைக் குறிப்பதோடு ஆடவனை எவ்வாறு வருத்துகின்றன என்பதையும் குறித்துக் காட்டுகின்றன. ஆடவனின் மன உறுத்தலைக் குறிக்க வந்த குறளாகக் காணப்படுகிறது.

**காக்கை**

காக்கை எழுப்பும் ஒலியினால் அமைந்த பெயர். கா... கா... காகா... காக்கா...காக்கை என வழங்கப்பட்டுள்ளது. மக்கள் வழக்கில் காக்கா என்றே அழைக்கின்றனர். காக்கைகளில் ஊர்க்காக்கை, அண்டங்காக்கை என்ற

இரண்டு வகையுண்டு. ஊர்க்காக்கை கழுத்துப் புறத்தில் சாம்பல் நிறத்துடன் காணப்படும். அண்டங்காக்கை உடல் முழுவதும் கருமையாக இருக்கும். இவை காடுகளில் காணப்படுவதால் கானக்காக்கை[21] என்றும் முழுவதும் கருமையாக இருப்பதால் கருங்காக்கை[22] என்றும் வழங்கப்பட்டுள்ளது. காக்கை எழுப்பும் ஒலியினாலும், தோற்றத்தாலும் பெயர் பெற்றுள்ளது. 'காக்கை உலகின் முதல் வாடகைத்தாய்' என அழைக்கும் விதத்திலும் அதன் செயல்கள் உள்ளன.

தமிழ்ப் பெயரகராதி காக்கை குறித்த வேறு சொற்களைக் குறிப்பிடுகின்றது. "அரிட்டம், உரண்டம், கரடம், கரவாகம், கரும்பிள்ளை, காகம், காரி, பரபிருதம், பலிபுட்டம்"[23] ஆகிய சொற்கள் காக்கையைக் குறிக்கின்றன. காலையில் எழுந்திருத்தல், காணாமலே புணர்தல், மாலை குளித்தல், மனைபுகுதல், உற்றாரோடு உண்ணல், உறவாடல் ஆகிய ஐந்து நற்குணங்கள் காக்கையிடம் உண்டு.

காக்கைகள் தமக்கு இரை கிடைத்தால் மறைக்காமல் தன் இனத்தையும் அழைத்து அவற்றோடு சேர்ந்துண்ணும். பல்வகை ஆக்கங்களும் அக்காக்கையைப் போன்ற இயல்புடையார்க்கே உள்ளனவாம். இதனை,

"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள"[24]

என்கிறார் வள்ளுவர். காக்கையின் குணம் தழுவி வாழும் பண்பு, இன்றைய கூட்டுறவு இயக்கத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. ஏதேனும் உணவு கிடைத்தால் அது தனது இனத்தைக் கரைந்து அழைத்து ஒன்று சேர்ந்து உண்ணும் இயல்புடையது. காக்கையைப் போல மக்களும் சுற்றம் தழுவி வாழ வேண்டும் என்று கூறுகின்றார். உணவைக் கண்டதும் காக்கைக் கரைந்து தன் இனத்தை அழைத்து உண்ணும், அதைப் போலச்

செல்வமுடையவர் தாம் பெற்றவற்றை மறைக்காமல் சுற்றமும் பெறுமாறு நினைக்க வேண்டும். அத்தகைய இயல்புடையவர்க்கு அறம், பொருள், இன்பம் ஆகிய ஆக்கம் கிடைக்கும் என்று குறள் குறிப்பிடுகின்றது. காக்கையின் இப்பண்பின் மூலமாகச் சுற்றத்தைத் தழுவி வாழும் மனித வாழ்க்கையைக் குறள் எடுத்துரைக்கின்றது.

**கூகை**

சங்க இலக்கியத்தில் கூகையைக் கூகை என்றும் கோட்டான் என்றும் கூறப்பெறுகிறது. கூகை என்ற பெயர் இப்பறவை கூ...கூ... என்று கத்துவதால் வந்ததென்பர்.[25] கூகை பல்வேறு குரல்களில் அலறுவதை,

“வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு”[26]

எனவும், பொந்தின் உள்ளிருந்து கூவி அழைப்பது போல் அலறுவதை,

“பொத்த அறையுள் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவி எனச் செத்தோர் பயிரும்”[27]

எனவும் புறநானூற்றில் குறிக்கப்பட்டுள்ளன. இதனைச் சாவுக் குருவி என நாட்டுப்புறத்தில் அழைப்பர். கூகை ஒலிப்பதைக் ‘குழறும்’ (குறுந்.158:1, அகம்.122:4) எனச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

முரவுவாய் முதுபுள், குரால், குடிஞை, ஆண்டலை, ஊமன், கொசிகம், நிசாசரி, பெரும்புள் என்பன கூகையைக் குறிக்கும் வேறு சொற்களாகும். காகம் தன்னைக் காட்டிலும் வலிமையுடைய கோட்டானை அதற்குக் கண் தெரியாத பகற்பொழுதில் போரிட்டு வெல்லும். அதுபோலப் பகைவருடன் போரிட்டு வெல்லக் கருதும் அரசர்க்கு ஏற்ற காலம் இன்றியமையாதது. இதனை,

“பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது”[28]

என்பர் வள்ளுவர். மன்னனானவன் காலத்தின் தன்மை கருதிச் செயல்படுதல் வேண்டும். எந்தவொரு செயலைச் செய்யவும், பகை முடித்து வெற்றி பெறவும் காலம் கனிந்து வரவேண்டும். அதுவரை காத்திருத்தலும், திட்டமிடலும் தேவை. கூகை என்னும் பறவை காக்கையினும் பன்மடங்கு வலிமையுடையதாகும். ஆயினும் பகற்பொழுதில் எளிதாகக் காக்கை கூகையை வென்றுவிடும். ஆதலால், ஏற்ற பொழுதும் இடமும் தேர்ந்து, போர் தொடங்குதல் வேண்டும் என்கிறார் வள்ளுவர். இதனை,

'இடத்தொடு பொழுதும் நாடி எவ்வினைக் கண்ணும் அஞ்சார்
மடப்பட வின்றிச் சூழும் மதிவல்லார்க் கரியதுண்டோ
கடத்திடைக் காக்கை ஒன்றே ஆயிரங்கோடி கூகை
இடத்திடை அழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்த தன்றே'

என்ற சீவக சிந்தாமணியின் பாடல் ஒப்பு நோக்கத்தக்கது.

கூகை பகலில் உலவுவது இல்லை. இரவில் திரிந்து உணவு தேடும் இயல்புடையது. பகலில் வெளிவராது ஒடுங்கிக் கிடக்கும். இதன் செயலுக்குப் பரணர், பறவைகட்குப் பாதுகாவலாக இருந்து நன்மை பல செய்த ஆய்எயினன் என்ற வள்ளல், ஞிமிலி என்னும் வீரனோடு போர் செய்து போர்க்களத்தில் இறந்துபட்டான். அப்பொழுது நண்பகல் ஆனமையால் அவ்வள்ளலின் மேனியில் வெயில் படாதவாறு பறவைகள் எல்லாஞ் சென்று நிழல் செய்து தன் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டன. இந்தக் கூகை அன்று அவ்வள்ளலைக் காணச் செல்லாது தவறியதற்கு நாணிக் கடும் பகலில் பலர் காண உலவுவதில்லை என்று பாடுகிறார். இதனை,

"கடும்பரிக் குதிரை ஆசுய் எயினன்
நெடுந்தேர் ஞிமிலி யொடு பொருகளம் பட்டெனக்
காணிய கெல்லாக் கூகை நாணி

கடும்பகல் வழங்கா தாஅங்கு"[29]

என்ற அகநானூற்றுப் பாடலின் வழி கூகையின் செயலினை அறிய முடிகிறது. மரப்பொந்துகளில் வாழும் தன்மையுடைய இப்பறவை, கூகை, கோட்டான், ஆந்தை என்று பல பெயர்களில் குறிக்கப்படுகின்றது. வளைந்த வாயினையும், பெயரிய கண்களையும், கூரிய நகங்களையும் உடைய கூகை, இரவில் அலறுவது அச்சத்தை விளைவிப்பதாக இருக்கும். இக்கூகைகள் எலிகளைப் பிடித்து உண்பதில் பெருவிருப்பம் கொண்டவை. இவற்றிற்குப் பகலில் கண் தெரியாது. ஆதலின் இவ்வினத்திற்குப் பகையான காக்கைகள் இவற்றைப் பகல் நேரத்தில் தாக்கி அழிக்க முற்படும். இரவில் காக்கைகளுக்குக் கண் தெரியாது. ஆதலின் அவற்றை அக்கூகைகள் இரவு நேரங்களில் தாக்கி அழிக்கும். இப்பறவை இனங்கள் மாறுபட்ட நேரங்களில் பார்வையற்று இருக்கின்றன. இப்பறவையினங்கள் காலம் பார்த்து ஒன்றை ஒன்று வெற்றி கொள்வது போல் ஒரு செயலில் வெற்றியையே நோக்கமாகக் கொண்டவன் உரிய காலத்தில் செயலைத் தொடங்கி முடிக்க வேண்டும் என்பதற்கு இவற்றை உவமையாகக் கூறுகின்றார்"[30] வள்ளுவர் என்பர் இல.செ.கந்தசாமி. இரவில் காக்கைக்கும், பகலில் கூகைக்கும் கண் தெரியாத தன்மை உடற்கூறு அடிப்படையில் சிந்திக்கத் தக்கதாகும். விளை பொருட்களுக்குச் சேதம் விளைவிக்கும் எலிகளை உண்பதால் கூகைகள் மனிதனுக்கு நன்மை செய்கின்றன.

**கொக்கு**

கொக்கு அவை எழுப்பும் ஒலியினால் அமைந்த பெயரென்பர். கொடு, கொடுக்கு, கொடுக்கி, கொக்கி போன்ற சொற்கள் வளைவு என்ற பொருளையே தரும். கலித்தொகையில் 'கூன் உடையவன் கொக்கு உரித்தென்ன கொடுமடாய்' (கலித்.94:18) எனச் சுட்டப்பட்டுள்ளான்.

கொக்கினை உரித்து வைத்தாற் போன்று வளைந்த கூனினை உடையவன் என்பது பொளாகும். கொக்கு என்பது வளைவான, தனது உருவத்தால் பெற்ற பெயராகும். கொக்கு, தூய வெண்மையன்றி பழுப்பு நிறமுடையது என்பதை, மாரிக் காலத்தில் நனைந்த சுண்ணாம்பு பூசப்பட்ட சுவர் போலவும், வெளுத்து நரைத்த கூந்தல் நிறம் போலவும்[31] காணப்படுவதைச் சங்கப் பாடல்கள் விளக்கியுள்ளன.

காலத்தை எதிர்பார்க்க வேண்டிய பருவத்தில் கொக்கைப் போல காத்து இருந்து காலம் வாய்த்த போது கொக்கு மீனைக் குத்தினாற் போலத் தவறாமல் செய்ய வேண்டிய செயலைச் செய்து முடிக்க வேண்டும். இதனை,

“கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து”[32]

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

வெண்மையான சிறகுகளையும் இளம்பச்சை நிறமுடைய நீண்ட கால்களையும் உடைய கொக்கினைப் ‘பைங்கால் கொக்கு’ என்று கூறுவர். அவை ஓடை போன்ற நீர்நிலைகளின் கரையோரங்களில் ஆடாது அசையாது நெடுநேரம் நின்று கொண்டிருக்கும். சிறிய மீன்களை எல்லாம் ஓட விட்டுவிட்டு அதற்குரிய உணவாகிய பெரிய மீன்கள் நீரின் வழியே வரும்பொழுது மிகவும் வேகமாக விரைந்து சென்று கொத்தி எடுத்துக் கொள்ளும் இயல்பினது. ‘ஓடு மீன் ஓட உறுமீன் வருமளவு வாடியிருக்குமாம் கொக்கு’ என்கிறது தமிழ் இலக்கியம். இவ்வாறு ஒரு செயலைச் செய்ய முனைந்தவன் அதற்குரிய காலம் வரும் வரை பொறுமையாகவும், விழிப்புணர்வோடும் இருந்து தக்க சமயம் வாய்க்கும் பொழுது கொக்குப் போல் விரைந்து சென்று அச்செயலை முடிக்க வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார். மன்னர் காலம், நேரம்,

இடமெல்லாம் பார்க்கிற போது கொக்கு மாதிரிப் பொறுமையாயிருக்க வேண்டும்"[33] என்பர் கி.ஆ.பெ.விசுநாதம்.

**தொகுப்புரை**

பறவைகளில் கூகை, காகம், கொக்கு, மயில், அன்னம் ஆகியவை குறிக்கப் பெறுகின்றன. கோட்டானுக்கும் காகத்திற்கும் பிறவிப்பகை. கோட்டானுக்குப் பகலில் கண் தெரியாது. காகம் , அதனைப் பகலில் வென்றுவிடும். காகத்தினிடம் உள்ள ஐந்து அருமையான குணங்களில் ஒன்றான, சிறிது உணவு கிடைப்பினும் தன் இனத்தாரை அழைத்துப் பகுத்துக் கொடுத்து உண்பதை வள்ளுவர் உணர்ந்து பாராட்டுகிறார்.

மனிதர்களுக்கு எந்த ஒரு செயலைச் செய்யவும், பகை முடித்து வெற்றி பெறவும் காலம் கனிந்து வரவேண்டும். அதுவரை காத்திருத்தலும், திட்டமிடலும் தேவை என்பதை வலியுறுத்தக் காக்கை, கூகை, கொக்கு ஆகியவற்றின் செயலின் வழி மேற்கோள் காட்டுகிறார்.

கொக்கு, நல்ல வாய்ப்பான உணவு கிடைக்கும் வரை, ஒற்றைக்காலில் நின்று கொண்டிருக்கும். கிடைத்தால் ஒரே குத்தாகக் குத்தித் தின்றுவிடும்.

பறவைக் குஞ்சுகள், இறகு முளைக்கிற வரையில் கூட்டில் இருக்கும் பறக்கக் கூடிய நிலை வந்தால் பறந்துவிடும் என்று, பறவைகளின் பொதுக் குணமும் வள்ளுவரால் பேசப்படுகிறது. அக்காலத்தில் பீலி, அன்னத்தின் தூவி இவைகளின் பயன்பாடு அதிகமாக இருந்திருக்கின்றன என்பதை வள்ளுவரின் குறளின் வழி அறியப் பெறுகிறது.

அழகியல் நோக்கோடு மயிலின் சாயலை பெண்ணுக்கு உவமை காட்டியிருப்பது பெறப்படுகிறது. பறவைகள் வாயிலாகக் காலமறிதல், பகிர்ந்து உண்ணுதல், சுற்றம் தழுவுதல், அழகுணர்ச்சி போன்றவற்றை மனிதர்களுக்கு வலியுறுத்துகிறார் என்பது பெறப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. தமிழ் லெக்சிகன், (தொகுதி 4), ப.256.

2. பி.இராமநாதன் (ப.ஆ), இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப. 257.

3. மேலது, ப. 127.

4. து.இரவிக்குமார், சங்கப் பாடல்களில் பெயர்க்குறியீடுகள் (முனைவர்பட்ட ஆய்வேடு), பக்.249250.

5. குறள்: 338.

6. கி.ஆ.பெ.விசுவநாதம், (வள்ளுவரும் குறளும்), குறள் களஞ்சியம், ப.220.

7. குறள்: 274.

8. ஐங்.106:3

9. கலித்.70:16.

10. அகம்.34:1113.

11. நற்.356:2.

12. குறுந்.300:6.

13. பி.இராமநாதன் (ப.ஆ), இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப. 80.

14. பி.எல்.சாமி, புள்ளின விளக்கம், ப.5.

15. இல.செ.கந்தசாமி, திருக்குறளில் வேளாண்மை, ப.98.

16. குறள்: 1120.

17. ஐங்.298:1.

18. குறள்: 475.

19. கி.ஆ.பெ.விசுவநாதம் (வள்ளுவரும் குறளும்), குறள் களஞ்சியம், ப.197.

20. குறள்: 1081.

21. புறம்.343:1.

22. ஐங்.391:1

23. பி.இராமநாதன் (ப.ஆ), இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப. 352.

24. குறள்: 527.

25. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக்.286287.

26. புறம்.359:2.

27. மேலது, 240:78.

28. குறள்:481.

29. அகம்.148.

30. இல.செ.கந்தசாமி, திருக்குறளும் வேளாண்மையும், ப.100.

31. அகம்.346:23, புறம்.277:12.

32. குறள்: 490.

33. கி.ஆ.பெ.விசுவாதம், (வள்ளுவரும் குறளும்), குறள் களஞ்சியம், ப.184.

## இயல் – 5

## தொழில்கள்

உலகியல் வாழ்க்கைக்கான கருத்தியல் பெட்டகமாகக் கிடைத்துள்ள வரம் திருக்குறள். மனித வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து ஒழுக்க நெறிகளையும் கொண்டது. எத்தனைப் புதுக் கருத்துக்கள் புதுச் சிந்தனைகள் புதிய தொழில்நுட்பங்கள் வந்தாலும், அத்தனையும் தன்னுள் புதைத்து வைத்திருக்கிறது. திருக்குறளில் தொழில்கள் குறித்தான செய்திகள் நேரடியாவும், மறைமுகமாகவும் பதிவு செய்திருப்பதையும் இயற்கை வளங்களை அழிக்கும் தொழில்கள் குறித்தும் ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

திருக்குறளில் காணப்படும் தொழில்கள் பல. சில தொழில்களைக் குறித்து வள்ளுவர் வெளிப்படையாகக் கூறும் கருத்துக்களையும் காணலாம். குறளில் வருங்குறிப்புகளினாலும், உவமைகளினாலும் பல தொழில்களையும் தொழிற்கருவிகளையும் பற்றிய செய்திகளை அறியலாம்.

தொழில்கள் நாட்டிற்கு வளத்தைத் தருகின்றன. பலவகைத் தொழில்கள் நிறைந்திருக்கும் சமுதாயமே சிறந்த சமுதாயமாகும். மக்கள் கல்விக்கும், அறிவுக்கும், திறமைக்கும், உடல் வலிமைக்கும் தக்கனவாக அவர்கள் செய்யும் பணிகளும் பலவாகும். கல்வியிலும், சொல்வன்மையிலும், அறிவுக் கூர்மையிலும், பிற ஏற்ற பண்புகளிலும் மிக்கோர் சிலர் அமைச்சர் முதலிய அரசியல் பணிகளில் ஈடுபடுகின்றனர். பிறர் வாணிபம், உழவு, மருத்துவம் முதலிய தொழில்களில் ஈடுபடுகின்றனர். சிலர் கல்வியையே தம்பணியாகக் கொண்டு ஆசிரியத் தொழிலில் அமர்கின்றனர். வீரம் மிகுந்த இளையோர் படைத்தொழிலில் சேருகின்றனர். பலவகைக் கைத்தொழில்களிலும் பிறருக்கு ஏவல் செய்யும் பணிகளிலும் ஈடுபடுவோரும்,

சுயநலத்திற்காக இயற்கை வளங்களைச் சுரண்டும் தொழில் முனைவோரும் உளர்.

**தொழிலில் வேறுபாடு கருதாமை**

மக்கள் அனைவரும் பிறப்பால் ஒன்றானவர். தொழிலால் வேறுபடுபவர் என்று கூறுவதிலிருந்து பல தொழில்கள் அக்காலத்தில் இருந்தமை புலனாகிறது. “திருக்குறளில் பார்ப்பார், அந்தணர், அரசர், உழவர், ஆயர் முதலிய பெயர்கள் குறிக்கப் பெறுகின்றன. இவற்றுள் அந்தணர் என்ற சொல்லாட்சி இரண்டு இடங்களில் வந்துள்ளது. ஒன்று அந்தணரின் இயல்பு இதுவென இலக்கணம் வரையறுக்கப்படுகின்றது. “அந்தணர் என்போர் அறவோர் என இச்சொல், காமவெகுளி மயக்கங்களை முற்றுந் துறந்த முனிவர்களையே குறிப்பதாகும். பின் பாதியில் அதன் காரணத்தை விளக்குகிறார் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான் என. எல்லா உயிர்களிடத்தும் கருணையைக் காட்டி ஒழுகுதலால் அந்தணர் எனப்பட்டனர். அந்தணர்கள், தற்காப்பிற்காகவாவது தந்நலத்தைச் சிறிதும் பேணாது, உலக உயிர்களையே கருணையால் காப்பவர்கள் ஆதலின், அவர்களையும், அவர்களால் வரையறுக்கப் பெற்ற அறநூல்களையும் பாதுகாக்க மன்னன் வேண்டும். இதனை, அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல் என்கிறார். இரண்டு இடங்களிலுமே அந்தணர் முனிபுங்கவர்களே என்பதும், அவர்களது சிறப்பியல்பு, தண்ணளி உடையராதல் என்பதும் தெரிவிக்கப் பெற்றன. நச்சினார்க்கினியர், அந்தத்தை அணவுவார் அந்தணர் என்றாயிற்று என்பர். அங்ஙனமாயின், அந்தம் என்ற மகர ஈற்று வடசொல் மகரம் கெட்டு, அந்த அணர் என்பன, தமிழ் விதிப்படி புணருமாயின், அந்தவணர் என்றும் புணர வேண்டும். ஈண்டு வருமொழி அகரம், விகாரத்தால் தொக்கு, அந்தணர் என்று ஆயிற்று என அமைதி எண்ணத்தகும். எல்லார் கருத்தினும் அந்தணர், ஞானானுபதி உடையவர்களையே உணர்த்தி நிற்றல் தெளிவு. இச்சொல், பிறர் யாருக்கும் இல்லாத அழகிய தட்பத்தினை

உடையராதல் பற்றியே கடவுளுக்கும் பெயராயிற்று. கடவுளை அறவாழி அந்தணன் என்றது"[1] என்பர் ச.தண்டபாணி தேசிகர்.

பார்ப்பான் என்பது, சாதிப் பெயராகவே காட்டப் பெறுகின்றது. அவர்களுடைய தொழிலாக வேதம் ஓதுதலும், ஓதுவித்தலும் ஆகும். ஐயர் என்பது சாதிப் பெயரில்லை அறிவில் சிறந்தவர்கள் யாவரும் ஐயர் எனப்பட்டனர். அதுபோல, மள்ளர் என்பதும் ஒரு சாதிப் பெயராக அறியப்படவில்லை என்பதை,

'அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வரும் தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்'

என்று திவாகர நிகண்டு விளக்கமளிப்பது குறிப்பிடத்தக்கதாகும். உழவுத் தொழில் செய்தவர்களும், போர்த்தொழில் செய்தவர்களுக்கும் உள்ள பொதுப் பெயராக மள்ளர் என்ற சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டது.

செயல்முறையின் நன்மை தீமைகளுக்கு ஏற்பப் பாகுபாடுகள் காட்டப்படுமே அன்றி மக்களை ஆளும் தொழில் ஆதலின் உயர்ந்தது என்றும், தாழ்ந்தது என்றும் இல்லை என்பது வள்ளுவரின் நோக்கமாகும். இதனை,

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"[2]

என்கிறார். பிறப்பால் சாதி வேறுபாடுகள் இல்லை என்பதும் தொழிலால் உயர்வு தாழ்வு கற்பித்தல் கூடாது என்பதும் தெளிவாகின்றது.

**உழவுத் தொழில்**

உழவுத் தொழில் சங்க கால மக்களின் தலையாய தொழிலாக விளங்கியது. மக்களுக்கு உணவை விளைவித்துக் கொடுக்கும் உழவர் உலகத்திற்கு உயிர் கொடுத்தோராகக் கருதப்பட்டனர். உணவு இல்லை எனில் உலகத்தில் உயிர்கள் இல்லை.

"உண்டி முதற்றே உணவின் பிண்டம்

உணவெனப் படுவது நிலத்தொடு நீரே"(3)

என்று புறநானூறு கூறுகிறது.

ஒரு நாடு, வளர்ச்சியில் முக்கியப் பங்கினை வகிப்பதற்கும் உயிர்கள் அனைத்தும் வாழக் காரணமாக அமைவதற்கும் முக்கியக் காரணி உழவுத் தொழிலாகும். உழவுத் தொழில் செய்பவர்களைத் தொல்காப்பிர்,

"ஏரோர் களவழி அன்றிக் களவழித்

தேரோர் தோற்றிய வென்றியும் தோரோர்"(4)

என்ற நூற்பாவில், ஏர்முனையும் போர்முனையும் ஒரு நாட்டின் வளர்ச்சியினைக் காட்டுபவை எனக் கூறுகிறார்.

உழவுத் தொழிலே உயர்ந்த தொழில் என்றும், சிறந்த தொழில் என்றும், தேவையான தொழில் என்றும் குறிப்பிட்டுள்ளார். இதுவே உலகை உயிருடன் வாழவைக்கும் தொழில். இத்தொழிலால் வரும் விளைவு குறைந்தால் வேறு எத்தொழிலும் உலகில் நடைபெற மாட்டாது எனக் குறிப்பிட்டுள்ளார். இதனை,

"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்

உழந்தும் உழவே தலை"(5)

என்று வள்ளுவர் கூறுகிறார். உழவு செய்வோர் பிறரிடம் குறை கூறி ஒரு பொருளையும் தவறாது கொடுப்பதும், எத்தொழிலைச் செய்பவருக்கும் தொழிலே செய்ய இயலாதவருக்கும் உணவைத் தருவதும் உழவுத் தொழிலாகும். உழவர்கள் உழுதொழில் செய்யாமல் கையைக் கட்டிக் கொண்டு இருந்துவிட்டால் உலகப் பொருள்களை எல்லாம் துறந்துவிட்டோம் என்று கூறும் துறவிகளுக்கும் வாழ்க்கை இல்லை. இதனை,

"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்

விட்டேமென் பார்க்கும் நிலை"(6)

என்கிறார் வள்ளுவர்.

உழவுத் தொழில் செய்பவர், அத்தொழிலைச் செய்யாமல் பிற தொழில்களைச் செய்பவரையும் பாதுகாத்தலால் உலகத்தாராகிய தேர்க்கு அவர்களே அச்சாணியாவர் என்றும், உழுதுண்டு வாழ்வாரே வாழ்பவராவர். ஏனைய தொழில்களைச் செய்பவர் அவரை வணங்கி அவர்களின் பின்னால் செல்பவரேயாவார் என்றும் வள்ளுவர் கூறுகிறார். இதனை,

"உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅ∴து ஆற்றாது

எழுவாரை எல்லாம் பொறுத்து"(7)

என்றும்,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர்மற் றெல்லாம்

தொழுதுண்டு பின்செல் பவர்"(8)

என்றும் கூறுகிறார். உழுதுண்டு வாழ்பவர்களை, தொழுதுண்டு பின் செல்லுங்கள் என்று கூறுகிறார். தொழுவதென்றால், நமக்கும் மேலானதொரு பொருளைக் கண்ட போது மனந்தாழ்ந்து அடங்கி அப்பொருளின் வழி நிற்பதே தொழுகையாகும். வணங்கப்படும் பொருள் உயர்ந்ததொரு நோக்க முடையதாதல் வேண்டும்.

**உழுதல்**

அகல உழுவதைவிட ஆழ உழுவதே மேல் என்பது முதுமொழி. வள்ளுவர் இக்கருத்தினை வலியுறுத்துவதோடு எவ்வாறு உழவேண்டும் என்பதனையும் தெளிவுப்படுத்திக் கூறுகிறார். உழும் போது ஒரு பலம் புழுதி கால் பலம் புழுதி ஆகின்ற வரைக்கும் நிலத்தைக் காயவிட வேண்டும். அவ்வாறு காயவிட்டால் ஒரு பிடி எருவும் இல்லாமல் பயிர் நன்றாகச் செழித்து விளையும். ஏர் உழுவதைவிட எரு இடுவது நல்லது. இந்த இரண்டும் செய்து களை எடுத்தபின் நீர் பாய்ச்சுவதைவிடப் பாதுகாப்பது மிகவும் நல்லது என்கிறார். இதனை,

"தொடிப்புழுதி க∴சா உணக்கின் பிடித்தெருவும்

வேண்டாது சாலப் படும்"(9)

என்கிறார். வித்திலிருந்து பயிராகும் வரை ஒவ்வொரு படிநிலையிலும் செய்ய வேண்டியவை அனைத்தும் முக்கிய காரணிகளாக அமைவதால் ஒன்றன்பின் ஒன்றாகக் கூறியுள்ளார் என்பதும் பெறப்படுகிறது.

**எருவிடுதல்**

இயற்கையாகப் பயிர்கள் வளர நிலத்தை உழுது பண்படுத்துவது முக்கியமானதாகும். அதனைக் காட்டிலும் முக்கியமானது, உரமிடுதல் ஆகும். இதனை,

"ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்

நீரினும் நன்றதன் காப்பு"[10]

என்கிறார் வள்ளுவர். "ஒரு தலைவனுக்கும் தலைவிக்கும் காதல் தோன்றுகிறது. அக்காதல் வளர்ச்சியை ஒரு பயிரின் வளர்ச்சியாகக் காணுகிறார் வள்ளுவர். வளரும் பயிருக்கு எரு தேவை. அவ்வெருவும் பயிரிடும் தொடக்கத்தில் இட வேண்டும். அறுவடையின் போது எரு இடுதல் பயனற்ற செயலாகும். எருவில் பலவிதமான சத்துக்களும் (தழைச்சத்து, மணிச்சத்து, சாம்பல் சத்து) அடங்கி இருத்தல் வேண்டும். இந்நுணுக்கங்களை உணர்ந்த வள்ளுவர், காதலைப் பற்றி ஊரார் பேசுகின்ற பேச்சுக்களை எருவாக உருவகம் செய்கின்றார். ஊரில் உள்ளோர் தொடக்க காலத்தில்தான் அக்காதல் உறவைப் பற்றிப் பேசுவார்கள். அத்தகைய பேச்சுக்களே அவர்கள் காதலை மேன்மேலும் வளரச் செய்கின்றது. திருமணத்திற்குப் பிறகு அவர்களின் காதலைப் பற்றிய பேச்சே இராது. அதுபோல் வளரும் பயிர் மேலும் மேலும் வளரத் தொடக்கத்தில் எரு இட வேண்டும். அன்றியும் ஊரார் அவர்கள் காதலைப்பற்றிப் பேசியது போல எருவிலும் பலவிதமான சத்துக்கள் அடங்கியுள்ள எருவையே இடவேண்டும் என்பதையும் குறிப்பால் புலப்படுத்தி விடுகின்றார். இதனை, ஊரவர் கௌவை எருவாக என்ற குறள் தொடர் நமக்கு அறிவிக்கின்றது"[11] என்பர்

இல.செ.கந்தசாமி. எருவிடுதலின் இன்றியமையாமையை விளக்க வந்த வள்ளுவர்,

"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்

நீராக நீளும் நோய்"[12]

என்று கூறுகின்றார். இயற்கையாகக் கிடைக்கும் எருவினைப் பயன்படுத்த வேண்டும் என்பது பெறப்படுகிறது.

வள்ளுவர் உழவு என்னும் அதிகாரத்தில் தொடிப்புழுதி க.ஃ.சா உணக்கின் பிடித்தெருவும் வேண்டாது சாலப் படும் என்று கூறிவிட்டு, அதற்கு அடுத்த குறளில் ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின் நீரினும் நன்றதன் காப்பு என்றும் கூறியுள்ளார். முன்னர்க் கூறிய குறளில் நன்றாக உழுதால் எருவிட வேண்டாம் என்று கூறிய வள்ளுவர், பின்னர் கூறிய குறளில் உழுவதைவிட எருவிடுதல் நன்றாம் என்றும் கூறியுள்ளார். ஒரு முரண்பாடான செய்தியை முன்வைத்துவிடுகிறார்.

கடினத்தன்மையுள்ள புஞ்செய் நிலத்தை நன்கு உழுதால் அது இளக்கம் பெற்றுவிடும். ஆனால் இளக்கம் உள்ள நன்செய் நிலத்தைப் பலமுறை உழுதல் தேவையில்லை. புஞ்செய் நிலம் இயல்பாகவே வறண்டிருக்கும். அதனைப் பலமுறை உழுதால் அது மென்மையாகி நீரைத் தன்னுள் தக்க வைத்துக் கொள்ளும் திறன் பெறும். பிறகு நீர் பாய்ச்ச வேண்டும். வறண்டிருக்கும் புஞ்செய் நிலம் அதன் இயல்பான தன்மையால் பலமுறை உழும்போதே களைகள் மடிந்துவிடும். மடிந்த களைகளே எருவாகவும் மாறிவிடும். இதனால்தான் புஞ்செய் நிலத்தைப் பலமுறை உழவேண்டுமென்பர். இப்படிப்பட்ட நிலத்திற்குத்தான் வள்ளுவர், பிடித்த எருவும் வேண்டாம் என்று கூறியுள்ளார்.

புஞ்செய்ப் பயிர்கள் வேனிற் காலத்தில் விளையும். நஞ்செய்ப் பயிர்கள் மழைக்காலத்தில் விளையும். வேனிற்காலப் பயிருக்கு நீர் பாய்ச்சியே

தீரவேண்டும். மிக அதிகமான சூரிய ஒளியால் உணவு தயாரித்தலும், சுவாசித்தலும் எளிதாக நிகழ்வதால் பயிர் சூரிய ஒளியையும், காற்றையுமே உரமாகக் கொண்டு விளைந்துவிடும். வேனிற் காலம் என்பதால் உழவன் வயலிலேயே இருப்பான். அதனால் காப்பு செய்வது அவசியமில்லை. சூரிய வெப்பத்தால் பூச்சிகளும் அண்டாது.

நஞ்செய்ப் பயிர்கள் மழைக் காலத்தில் பயிடப்படுவதால் நீர் பாய்ச்ச வேண்டியதில்லை. சூரிய ஒளியும், காற்றும் இல்லாததால் எருவிட்டே தீரவேண்டும். களையும் பயிருக்கு இணையாக வளர்வதால் களையெடுப்பது இன்றியமையாததாகும். வெப்பம் இல்லாததால் பூச்சிகளின் தாக்கம் அதிகரிக்கும். மழைக்காலம் என்பதால் உழவன் வீட்டிலேயே தங்குவான் என்பதினால் வேலிக் காப்பு முதன்மையாகும். இவ்விரு குறள்களின் வழி இடனறிந்து பொருள் கொள்ள வேண்டும் என்பதோடு, வள்ளுவரின் வேளாண் தொழில் நுட்பத்தையும் அறிந்து கொள்ள முடிகிறது.

**நீர் பாய்ச்சுதல்**

ஏரையும் எருவையும் போல் அல்லாமல் நீர் பாய்ச்சுதல் பயிரின் அறுவடைக் காலம் வரைத் தொடர்ந்து நடைபெற வேண்டும். தலைவியின் களவு ஒழுக்கத்திலிருந்து கற்பொழுக்கத்திற்குச் செல்லும் வரை அறிவுரை கூறிக்கொண்டே இருப்பது போல் பயிர் வளர்ந்து அறுவடைக்குத் தயாராகும் வரை நீர்பாய்ச்ச வேண்டும் என்ற குறிப்பினை ‘அன்னை சொல் நீராக’ என்ற தொடரின் வழி அறியலாம்.

நீர் பாய்ச்சுவதின் இன்றியமையாமையை விளக்கிய வள்ளுவர், அதனால் விளையும் நன்மைகளையும் கூறியுள்ளார். “நல்ல உணர்வு உடையவர்களிடத்தில் ஒரு கருத்தைச் சொல்வோமானால் அது பல கருத்துக்களாக மலர்ந்து பெருநன்மை விளைக்கும். இச்செயலானது தானாகவே வளர்கின்ற பயிருக்கு மேலும் பாத்தி கட்டி நீரைப் பாய்ச்சுவது

போன்றதாகும். தானாகவே வளர்ந்து பலனைக் கொடுக்கும் மானாவாரிப் பயிருக்கும் தண்ணீர் பாய்ச்சிப் பெரும் பலனை அடையலாம். ஆதலின் எவ்வகைப் பயிருக்கும் நீர் பாய்ச்சுதல் வேண்டும் என்பதே கருத்தாகின்றது"[13]என்பர் இல.செ.கந்தசாமி.

**களையெடுத்தல்**

பயிர்கள் வளர்ந்து வரும்போது களைகள் தோன்றுவது இயல்பு. இக்களைகளை அவ்வப்போது களைந்துவிட வேண்டும். இல்லாவிடின் பயிர்கள் எதிர்பார்க்கும் பலனைத் தராமல் போய்விடும். நல்ல மனிதர்களிடையே சில தீய மனிதர்கள் தோன்றி நல்லவர்களின் நன்மையைக் கெடுத்து விடுவார்கள். அதுபோல, பயிர்களில் களைகள் தோன்றி நல் விளைச்சலைக் கெடுத்துவிடும். களைகளை வேரோடு அழிப்பதைப் போல, தீய மனிதர்களை அடியோடு அழித்துவிட வேண்டும். களைகளை அழிப்பதும் கொடியவர்களை அழிப்பதும் அழிவுச் செயல்கள் அல்ல. களைகளை அழிப்பது பயிர்களைக் காப்பாற்ற கொடியவர்களை அழிப்பது நல்லவர்களைக் காப்பாற்ற என்பது கருத்தாகும். இதனை,

"கொலையின் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்"[14]

என்கிறார் வள்ளுவர்.

**காப்பு**

வளரும் பயிருக்குக் காப்பு அவசியமாகும். பயிர்களுக்கு நோய் வராமலும், பயிர்களைப் பிற உயிர்கள் அழிக்காமல் காத்தலும் செய்தல் வேண்டும். இயற்கையாலும், செயற்கையாலும் வரும் தீமைகளைப் போக்குவதற்கு நாள்தோறும் சென்று கணகாணித்துக் கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். பயிர் பாராமல் கெடும் கடன் கேளாமல் கெடும் என்பது முதுமொழி. இக்காப்பினை இல்லற வாழ்க்கையோடு பிணைத்துக்

காட்டுகிறார் வள்ளுவர். ஒருவன் தன் மனைவியைப் பேணிக் காப்பது போல உழவன் தனது வயல்களையும் பயிர்களையும் பேணிக் காக்க வேண்டும் என்பது வள்ளுவரின் அறிவுரையாகும். இதனை,

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து

இல்லாளின் ஊடி விடும்"(15)

என்கிறார் வள்ளுவர். உழவுத் தொழிலில் இயற்கை விவசாயத்தை மறந்து, செயற்கை உரங்களை இட்டு தொழில் செய்கின்றனர். உலக அளவில், இயற்கை விவசாயத்தை அறிமுகப்படுத்தியது தமிழக விவசாயிகள் தான் என்பதை மறந்து விட்டோம். இன்று நட்டவுடன் நாளை வளர்ந்து கனி தர வேண்டும் என நினைக்கிறோம். இயற்கை விவசாயத்தில் இலாபம் இல்லை என நினைத்து, ரசாயன விவசாயம் மூலம் அதிக மகசூலுக்கு ஆசைப்படுகிறோம். ரசாயன விவசாயம் செய்வதால் நோய்கள் தாக்குகின்றன. புதிதாக பல நோய்கள் உருவாகி, குழந்தைகளையும் தாக்குகின்றன என்று தென்மண்டல தேசிய பசுமை தீர்ப்பாய நீதிபதிகள் வலியுறுத்தி (17.2.2016 தினமலர்) உள்ளதும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

**வேளாண்மைத் துணைத் தொழில்கள்**

வேளாண்மை ஒரு பெருந்தொழில். அப்பெருந்தொழிலுக்குத் தேவையான பொருள்கள், கருவிகள் ஆகியவற்றை ஆக்கித்தரும் தொழில்கள் வேளாண்மையைச் சார்ந்து செய்யப்படும் தொழில்கள், விளைபொருள்களைக் கொண்டு செய்யப்படும் தொழில்கள் அனைத்தும் வேளாண்மைத் துணைத் தொழில்கள் எனப்படும். தொழில் செய்யாது சோம்பி இருப்பவனைக் 'காணின் நிலம் என்னும் நல்லாள் எள்ளி நகையாடுவாள்' என வள்ளுவர் கூறுகின்றார்.

**வேளாண் கருவிகள்**

விவசாயத் தொழிலின் துணைத் தொழில்களாகத் தச்சுச் தொழில், கொல்லர் தொழில், கயிறு திரித்தல் போன்றவையும் மேற்கொள்ளப்படுவதாக வள்ளுவர் குறிப்பிடுகிறார். விவசாயத் தொழிலுக்கு வேண்டிய கருவிகளைக்

செய்து கொடுத்தல், விதைக்கான தானியங்களைத் தயார்படுத்தித் தருதல், மண்ணுக்கேற்ற பயிர் வகைகளைக் கண்டறிந்து கூறுதல், அறுவடை செய்யப்பட்ட பொருட்களை வியாபாரப்படுத்துதல் போன்றவை விவசாயத் தொழிலின் துணைத் தொழில்களாகப் போற்றப்படுகின்றன.

உழுவதற்கும், இறைப்பதற்கும், அறுப்பதற்கும், இன்னும் பிற செயல்களுக்கும் பயன்படுத்தப்பட்ட கருவிகள் குறித்து வெளிப்படையாகவும் குறிப்பாகவும் வள்ளுவர் கூறியுள்ளார்.

நிலத்தை உழுவதற்கு ஏர் என்ற கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். 'ஏரினும் நன்றாம் எருவிடுதல்', 'ஏரின் உழாஅர் உழவர்' என்ற குறள் வரிகள், ஏர் என்ற கருவியால் உழுதலைச் செய்தார்கள் என்பதை அறிவிக்கின்றன. ஏருக்கு நாஞ்சில் என்றும் மேழி என்றும் இரு வேறு பெயர்கள் உண்டு. கலப்பை என்பது பிற்கால வழக்காகும்.

ஏர் மரத்தால் செய்யப்படும் கருவி. ஏரோடு கொழுவையும் பொருத்தி உழுவர். அக்கொழு உடும்பு முகம் போலக் கூர்மையாக இருக்கும். அக்கொழு முழுதும் நிலத்தில் முழுகும்படி ஆழமாக உழுவார்கள். புஞ்செய் நிலத்தில் உழுத கொழு தேய்ந்து மழுங்கிப் போய் இருக்கும் என்று பொருநராற்றுப்படை கூறுவது ஒப்பு நோக்கத்தக்கது. வள்ளுவர், இரும்பினைப் பற்றிக் கூறி இருப்பதால் உழுவதற்கு ஏரோடு கொழுவும் பயன்படுத்தப்பட்ட உண்மையைக் குறிப்பால் உணரலாம்.

நுகம் என்ற கருவியும் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஏரில் மாடுகளைப் பூட்டி உழுவதற்கு நுகத்தடி வேண்டும். நுகம் நீளமானது. அதன் நடுப்பகுதியைக் குறிக்க ஓர் ஆணியை வைத்திருப்பார்கள். இதனால் ஏர், கொழு, நுகம் ஆகிய கருவிகள் வள்ளுவர் காலத்தில் பயன்பாட்டில் இருந்தமை புலனாகிறது.

**பிற தொழில்கள்**

வேட்டையாடுதல், இறைச்சி விற்றல், கள் விற்றல், நாவிதர் தொழில், கூத்தாடுதல், தச்சர் மற்றும் கொல்லர், குயத்தொழில்கள் குறித்தும் வள்ளுவர் கூறியுள்ளார்.

ஆதி மனிதர்கள் பாதுகாப்பின் பொருட்டும், உணவின் பொருட்டும் வேட்டைத் தொழிலை மேற்கொண்டனர். கரடுமுரடான அல்லது பட்டைத் தீட்டப் பெறாத கற்கருவிகளே ஆயுதங்களாகப் பயன்படுத்தப்பட்டன. பின்னர் வில்லும், அம்பும் முக்கிய ஆயுதங்களாயின. புதரில் மறைந்து கொண்டு வேடன் பறவைகளை வலைவீசிப் பிடிப்பதை வள்ளுவர்,

“தவம் மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று”(16)
கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது”(17)

என்று கூறுகிறார். இதன்வழி விலங்குகளும், பறவைகளும் வேட்டையாடப்பட்டதை அறியமுடிகிறது.

ஊன் உணவிற்காக உலகத்தார் விலங்குகளைக் கொல்லவில்லை எனில், ஊனை விற்பவர் இல்லாமல் போவார் என்று இறைச்சி விற்கும் தொழில் இருந்ததனை,

“தினற்பொருட்டால் கொல்லாது உலகுஎனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்”(18)

என்று குறிப்பிடுகிறார். வள்ளுவர் காலத்தில் கொல்வாரும் விற்பவரும் இருந்தமை தெளிவு. புலாலைத் தின்னும் பொருட்டாக உயிர்களை உலகத்தார் கொல்லாதிருந்தால், விலையின் பொருட்டு ஊன் விற்பவர் இல்லாமல் போவார். ‘புலால் உண்பவர் இல்லையானால், கொல்பவரும் இல்லை. இன்னும் தெளிவாகச் சொன்னால், புலால் உண்பவர்களே

புலாலுண்ணும் குற்றத்தைச் செய்வதோடன்றிப் பிறரைத் தன்னுடைய புலால் இச்சையின்மூலம் கொலைக்குற்றம் செய்யத் தூண்டுகின்றனர். கொலை செய்பவரைவிடக் கொலைக்குத் தூண்டுபவரே கொடியர்' என்ற குன்றக்குடி அடிகளாரின் கூற்று கவனிக்கத்தக்கது. இதனை, 'ஊனுண் துறமின், உயிர்க்கொலை நீங்குமின்' என்ற இளங்கோவடிகளின் கூற்றும் ஒப்புநோக்கத்தக்கது. இயற்கைப் படைத்த உயிர்களை அழித்து இறைச்சி விற்றல் தொழில் வள்ளுவரால் புறந்தள்ளப்பட்டதாகும்.

வேட்டுவத் தொழிலுடன் மீன் பிடிக்கும் தொழிலும் வள்ளுவர் காலத்திருந்தது. அதுவும் ஓர் உவமை மூலம் குறிப்பிடப்படுகிறது.

வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்

தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று''[19]

இங்குத் தூண்டிலிட்டு மீன் பிடிக்கும் வழக்கம் காட்டப்படுகிறது. இங்குப் பொன் என்றது இரும்பையே ஆகும். பழந்தமிழகத்தில் உலோகங்கள் அனைத்துமே பொன் (செம்பொன், வெண்பொன், கரும்பொன்) எனக் குறிக்கப்பட்டன. மீனை விற்று நெல்லை வாங்கிய பண்டமாற்று முறையினைச் சங்க இலக்கியங்களில் காணலாம். வேட்டுவத்தொழில், ஊன்விற்றல், மீன்பிடித்தல் ஆகிய தொழில்கள் வள்ளுவர் காலத்தில் இருந்தன என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

நாவிதர்கள் முகச்சவரம், சிகை அலங்காரம், தலை மழித்தல் போன்ற செயல்களைச் செய்பவர்கள். உலகம் பழிக்கின்ற தீய ஒழுக்கத்தை விட்டு விட்டால் மொட்டை அடித்தல், சடை வளர்த்தல் ஆகிய புற ஒழுக்கம் தேவையில்லை என்கிறார் வள்ளுவர். இதனால் மொட்டை அடிக்கும் தொழில் இருந்தமை புலனாகிறது. இதனை,

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்

பழித்தது ஒழித்து விடின்''[20] என்ற குறளின் வழி அறியலாம்.

மரம் அல்லது மரச்சட்டங்களைக் கொண்டு பொருட்களை உருவாக்குபவர்களைத் தச்சர் என்பர். மரத்தை மூலப் பொருளாகக் கொண்டு கருவிகள் செய்யும் தொழில் தச்சுத் தொழில் எனப்படும். உழுவதற்கு மரத்தாலான கருவிகள் வேண்டும். உழுவதற்கு ஏரும், இறைப்பதற்கு ஏற்றமும், பொருள்களை எடுத்துச் செல்ல வண்டியும், ஊர்ந்து செல்லத் தேரும், வீடுகட்ட மரச்சாமான்களும், மரப் பொம்மைகளும் தச்சர்கள் செய்தனர்.

"அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை

பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை"(21)

இக்குறள் சிவிகை அல்லது பல்லக்குப் பற்றிக் கூறுவதினால், அதனைச் செய்கின்ற தொழிலாளர்கள் (தச்சர்கள்) இருந்திருப்பர் என்பதை அறிய முடிகிறது.

"கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்

நாவாயும் ஓடா நிலத்து"(22)

"உருவுகண்டு எள்ளாமை உருள்பெருந்தேர்க்கு

அச்சாணி யன்னார் உடைத்து"(23)

எனத் தேர்கள் குறிக்கப்படுகின்றன. தேர் செய்யும் தொழில் அக்காலத்து நன்கு அறியப்பட்டிருந்த ஒன்றே. மக்கள் ஏறிச்செல்லும் சீவிகையும், பண்டங்கள் ஏற்றிச் செல்லும் சாகாடும் குறளில் குறிக்கப்படுகின்றன. அவையனைத்தும் அவற்றைச் செய்யும் பயிற்சியும் திறமையுமுள்ள தச்சுத் தொழில் தெரிந்தவர்களாலேயே செய்யப்பட்டிருக்க வேண்டும். இதனை,

"வைகல் எண்டேர் செய்யும் தச்சன்"(24)

என்ற புறநானூற்றுப் பாடலின் வழி அறியலாம். அக்காலத்துக் கப்பல்களும், படகுகளும் மரத்தாலேயே செய்யப்பட்டன. தற்காலத்தில் காற்றினை மாசுபடுத்துகின்ற இயந்திர வாகனங்கள் பெருகி வருகின்றன. எல்லா

நாடுகளிலும் காற்று மாசுபடுவதைக் குறைக்க வாகனக் கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

"செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே

உட்பகை யுற்ற குடி"(25)

என்ற குறளில் மூடியையுடைய செப்பு குறிப்பிடப்படுகிறது. செப்பும் மூடியும் நன்றாகப் பொருந்தினும் அவை ஒன்றாகாது. வெவ்வேறாகப் பிரித்தெடுத்தல் கூடும். அதுபோல் உட்பகையுற்ற குடியும் சேர்ந்திருப்பது போலத் தோன்றினும் எளிதில் பிரிந்துவிடும் என இங்கு உவமை கூறப்பட்டது. நன்றாகப் பொருந்தும் மூடிகளையுடைய செப்புக்கள் அக்காலத்துப் பயன்பட்டன. இவை மரத்தினாலோ, உலோகப் பொருளினாலோ செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

**கொல்லர் தொழில்**

சங்ககாலத்திலும் சங்கமருவிய காலத்திலும் பலவகை உலோகத் தொழில்கள் தமிழ்நாட்டில் இருந்துள்ளன. இரும்புக் கொல்லரையும் பொற்கொல்லரையும் அவர்கள் பயன்படுத்திய சில கருவிகளையும் பற்றிய குறிப்புக்கள் திருக்குறளில் காணப்படுகின்றன.

இரும்பைக் கொண்டு செய்யும் தொழில் கொல்லத் தொழிலாகும். வண்டிக்கு இன்றியமையாத அச்சு, ஆணி, அரிவாள், கோடாரி போன்றவற்றைக் கொல்லர்கள் செய்துள்ளனர். கொல்லர்கள் உலோகத் தகடுகளை அல்லது உலோகத்தினால் தாம் செய்யும் பொருள்களைப் பட்டறையில் வைத்து அடித்து வேண்டிய வடிவம் பெறச் செய்தனர். எறிதற்குப் (பொருளை வைத்து அடித்தற்குதவும்) பட்டடை என்று திருக்குறளில் குறிப்பிடப்படுகிறது. இதனை,

"சீரிடம் காணன் எறிதற்குப் பட்டடை

நேரா நிரந்தவர் நட்பு"(26)

என்ற குறளில் பட்டடை என்ற சொல்லாட்சி பயின்று வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இரும்புப் பொருள்களைத் தேய்த்து ஏற்ற வடிவம் பெறச்

செய்வதற்கு அரம் என்னும் கருவியைப் பயன்படுத்தினர் எனத் தெரிகிறது. இதனை, அரம்போலும் கூர்மைய ரேனும்(997) என அரத்தின் கூர்மையையும்,

கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்"[27]

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொரு
துட்பகை யுற்ற குடி"[28]

எனப் பிற பொருள்களைத் தேய்க்கும் அதன் ஆற்றலும் கூறப்பட்டன. பிற கருவிகளைத் தேய்த்துக் கூர்மை செய்வதற்குக் கொல்லர் அரத்தைப் பயன்படுத்தினர் என்பதை,

"கருங்கைக் கொல்லன் அரஞ்செய் அவ்வாய்
நெடுங்கை நவியம்"[29]

என்ற புறநானூற்றுப் பாடலினால் அறியலாம். வில், வேல், வாள் ஆகியனவும் கொல்லர்களாலேயே செய்யப்பட்டன. மற்றும் தச்சுத் தொழிலுக்கு வேண்டிய கோடரி, ஈர்வாள் முதலியனவும் உழவர்களுக்கு வேண்டிய கதிரறுக்கும் அரிவாளும், கொழுவும் கொல்லர்களாலேயே செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

பொன் ஆபரணங்கள் செய்பவர்களைப் பொற்கொல்லர்கள் என்று அழைத்தனர். இதனை,

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோக்கிற் பவர்க்கு"[30]

என்ற குறளின் வழி, ஆபரணம் செய்யப் பொன்னைப் புடமிட்டு உருக்கிய பொற்கொல்லர்கள் இருந்தனர் என்பதை அறிய முடிகிறது. பொற்கொல்லர் பொன்னை உரைத்து மாற்று அறிவதற்கு (அது கலப்பில்லாத தூய பொன்னா என அறிவதற்கு) உரைகல்லைப் பயன்படுத்தினர். அது கட்டளைக்கல் எனப்படும்.

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்"[31]

“சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி

துலையல்லார் கண்ணும் கொளல்”[32]

ஆகிய குறள்களில் கட்டளைக்கல் குறித்து வள்ளுவர் கூறியுள்ளார்.

வள்ளுவர்காலத்தில் மகளிர் குழை, வளை, தொடி முதலிய பல அணிகலன்களை அணிந்தமை அறியப்படுகிறது. ‘கழல்யாப்புக் காரிகை நீர்த்து’ (777) என்னும் குறளில் வீரர்கள் காலில் கழல் அணிந்தனர் என அறியலாம். செல்வர்கள் இத்தகைய அணிகலன்களைப் பொன்னினாலும் பிறர் வேறு உலோகங்களினாலும் செய்து அணிந்தனர்.

**பளிங்கு மணி செய்தல்**

‘மணியுள் திகழ்தரு நூல்போல் மடந்தை’ (1273) எனும் குறளில் நூலால் கோத்து அணியப்படும் மணியைக் குறிப்பிடுகின்றது. மணியுள் திகழ்தரும் நூல்போல் என மணியினூடே உட்கோக்கப்பட்ட நூல் புலப்படுதல் குறிப்பிடப்படுவதானல் அது பளிங்கு மணியாகவே இருத்தல் வேண்டும். கோக்கப்பட்ட பளிங்கு மணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாம் நூல் போல எனப் பரிமேலழகர் உரையெழுதினார். பளிங்கு மணி நூலில் கோத்து அணியப்படுதல் குறிப்பிடப்பட்டுள்ளதால் மணி செய்யும் தொழில் இருந்தமை புலனாகிறது.

திருமணி குயிற்றுநர்[33] என மணி செய்வோர் பற்றி சிலப்பதிகாரம் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. எனவே வள்ளுவர் காலத்திலும் மணி செய்யுந் தொழில் இருந்தது எனக் கொள்ளல் பொருத்தமானதேயாகும்.

**கள் விற்றல்**

வள்ளுவர் காலத்தில் கள்ளுண்போர் பலர் இருந்ததினால் கள்ளுண்ணாமை என்ற அதிகாரத்தைப் படைக்க வேண்டியதாயிற்று. ‘அடுநறாக் காமம்போல்’ (1090) என்ற குறளில் அடுநறா எனக் காய்ச்சப்படும் கள் குறிப்பிடப்பட்டுள்ளது. கள் உண்பவர்கள் அதிகமாக இருப்பதினால் அதனை விற்று தொழில் நடத்துபவரும் இருந்திருப்பர் என அறியமுடிகிறது.

கள்ளுண்டோர் அனைவரும் கள்ளைக் காய்ச்சி உண்ணவில்லை அதனை விலை கொடுத்து வாங்கியே உண்டனர் என்பதைக் ' கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து'(925) என்ற குறளின் வழி அறியமுடிகிறது. தன்னறிவு கெடத்தக்க மயக்கத்தைத் தரும் கள்ளை மக்கள் பொருள் கொடுத்து வாங்கி உண்கின்றனரே, இது எத்தகைய பேதைமை என வள்ளுவர் கூறுகிறார். விற்பவர்கள் இல்லையென்றால் அதனை விலை கொடுத்து வாங்குபவர்களும் இல்லாமல் போய்விடுவர். அதனால் இத்தகைய தீயத் தொழிலினை விட்டொழிக்க வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தால் பெறப்படுகிறது.

**வரைவின் மகளிர் தொழில்**

அழகும் இளமையும் காட்டி, இன்பமும் பொருளும் வெ.ஃகி ஒருவர்மாட்டும் தங்காதவர் என்று பரத்தையர்க்கு இலக்கணம் கூறுவார் இளம்பூரணர்[(34)]. இது சங்ககாலப் பரத்தையர்க்குப் பொருந்துகிறதோ இல்லையோ ஆனால் வள்ளுவ கால வரைவின் மகளிருக்குப் பொருத்தமாக இருக்கிறது. வரைவின் மகளிர் தம்மை விரும்பிவரும் ஆடவரைச் சேர்த்து அவரிடமிருந்து பொருள் பெற்றனர்.

வள்ளுவர் வரைவின் மகளிரைப் பொருள் விழையும் ஆய்தொடியார் (911), பொருட்பெண்டிர் (913), பொருட்பொருளார் (914) என அழைப்பதினின்று அவர்கள் தம்மை நாடிவரும் ஆடவர்களிடமிருந்து பொருள் பெற்றமை தெளிவாகும். இன்சொல் இழுக்குத் தரும் (911), பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர் (912) என்னும் தொடர்கள் அவர்கள் பிறரைக் கவர்தற்பொருட்டு இனிய சொற்களைப் பேசுவர் என்பதைக் காட்டும். அவர்கள் ஆய்தொடியார், மாணிழையார் எனக் குறிப்பிடப்படுவதால் அவர்கள் நல்ல அணிகலன்களை அணிந்திருந்தனர் என்பது தெளிவாகிறது. இத்தகைய

அணிகலன்களைச் செய்யும் தொழிலாளர்கள் இருந்தனர் என்பதும், இது வள்ளுவரால் கடியப்பட்ட தொழில் என்பதும் பெறப்படுகிறது.

**கலைத்தொழில்**

மிகப் பழங்காலந்தொட்டே நாகரிகம் பெற்று வாழ்ந்து வருகின்ற தமிழர்கள் தங்களுக்கென்று கலைகளை உண்டாக்கிப் போற்றி வந்திருக்கின்றனர். தற்போதைய தமிழ்ச் சமூகம் தனது பழைய கலைகளை மறந்து போயின. மனிதனுடைய நல்வாழ்விற்கு உதவுகின்ற எல்லாத் தொழில்களையும் கலைகள் என்று கூறப்படும். உழவு, வாணிபம், நெசவு, மருத்துவம் முதலிய தொழில்கள் யாவுமே கலைகளே. நமது நாட்டில் அறுபத்து நான்கு கலைகள் இருந்தன என்று மணிமேகலை முதலிய நூல்கள் கூறுகின்றன. உழைத்துச் சோர்வடைகின்ற நேரத்தில் உற்சாகமூட்டக் கூடியவை கலைகளே. இன்பத்தைத் தருவது கலைகள். கலைகள் மனிதனுடைய மனதிற்கு அழகையும் இன்பத்தையும் அளிக்கின்றன. கலைகளின் வழியே மனிதன் நிறைமனம் அடைகிறான்.

மனிதனுடைய மனத்தில் உணர்ச்சியை எழுப்பி அழகையும் இன்பத்தையும் அளிக்கிற பண்பு கலைகளுக்கு உண்டு. மனிதன் தன்னுடைய அறிவினாலும், மனோபாவத்தினாலும், கற்பனையினாலும் கலைகளை அமைத்து அவற்றின் மூலமாக உணர்ச்சியையும் அழகையும் இன்பத்தையும் காண்கிறான். கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, காவியக்கலை ஆகியவை கலைகளின் சில வகைகளாகும். கட்டடக்கலையும், சிற்பக்கலையும் ஒன்றரோடு ஒன்று இணைந்ததாகும். காவியக்கலையுடன் சேர்ந்தது நாடகக்கலை ஆகும். காவியக்கலை, இசைக்கலை இரண்டையும் பண்டைத் தமிழர் இயல், இசை, நாடகம் என்று மூன்றாகப் பிரித்தனர்.

இசையும் கூத்தும் பிற கலைகளும் வள்ளுவர் காலத்திருந்தன. குழல், யாழ் என்னும் இசைக் கருவிகளே அக்காலத்து அதிகமாகப் பயிலப்பட்டனவாகும். ‘குழலினிது யாழினிது’ (66) என்று வள்ளுவர்

கூறிவதினின்று குழலும் யாழும் மக்கள் புழக்கத்தில் இருந்தமை புலனாகிறது. ‘யாழ்கோடு செவ்விது’(279), யாழின் கோடு வளைந்திருப்பினும் அது இனிய ஓசையை எழுப்பி நன்மையே செய்கின்றது என்கிறார் வள்ளுவர்.

பண்ணோடு பயிலப்படும் வாய்ப்பாட்டும் அக்காலத்து ஒரு கலையாகக் கற்கப்பட்டதென்று தெரிகிறது.

“பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல் கண்ணென்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண்”[(35)]

என்ற குறள் வழி அறியப்படும். ‘கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்’ (332) வந்து சேர்தல் கூத்தாடுமிடத்தில் கூட்டம் வந்து கூடுவதைப் போன்றது என்று கூறப்படுவதால், கூத்தாடும் தொழிலை மேற்கொண்டவர்கள் வள்ளுவர் காலத்திலும் இருந்துள்ளனர் என்பது பெறப்படுகிறது.

குறளில் காணப்படும் மற்றொரு கலைத்தொழில் மரப்பாவையை (பாவைக்கூத்து) இயக்கும் கலையாகும். உள்ளத்தில் நாண் இல்லாதாரின் இயக்கம் மரப்பாவை (1020) கயிற்றால் இயக்கப்பட்டு உயிருள்ளதெனப் பிறர் எண்ணுமாறு செய்வதை ஒக்கும். இரப்போர் உலகில் இல்லையெனில் உலகத்தோர் வரவு செலவுகள் அனைத்தும் மரப்பாவைச் (1058) (கயிற்றால் இயக்கப்பட்டு) சென்று வந்தாற்போலும். மரத்தினால் பாவைகளைச் செய்து அவற்றைக் கயிற்றால் இயக்கி உயிருள்ளன போல் நடிக்கச் செய்யும் ஒரு கலைத் தொழில் அக்காலத்தில் இருந்ததென்பதை இக்குறள்கள் காட்டுகின்றன.

கட்டடக் கலையைக் குறித்த குறிப்புக்கள் குறளில் இல்லை. தூண் சில குறள்களில் (615, 983) குறிப்பிடப்படுகிறது. வெண்மை, வான்சுதை வண்ணம் எனக் குறளில் (714) குறிப்பிடப்படுவதால் கட்டடங்களின் மேல் வெண்சுதை (சுண்ணாம்பு) இடும் வழக்கம் அக்காலத்தும் இருந்தது எனக்

கருத இடம் உண்டு. மண்ணினால் பாவை அமைக்கும் கலை அக்காலத்தில் இருந்ததென்பதை,

"எவ்வகை யுயிர்களும் உவமங் காட்டி
வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய
கண்கவர் ஓவியம் கண்டுநிற் குநரும்"(36)

என்ற மணிமேகலையின் அடிகளின் வழி அறியமுடிகிறது. கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, நாடகக்கலை போன்றவை தற்காலத்தில் தொழில்கள் அடிப்படையில் காணும் இவை வள்ளுவர் காலத்தில் கலைகளாக இருந்துள்ளன.

**குயத் தொழில்**

மண்பாண்டங்கள் செய்யும் தொழில் குயத் தொழில் என்றும் அவற்றைச் செய்பவர்கள் குயவர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். வள்ளுவர் காலத்தில் இத்தொழில் சிறந்து விளங்கியுள்ளமை அறியலாகிறது. 'பசுமண் கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று'(660) என்ற குறளில், தீய வழியில் செல்வத்தைச் சேர்த்து அதைப் பாதுகாக்க எண்ணுதல் பசு மண்ணினாலாகிய கலத்தில் நீரைச் சொரிந்து பாதுகாக்க முயலுவதைப் போன்றது என்கிறார். மண்ணினால் கலங்கள் வனைந்து அவற்றை நெருப்பிலிட்டு உறுதிப்படுத்தும் தொழில் அக்காலத்தில் இருந்தது. மட்கலங்களைச் சுட்டு திடப்படுத்தும் பழக்கம் இருந்ததனாலேயே 'பசுமட்கலம்' எனச் சுடப்படாத கலம் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. "குயவர்கள் மட்கலங்களை உரிய அளவோடு அறுப்பதற்கு ஒரு சிறு கருவியைப் பயன்படுத்தினர் என்றும் அதை மட்பகை என்றும் கூறுவர்.

"உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்"(37)

இக்குறளுக்குப் பரிமேலழகர், உட்பகையினாரை அஞ்சித் தன்னைக் காத்துக் கொண்டொழுகுக அங்ஙனம் ஒழுகாதவழித் தனக்கோர் தளர்ச்சி

வந்தவிடத்துக் குயவன் மட்கலத்தை அறுக்கும் கருவி போல அவர் தப்பாமற் கெடுப்பர்... மண்ணைப் பகுக்கும் கருவி மட்பகை எனப்பட்டது. பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலின் கெடுதல் தப்பாது என்பதாம் என விளக்குவார். குயவன் பயன்படுத்துகின்ற கருவிக்கு மட்பகை என்று பெயர். மண்ணிலிருந்து பானை முதலியன செய்வதற்கு இக்கருவியே பயன்படும். இக்கருவியின் வேலை கீழறுத்தல் ஆகும். குயவனார் பாத்திரங்களைச் செய்யும் போது இக்கருவி கூடவே இருந்து உதவி செய்து கடைசியில் பாத்திரத்தை அம்மண்ணிலிருந்து பிரித்து எடுக்க உதவும். உட்பகையினருக்கு ஆசிரியர் இக்கருவியை, உலைவிடத்து மட்பகை என்று உவமை காட்டுவது பன்முறையும் சிந்தித்து அறியத்தக்கது''(38) என்பர் வீ.முனுசாமி.

மண்ணாலான பொம்மைகளைச் செய்யும் தொழில் குயவர்க்குரியதாய் இருந்துள்ளது. இவர்கள் செய்யும் பொம்மையின் அழகினையும் குறளில் காணமுடிகிறது. இதனை,

''நுண்மான் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மான் புனைபாவை யற்று''(39)

என்று நுண்ணிய பெருமை உடைய பல நூல்களிலும் சென்ற அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும் அழகும் மண்ணால் செய்யப்பட்ட பாவையினுடைய எழுச்சியும் அழகும் போன்றதாகும். இக்குறளில் குயவர்களின் கைவண்ணதில் வார்க்கப்படும் அழகிய பொம்மைகளைக் கூறியதன்வழி அக்காலத்தில் இத்தொழில் சிறந்திருந்தமை அறியப்பெறுகிறது.

இயற்கையாகக் கிடைக்கும் மண்ணாலான மண்பாண்டங்களைப் பயன்படுத்தினால் உடல்நலத்திற்கு நன்மை பயக்கும். தற்காலத்தில் நீரினைக் குளிர வைக்க குளிர்சாதனப் பெட்டியைப் பயன் படுத்துகின்றனர். அதனால் பலவிதமான நோய்கள் வருகின்றன. அக்காலத்தில் நீரை இயற்கையாகக் குளிரச் செய்ய மண்பாண்டங்களைப் பயன்படுத்தினர் என்பது பெறப்படுகிறது.

**ஆசிரியத் தொழில்**

கல்வியையும் வேள்வியையும் வள்ளுவர் போற்றினார். கல்வியை மக்கள் தாமாகவும் கற்றல் கூடும். ஆசிரியர்கள் மூலமாகவும் கற்றல் கூடும். சங்க இலக்கியத்திலேயே கல்வி போற்றப்பட்டது. கல்வி கற்பதற்காகப் பிரிவு ஏற்பட்டதை வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது எனத் தொல்காப்பியரும்[40] விதி செய்தார். கல்வி கற்பதற்காகச் செல்பவர்கள் மூன்றாண்டுகள் வரையில் தங்கிக் கல்வி பயிலுதல் கூடும் எனவும் தெரிகிறது.

"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்"[41]

என்னும் குறள் வள்ளுவர் காலத்தில் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்கள் இருந்தனர் என்பதும், அவர்களிடத்து மாணவர்கள் பணிவுடன் நடந்து கொள்ள வேண்டுமென எதிர்பார்க்கப்பட்டனர் என்பதும் தெளிவாகிறது. பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே[42]என்ற பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கூற்றும் ஒப்பு நோக்கத்தக்கது.

கற்றோர் தம் கல்வியைக் கசடறக் கற்று அதற்குத் தக நிற்றலும் வேண்டுமாகையினால் ஆசிரியர்கள் சிறந்த கல்வியுடன் நல்லொழுக்கமும் உடையராய்த் திகழ்தல் வேண்டும். 'ஓர்பிழை குருவே செய்யின் ஒன்பது பிழைகள் செய் நேர்சிறுசீடர்' (நன்னெறி) என்ற அதிவீரராமப் பாண்டியரின் கூற்றும் சுட்டத்தக்கது.

"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்"[43]

கற்றோர் பிறரைக் கண்டு பேசும் போது அவர்கள் மகிழுமாறு பழகிப் பிரியும் நேரம், இவரை மறுபடி எப்பொழுது காண்போம் எனப் பிறர் எண்ணுமாறு பிரிவர் என்கிறார் வள்ளுவர்.

கற்றோர் கல்வியைப் பரப்பவும் செய்வர். தாமும் முன் கற்றதனோடு நிற்காது மேலும் மேலும் கற்க நினைப்பர். தாம் கல்வியினால் அடையும் நன்மையையும் இன்பத்தையும் பிறரும் அறியும் வண்ணம் கல்வியைப் பயனுற செய்ய வேண்டும் (399) என்கிறார்.

கல்வி, கேள்வி, கல்லாமை குறித்து வள்ளுவர் கூறியிருக்கிறார். கற்க கசடற கற்பவை என்பதிலிருந்து ஆசிரியரிடம் கற்க வேண்டிய நூல்களைக் குற்றம் நீங்கக் கற்க வேண்டும் என்பதிலிருந்தும் வள்ளுவர் காலத்தில் ஆசிரியத் தொழில் இருந்தமை புலனாகிறது.

**மருத்துவத் தொழில்**

வள்ளுவர் மருந்து என்ற அதிகாரத்திலுள்ள குறள்கள், தக்க உணவு உட்கொள்ளுதல் முதலியவற்றின் மூலம் நோய் தடுக்கும் முறைகளைக் கூறுகின்றன. நோய் தடுப்பதைக் கூறும்போது மருத்துவ நூலோரின் கருத்தைப் பின்பற்றிக் கூறுவதாக வள்ளுவர் கூறுகிறார். இதனை,

"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று"[44]

என்கிறார். அவர் காலத்தில் மருத்துவ நூல்கள் இருந்தன என அறியப் பெறுகிறது. அவற்றைக் கற்ற வல்லவர்களாகிய மருத்துவர்கள் இருந்தனர் எனத் தெரிகிறது.

இன்றைய காலத்தில் பலவகையான நோய்களின் தாக்குதலுக்கு உள்ளாகியுள்ளோம். விதவிதமான மருந்துகளும், அவற்றை சோதனை செய்து பார்க்கும் உடற் பொருளாக மனிதர்களும் மாறிப்போய் உள்ளோம். இயற்கை மூலிகைகளின் பயன் அறிந்தும் அவற்றைப் பயன்படுத்தாமல் ஏளனம் செய்ததன் விளைவு, செயற்கை மருந்துகளை உட்கொள்ள வேண்டியுள்ளது.

உணவே மருந்து மருந்தே உணவு என்ற சித்தர்களின் கூற்றே வள்ளுவர் நமக்கு கூறும் வழிமுறையாக உள்ளதை உணரமுடிகிறது.

உயிர் வாழ இயற்கையான காற்று, நீர், உணவு மூன்றும் இன்றியமையாதது. காற்று குறைந்தாலும் இழப்பு மிகுந்தாலும் இழப்பு ஏற்படுகிறது. இயற்கைப் பொருட்களான காற்று, நீர்ஆகியவை மிகினும், குறையினும் நோய் செய்யும் என்கிறார் வள்ளுவர். நீரில் மூழ்கி அதிகமான நீரை குடித்துவிட்டால் மூச்சுத் திணறல் ஏற்படுகிறது. குறைவான நீரைத் தொடர்ந்து பருகினால் சிறுநீரகப் பாதிப்பு ஏற்படுகிறது. அதைப்போன்றே, உணவையும் மிகுதியாக உண்டாலும், குறைவாக உண்டாலும் துன்பம் ஏற்படும். வள்ளுவர் மருந்து என்ற ஒன்றே வேண்டாம் (942) என்கிறார். உண்ட உணவு முழுமையாகச் சீரணமான பின்பு உணவை உண்டால் மருந்தே வேண்டாம் என்கிறார்.

மருத்துவர் நோயாளியின் நிலையை ஆய்ந்தறிந்து அதனைத் தீர்க்கும் முறையை வள்ளுவர்,

“உற்றான் அளவும் பிணியளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்”[(45)]

“நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்”[(46)]

என்கிறார். மருத்துவக் கல்வியில் நோய் நாடுதலே இன்றைக்கும் தலையாய கோட்பாடாக மதிக்கப்படுகிறது. இந்நோய் நாடுதல் மூன்று உட்பிரிவுகளின் கீழ் மேற்கொள்ளப்படுகிறது. நோயாளியின் பொது வரலாறு அவரைப் பற்றியும், அவருடைய மரபு, இட, வாழ்க்கைச் சூழல்களைப் பற்றியும் அறிய உதவும்”[(47)] என்கிறார் இரா.கலைக்கோவன்.

நோய் உற்றவனை ஆராயுங்கால் மருத்துவன் முதலில் அவன் உற்றநோய் இன்னது என்பதை அறிகுறிகளால் ஆய்ந்து பின் அந்நோய்

ஏற்படுவதற்குக் காரணம் என்ன என்பதை உணர்ந்து அதைத் தணிப்பதற்குரிய வழி இன்னது என்பதையும் கருதி நோய்நீங்கி நலம் வாய்க்குமாறு செய்தல் வேண்டும். தற்காலத்தில் பயன்படுத்தப்படும் மருந்துகள், கருவிகள் அக்காலத்தில் இல்லாவிடினும் மருத்துவத் தொழிலையும் அதிலுள்ள பொறுப்பையும் வள்ளுவர் தம் குறட்பாக்களில் பதிவு செய்துள்ளார்.

நோயுற்றவன், நோய்தீர்க்கும் மருத்துவன், நோயைப் போக்கவல்ல மருந்து நோயாளியைக் கண்காணிப்பவன் (950) என மருந்து நான்கு வகைகளை உடையதாகும். "நோயுற்றவன், அதனைத் தீர்க்கும் மருத்துவன், அவனுக்குக் கருவியாகிய மருந்து, மருந்தினைப் பிழைபடாமல் செய்து கொடுப்பவன் என்று நான்கு வகைப்படும். வாய்ப்பச் செயல், கற்றான் கருதிச் செயல் என்று கூறுவது மருத்துவன் காலத்திற்கேற்றபடி மருந்தினை அறிந்து கொடுக்க வேண்டும் என்றார். கற்றான் என்றதால் அந்தந்தக் காலத்தில் கற்ற மருந்து முறைகளை என்றும் கூறுவதாகும்"[48] என்பர் வீ.முனுசாமி. புறநானூற்றுப் புலவர்களுள் மருத்துவன் தாமோதரனாரும் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கது. சிலப்பதிகாரத்தில் பட்டினப்பாக்கத்தில் குடியிருந்த மக்களுள் ஆயுள்வேதரும்[49] குறிப்பிடப்படுகின்றனர்.

வள்ளுவர் காலத்தில் மருத்துவர்களை நூலோர் எனவும், கற்றான் எனவும் குறிப்பிடுவதால் மருத்துவ நூல்களை முறையாகக் கற்ற மருத்துவர்கள் அக்காலத்தில் இருந்தனர் என்பது புலனாகும். மருத்துவர்க்குத் துணையாகப் பணிபுரிந்தவர்களை உழைச்செல்வான் என்ற தொடரால் குறிப்பிடுகிறார் வள்ளுவர்.

இயற்கையாகக் கிடைக்கும் மூலிகைகளைப் பயன்படுத்த வேண்டும். வருமுன்னர் காவாதான் வாழ்க்கைக் குறித்து வள்ளுவர் கூறுவது இன்றைய காலத்திற்கும் பொருந்துவனவாக உள்ளது. உயிர்க்கொல்லி நோய்கள் போன்றவை வருவதற்கு முன்பே தற்காத்துக் கொள்ள வேண்டும்.

இயற்கையோடு இயைந்த ஒழுக்க நெறியைப் பின்பற்ற வேண்டும். இயற்கைக்கு மாறாகச் செயல்படும் போது இத்தகைய நோய்கள் தாக்குவது தவிர்க்க முடிவதில்லை. அதனால் வருமுன்னர் காத்துக் கொள்வது நன்மை பயக்கும் என்பதை வள்ளுவர் விளக்கியுள்ளார்.

**அறுதொழிலோர்**

"ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்"(50)

மன்னன் முறைப்படி நாட்டைக் காப்பாற்றாவிட்டால் அந்நாட்டில் பசுக்கள் பால் தருவதாகிய பயன் குறையும், அறுதொழிலோரும் அறநூல்களை மறப்பர் என்பதாகக் கருத்துக் கூறப்படுகிறது. அறுதொழிலோர் என்பதற்கு அந்தணர் எனப் பொருள் கொண்டு, அவர் செய்யும் தொழிலாக ஓதல் முதலானவற்றைச் சொன்னார். இவை தொழிலாகுமா? ஓதுவித்தல் மட்டும் தொழிலாகலாம். ஈதலும் ஏற்றலும் அவ்வாறே தொழிலாகுமா? இத்தொழில்களால் உலகம் உய்யுமா? உலகைகூட்டும் தொழிலாகிய உழவு இவ்வறு வகையில் எதனுள் அடங்கும்? உழவு சார்ந்த பிற தொழில்களுள் எதனுள் அடங்கும்? எதனுள்ளும் அடங்காது. ஆகவே அறுதொழில்கள் என இவர்கள் கொள்ளும் பொருள் சிறப்புடையதன்று. அந்தணர் என்போர் அறவோராகத் திருக்குறளே சான்றாக, இதனை நிறுவுகின்றது. இதனை மறந்தனர் இவரெல்லாம். இவ்வுரையைக் கண்டே, போப்பையரும் அந்தணர் என்பதற்குப் பிராமணர் எனப் பொருள் கொண்டு எழுதினார்.

இவ்வாறன்றி, அறுதொழில் என்பதற்கு ஆறுவகைப்பட்ட தொழில் எனச்சுட்டி அவற்றைக் குறிப்பிடுகின்றனர் பிற உரையாசிரியர். திருக்குறளார் முனிசாமி உலகப் பொதுமறை திருக்குறள் உரை விளக்கம் என்னும் நூலுள், உலகத் தொழிலோர் பொதுத் தன்மையில் உழவர், வணிகர், ஆசிரியர், கம்மியர், கலைஞர், மருத்துவர் எனக் குறிப்பிடுகின்றார்.

திருக்குறள் நாவலர் தெளிவுரை என்னும் நூலுள் நாவலர் நெடுஞ்செழியன், அறுதொழிலோர் என்பதற்கு அறுதியிட்ட முக்கிய தொழிலுடையோர் எனப் பொருள் கொள்கின்றார். அறுதொழிலோர் அறுதியிட்ட முக்கியத் தொழில்களையுடையோர், அறுதொழில் வினைத்தொகை, அறுதி செய்யப்பட்ட தொழில்களாவன, கல்வி கற்பித்தல், உழவுத் தொழில் செய்தல், நெசவுத் தொழில் செய்தல், சிற்பத் தொழில், தச்சுத் தொழில், கொல்லுத் தொழில் செய்தல் போன்ற முக்கியத் தொழில்களைக் குறிக்கும் என்றெழுதுவார்.

நாவலர், மணக்குடவர்க்கும் பரிமேலழகர்க்கும் மாறுபடுகிறார் என்றாலும் அறுதொழில் வினைத்தொகை, அறுதி செய்யப்பட்ட முக்கியத் தொழில், வரையறை செய்யப்பட்ட தொழில் எனப் பொருள்படும் என எழுதி வினைத் தொகை என்பதிலும் அதற்கு விளக்கம் எழுதுவதிலும் பிழைபடுகின்றார். தொழில்களைக் குறிப்பிடுதலில் மட்டும் நிலையாக நிற்கின்றார். ஆறுதொழில், அறுதொழில் எனவே புணரும், ஆறுபத்து, அறுபது என்பது போல, ஆறு என்னும் எண்ணுப்பெயரே அறு என முதல் குறுகிப் புணரும். ஆகவே, அறுதொழில் என்பது ஆறுதொழில்களையே குறிப்பிடும் என்க.

குறளியச் சிந்தனைகள் என்னும் நூலுள் கு.ச.ஆனந்தன், அறுதொழில் என்பது ஆறுபெரும் பகுப்புக்குள் அடங்குகிற சங்க காலத்திலிருந்து பல தொழில்கள் 1. உழவு, 2. தொழில்கள், 3. வாணிகம், 4. வரைவு (ஓவியம் போன்றவை), 5. சிற்பம் (கல், உலோகம், மரம், சுதை, மண், தந்தம், சுண்ணம், வண்ணம்), 6. கல்வி (வித்தை, அறிவியல், சாத்திரங்கள் மற்றும் நுண்கலைகள் (மெழுகு போன்றவைகளில் செய்யப்படுபவை). இவர் குறிப்பிடும் இரண்டாவதாகிய தொழில்கள் என்பனவென்ன? அறுவகைத் தொழில்களில் தொழில்கள் என்பது ஒரு வகையா? விடுபட்ட நெசவுத் தொழிலாக இருக்கலாம். உழவு சார்ந்த கைத் தொழிலாகவும் அமையலாம்.

திருக்குறள் மிகமிக எளிய உரை என்னும் நூலுள் மு.பெரி.மு.இராமசாமி என்பார், அறுதொழிலோர் என்பதற்கு, அறுதொழில் செய்வோர் என்றும் மட்டும் சொல்வார். குறள்ஞானி கு.மோகனராசும் திருக்குறள் மக்கள் உரையுள் அறுவகைத் தொழில் செய்வோர் என எழுதுவார். இருவரும் அறுவகையை விரித்துரைத்தாரல்லர். விருகை.ஆடலரசு என்பார் திருக்குறள் விளக்க உரையில் ஆறுவகையான தொழில் புரிவோர் (கல்வி கற்பித்தல், உழவு, நெசவு, சிற்பம், தச்சு, கட்டடத் தொழில்) எனக் குறிப்பிடுவார்.

ஆகவே, அறுதொழிலோர் என்பது மணக்குடவரும் பரிமேலழகரும் மற்றவரும் குறிப்பிட்ட அந்தணர் அல்லர் எனவும் அறுதொழில் என்பது, அவர் சொல்லிய ஓதல் முதலானவை அல்லவென்பதும் வெளிப்படையே. அதாவது அறுதொழில் என்பன உழவு, நெசவு, சிற்பம், ஆசிரியம், அரசுப்பணி, காவல் பணி என்பன எனவும் அவரே அறுதொழிலோர் ஆவர் என்பதும், நூல் மறப்பர் என்பதற்கு அவரவர் தொழில் பற்றிய நூலறிவை மறப்பர் என்பதுமே ஆகும் எனவும் தெறிவோமாக என்பர் த.கோடப்பிள்ளை.

அக்காலத்தில் சங்கறுப்போர் என்ற பிரிவினர் வாழ்ந்ததைக் காப்பியங்கள் பதிவு செய்துள்ளன. சங்குகளை வளையாக (வளையல்) அறுத்துத் தொழில் செய்தவர்களுக்கு வேளாப் பார்ப்பான் என்று பெயர்.

"வேளாப் பார்ப்பான் வாள் ஆரம் துமித்து
வளைகளைத் தொழிந்த கொழுந்து"(52)

என்று அகநானூறு கூறுகிறது. "வேளாப் பார்ப்பான் என்பதன் பொருள் வேள்வி செய்யாத பார்ப்பான் என்பது அதாவது விசுவப் பிராமணர். சங்குகளை வளையாக அறுக்கும் தொழிலும் சங்கு வளைகளை விற்கும் தொழிலும் அக்காலத்தில் சிறப்பாக நடந்தன. முக்கியமான நகரங்களில் சங்கறுக்கும் தொழில் நடந்தது. காவிரிப் பூம்பட்டினத்தில் ஒரு வீதியில் சங்குகளை

வளையல்களாக அறுக்கும் தொழில் நடந்தது. "அணிவளை போழுநர் அகன்பெரு வீதியும்"(53) சோழ நாட்டு வஞ்சிமா நகரத்தில்,

"இலங்காரம், பொருஉம் வெள்வளை போழ்நரோடு
இலங்குமணி வினைஞர் இரீஇய மறுகும்" (மணி.28:4445)

இருந்தன"(54) என்பர் மயிலை சீனி.வேங்கடசாமி குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

**படைத்தொழில்**

வள்ளுவர் காலத்தில் நால்வகைப்படைப் பிரிவுகளும் இருந்தன. உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை (761) என்ற தொடரில் உறுப்பு என்பதற்கு யானை, குதிரை, தேர், காலாள் ஆகியவையாகும். படைமாட்சி, படைச்செருக்கு ஆகிய அதிகாரங்கள் படைத்தொழிலைக் காட்டுகின்றன.

**பொருளாதார நெறி**

மக்கள் வாழ்வதற்குப் பொருள் வேண்டும். அதனால் தான் வள்ளுவர் பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்கிறார். வாழ்வதற்குப் பொருள் வேண்டும் பொருளே வாழ்க்கையாகவும் அமைந்து விடாது என்றும் கூறுகிறார். பொருளை எவ்வாறு ஈட்ட வேண்டும் ஈட்டிய பொருளைப் பயன்படுத்தும் நெறிகள் குறித்தும் வள்ளுவர் சிந்தித்துள்ளார்.

மனித வாழ்வில் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றும் உறுதிப் பொருள்களாகும்.

"சிறப்புடைய மரபில் பொருளும் இன்பமும்
அறத்த வழிப்படூஉம் தோற்றம் போல"(55)

என்கிறது புறநானூறு.

"ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு"(56)

என்னும் குறள், பொருள் வழியே அறமும் இன்பமும் அமையும் என்பதை விளக்குகிறது. அறத்தோடு பொருள் ஈட்டினால் இன்பம் பயக்கும் என்பதுதான் வள்ளுவரின் நோக்கமாகும்.

**பொருளீட்டல் நெறி**

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும் (759)

தீதின்றி வந்த பொருள் (755)

பிற்பயக்கும் நற்பாலவை(659)

ஆகிய குறட்பாக்கள் அறவழியில் பொருளீட்ட வேண்டும் என்பதை உணர்த்துகின்றன. தொழில் செய்து பொருளீட்டுபவர்கள் அறவழியிலேயே பொருளீட்ட வேண்டும் பிறரைச் சுரண்டிச் சம்பாதிக்கும் எண்ணத்தை விட்டுவிட்டு நேர்மையான வழியில் பொருளீட்ட வேண்டும் என்பதைச் சுட்டுகின்றன.

தற்காலத்தில் கையூட்டு என்னும் ஊழல் மலிந்துள்ளன. ஒவ்வொருவரும் உழைத்துப் பொருள் ஈட்ட வேண்டும். பெறப்படுகின்ற பொருள்கள் அத்தனையும் தீதின்றி வந்த பொருளாக இருக்க வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாகும்.

**நடுநிலையில் பொருளீட்டல்**

வாணிகம் செய்வதற்கு முதலீடு தேவை. முதல் போட்டுச் செய்யாத வாணிகத்தால் அதிக ஊதியம் பெற முடியாது என்பது வள்ளுவர் கருத்து. வணிகர்கள் சிறு ஊதியத்தைக் கருதித் தங்களின் முதற்பொருளை இழந்து விடுகின்ற தொழில்களைச் செய்தல் கூடாது என்றும் எச்சரிக்கின்றார். வணிகர்களுக்கு இன்றியமையாத துலாக்கோலைச் சமன்செய்து சீர்தூக்கும் கோல் என்று குறிப்பிட்டுள்ளார். தரம் இத்தகையது என்று சொல்லாமல் அப்பொருளே தான் தரமுடையது என்பதைத் தானே சொல்லவல்ல தகுதியாய்

அமைதல் வேண்டும். தரம் என்பது உற்பத்தி செய்து விற்பவர் வாங்குபவர் இடையே நிலவும் நிறைவுதான். அதனையே நடுவுநிலை நிறைவாகக் கருதி,

“வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தம்போல் செயின்”[57]

என்ற குறளால் உணர்த்துகின்றார் வள்ளுவர்.

சமுதாயத்தில் பெருவணிகர்கள், சிறு வணிகர்கள், மொத்த வணிகர்கள் ஆகிய எல்லார்க்கும் பொருள் சேர்க்கும் வழி அறவழியாக, நடுநிலையில் இருக்க வேண்டும் தம்முடைய ஒரு குறிப்பிட்ட பொருளுக்கு வரையறுக்கப்பட்ட ஒரே விலை, சரியான எடைக்கல், அளக்கும் படிகள் என அனைத்தும் குறைவுபடாமல் இருத்தல் இன்றியமையாதது. இதனை,

வாணிகம் செய்வார்க்கு வாணிகம்... (120)
செப்பமுடையவன் ஆக்கம்... (112)
சமன் செய்து சீர்தூக்குங் கோல்... (188)
ஈன்றாள் பசி காண்பாளாயினும்... (656)
தெண்ணீர் அடுபுற்கை யாயினும்... (1065)

ஆகிய குறள்களின் வழி விளக்குகிறார் வள்ளுவர். நியாயமான வழியில் உழைத்து ஈட்டிய தொகையைக் கொடுத்துப் பொருள் பெற மக்கள் விழையும் போது விற்பனையாளர்களும் நியாயமான உழைப்புக்கும் முதலீட்டுக்குமான வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்யப் போதுமான குறிப்பிட்ட அளவிலான இலாபத்தை மட்டுமே வணிகர்கள் ஈட்ட வேண்டும் என வலியுறுத்துகிறார் வள்ளுவர்.

### பொருளாதாரத்தின் சிறப்பு

பொருள் மனிதனின் பொருளாதார வாழ்வுக்கு மிகத் தேவையானதாக விளங்குகிறது. பொருளின் சிறப்பினை, அதன் மாட்சிமையை விரித்துரைக்கிறார் வள்ளுவர். பொருளைக் குறித்து, அவர் முதல், செல்வம்,

திரு, பொருள், உடைமை, உள்ளம் போன்ற பல சொற்களாகக் கையாளுகின்றார்.

முதல் என்ற சொல்லை நான்கிடங்கிலும், செல்வம் என்ற சொல்லை இருபத்தேழு இடங்களிலும், பொருள் என்ற சொல்லை அறுபத்தொன்பது இடங்களிலும் பயன்படுத்தியுள்ளார்.

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள்"[(58)]

என்னும் குறள் பொருளின் சிறப்பை விளக்கும்.

**மேலாண்மைச் சிந்தனை**

பதினெட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட தொழிற் புரட்சியே, மேலாண்மை பற்றிய சிந்தனையை உருவாக்கக் காரணமாயிற்று. செய்யும் தொழிலோடு மேலாண்மை இணைத்துப் பார்க்கப்படுகிறது. மனிதனின் வாழ்வியல் தழைத்தோங்க வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை என்று வினை (செயல்) களை மையமாகக் கொண்ட கருத்தினை வழங்கிய வள்ளுவர், தெரிந்து செயல்வகை, பொருள் செயல்வகை என்ற அதிகாரங்களையும் படைத்துள்ளார்.

வினை தொடர்பான சொல்லாட்சிகளான வினைத்திட்பம் (661, 670), வினைநலம் (651), செய்வினை (653, 677), செயல்முறை (677), வினைவகையான் (514) போன்றவை மேலாண்மையில் ஈடுபடும் மனிதனுக்காகவே வலியுறுத்திச் சொல்லப்பட்டவையாகும்.

மேலாண்மை என்பது தொழிலை நிர்வாகிக்கும் பணி மட்டுமன்று. இது எங்கும் காணப்படும் ஆளுமை செய்கிற பயன்வினை செயலுமாகும். நிருவாகம் மேலாண்மை என்ற இரண்டும் ஒன்றொடொன்று பின்னிப் பிணைந்ததாகத்தான் காணமுடிகின்றது. பொது அல்லது அரசுத் துறைகளில்

நிருவாகம் பெருமளவிலும், மேலாண்மை குறைந்தளவிலும் காணப்படுகின்றது. ஆனால் தொழில் அல்லது வாணிப நிறுவனங்களில் மேலாண்மை மிகுந்த அளவிலும், நிர்வாகம் குறைந்த அளவிலும் காணப்படுகிறது. அரசனுக்கும் அமைச்சனுக்கும் வள்ளுவர் காட்டிய மேலாண்மை அறிவுரைகள் எக்காலத்தவருக்கும் பொருந்துவனாக உள்ளன.

மேலாண்மை அறிஞர்கள் நிறுவனத்தில் காணப்படும் குறைகளைக் களையவும், பின்பு குறைகள் வராமல் தடுப்பதற்கும் அறிவுரைகள் வழங்குகின்றனர். இதனை வள்ளுவர்,

உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல் (442)
அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல் (441)
சூழ்வார்க்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் (445)

போன்ற குறட்பாக்களின் வழி தெளிவுபடுத்துகிறார்.

தலைமைப் பொறுப்பில் உள்ளவர்கள் மேற்கொள்ளும் வினை செம்மையாக முடியும்வரை அவ்வினை தொடர்பான செய்திகளைப் பிறர் அறிய வாய்ப்புக் கொடுக்கக் கூடாது. அப்பொழுதுதான் வினையின் வெற்றியை அடையமுடியும் (663) என்று வள்ளுவர் கூறுகிறார்.

துணிவுடன் செயல்படுதல், முழுமையாக ஈடுபடுதல், பொருள், கருவி, காலம், வினை, இடம் பார்த்து செயல்படுதல், செயலின் வழிமுறைகள், இடையூறுகள், பயன்பாடு என எண்ணி செயலாற்றல், அனுபவம், விரைந்து முடித்தல் போன்றவை மேலாண்மை செய்பவர்க்கு வள்ளுவர் கூறும் அறிவுரையாகும். ஒரு செயல் எப்படிப்பட்டதாயினும் அதனை முறையோடு

அணுகி, பொறுமையுடன் ஆய்ந்து சரியாகச் சந்தித்தால் எந்த இலக்கையும் அடையலாம் என்பதே வள்ளுவரின் நோக்காகும்.

ஒரு செயலை எங்ஙனம் செய்ய வேண்டும் முடிக்க வேண்டும் எனும் வழிவகைகள் குறித்தெல்லாம் ஆராய்கின்ற போது, அச்செயலைச் செய்து முடிக்கக்கூடிய துணிவு அவசியமாகிறது. செயல் வழிகளைக் கண்டறிந்தாலே அச்செயலில் இறங்குவதற்கான துணிவு பிறந்துவிடும் என்கிறார் வள்ளுவர். அவ்வாறு துணிந்த பின்பு காலந்தாழ்த்துதல் குற்றமாகும். துணிந்த பின் தயக்கம் கூடாது (671) என்கிறார்.

ஒரு செயலைச் செய்து முடிக்க, சிந்தித்து முடிவெடுத்தவுடனேயே மனத்தினுள் தீர்க்கமான வழியும், செயலாற்றும் துணிவும், காரிய வகைகளும் தோன்றும்போது விரைந்து முடித்தலே நன்மையாகும்.

"தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை"[60]

பொறுமையாக, கவனமாக, மெதுவாக செய்ய வேண்டிய அல்லது காலம் தாழ்த்திச் செய்ய வேண்டிய செயல்களைக் காலம் தாழ்த்திச் செய்தலே நன்று. ஆனால் விரைந்து செய்ய வேண்டும் செயல்களை அப்பொழுதே காலம் தாழ்த்தாது விரைந்து முடித்துவிட வேண்டும். ஒரு செயலின் தன்மையைக் கருதியே செயல்பட வேண்டும். விரைந்து செய்ய வேண்டியதை விரைந்தும், நிதானமாக, கவனமாக, பொறுமையுடன் முடிக்க வேண்டினவற்றை நிதானித்தும் செய்ய வேண்டும் என்று மேலாண்மை செய்யவருக்குக் கட்டளையாகவே கூறுகிறார் வள்ளுவர்.

ஒரு செயலைச் செய்யத் தொடங்கிவிட்டால் முடித்துவிட்டே நிறுத்த வேண்டும். பாதியிலேயே நிறுத்திவிட்டால், இதுநாள் வரையிலும் அச்செயலுக்காக இழந்த நேரம், பொருள், ஆற்றல், அறிவு எல்லாவற்றிற்கும் மேலாக இதைத் திறம்படச் செய்வோம் என்று நம்பியவரின் நன்மதிப்பு

ஆகியவற்றை இழந்துவிடுவோம். அத்தகைய செயலானது, ஒருவர் மீது கொண்ட பகையைத் தீர்த்தற்கான நேரத்தை எதிர்பார்த்திருப்போம். அக்காலம் வாய்த்த போது, அதற்கான செயலில் ஈடுபட வேண்டும். அச்செயல் பாதியிலேயே தடைபடுமானால், வெற்றியினை இழப்பதோடு, பகை மேலும் வளர்ந்து அதிலே பகைவர்கள் வெற்றி பெற்றுவிடுவார்கள் (674) என்கிறார் வள்ளுவர்.

ஒரு செயலைச் செய்யத் தொடங்கும்போது ஐந்து காரணிகளை எண்ணிப் பார்த்து தயக்கம் நீங்கித் தொடர வேண்டும் என்கிறார் வள்ளுவர். இதனையே வள்ளுவர்,

"பொருள்கருவி காலம் வினைஇடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்"[60]

என்று குறிப்பிடுகிறார்.

பொருள்: ஒரு செயலைச் செய்வதற்கான பொருள் வசதி உண்டா?

கருவி : செயலைச் செய்து முடிப்பதற்கான சரியான கருவி, ஆள் அமைந்திருக்கின்றனவா?

காலம் : அச்செயலைச் செய்து முடிப்பதற்கானத் தகுந்த காலம் இது தானா? காலம் தாழ்த்திச் செய்யலாமா? விரைந்து முடிக்கும் காலம் இதுதானா?

வினை: செய்யக்கூடிய இச்செயல் தம் தகுதிக்குச் சரியானதா? அதனைச் செய்யலாமா? செய்ய வேண்டுமா?

இடம்: அச்செயலை முடிப்பதற்கான தகுந்த இடம் இது தானா? அல்லது இதைவிடவும் சிறப்பான வேறு இடம் இருக்கிறதா? என இவ்வைந்து காரணிகளையும் இருள் தீர அதாவது ஐயம் தீர முழுமையாக எண்ணிப் பார்த்தப் பின்னர் செயலில் அல்லது தொழிலில் இறங்க வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

செயலை நிறைவேற்றுவதற்கான வழிமுறைகள், செயலாற்றும் போது ஏற்படக்கூடிய இடையூறுகள், செயலை முடித்த பின்னால் உண்டாகும் பயன், இம்மூன்றினையும் எண்ணிப் பார்த்து அதற்குத் தகுந்தவாறாக அச்செயலில் ஈடுபட வேண்டும். செய்யக்கூடிய வழிமுறைகள ஆராய்ந்துவிட்டால் அதனைச் செயல்படுத்துவது எளிதாகின்றது. இடையூறுகளை முன்கூட்டியே தீர்மானித்துவிடுவதால் அதனைச் சமாளிக்கக் கூடிய வழிகள், தாண்டிச் செல்லுதல், களைதல் போன்றவற்றைச் செயல்படுத்துவது எளிதாகி விடுகின்றது. தடைகளினால் ஏற்படக்கூடிய சலிப்பு, சோம்பல், தயக்கம், அச்சம் போன்றவை தானாகவே விலகிவிடும். அச்செயலினை முடிப்பதனால் ஏற்படுகின்ற பயன்பாட்டினை மனம் எண்ணிப் பார்த்து மகிழ்ச்சி கொள்வதினால் ஊக்கத்தோடு செயல்பட ஏதுவாகின்றது (676) என்கிறார் வள்ளுவர்.

ஒரு செயலால் மேலும் ஒரு செயலை முடித்துக் கொள்ளுதலும், ஒரே நேரத்தில் எளிதாக இரு செயல்களைச் சாதித்துக் கொள்ளுதலும் மேலாண்மையின் கூறுகளாகும். பழகிய யானையை வைத்து மற்றொரு யானையைப் பிணைத்தல் போன்று, ஒன்றைக் கொண்டே ஒன்றைச் சாதித்தல் வேண்டும் என்பதை,

“வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று”(61)

என்ற குறளில் இயற்கைப் பொருளாகிய யானையைக் கொண்டு மேலாண்மைக்கு உவமை காட்டியிருப்பது அறியப்பெறுகிறது.

**பணியாளர் மேலாண்மை**

பணியாளர் மேலாண்மை என்பது தகுந்தவரைத் தேர்ந்தெடுத்து, தக்க பணியில் ஈடுபடுத்துவதோடன்றி அலுவல் செய்பவரை ஆராய்ந்து ஆளும் தன்மையாகும். அலுவல் செய்வாரை ஆராய்ந்து, கணித்து அவரவர்க்கு

உரிய வேலையில் ஈடுபடுத்தினாலன்றி நிருவாகம் சிறப்பாக இயங்காது என்பதை,

எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர்"[62]

இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்"[63]

போன்ற குறள்களின் வழி வள்ளுவம் சுட்டுகின்றது.

**தொகுப்புரை**

உழவுத் தொழில், ஆசிரியத் தொழில், மருத்துவத் தொழில், வாணிபம், வேட்டையாடுதல், நாவிதர் தொழில், கூத்தாடுதல், தச்சர், கொல்லர், குயத்தொழில்கள், வள்ளுவரால் கடியப்பட்ட இறைச்சி விற்றல், கள் விற்றல், வரைவின் மகளிர் தொழில் பற்றியும், தற்கால மேலாண்மைத் தொழில் குறித்தும் வள்ளுவர் கூறும் செய்திகள் ஆய்வில் இடம்பெற்றுள்ளன.

வள்ளுவர் காலத்தில் இயற்கையோடு இயைந்த தொழில்களைச் செய்தவர்கள், இயற்கை வளங்களைப் பேணிக் காத்தனர். தற்காலத்தில் இயற்கை வளங்களை அழித்துத் தொழில் செய்கின்றனர்.

தற்காலத் தொழில்களில், இயற்கை மலைகளை அறுத்துக் கற்பலகைகள் செய்வது மிகுந்த பொருள் தரும் பெருந் தொழிலாக உள்ளது. இயற்கையாக உள்ள ஆழநீர், அகழி, மண்திடல், மலை, அடுக்கிய காடு இவற்றை உடையதுதான் அரண் என்கிறார் வள்ளுவர். மலை, காடு இவைகளை அழித்து தொழில் புரிவோர்கள் பொருள் சேர்ப்பதைத் தடுத்து, அவற்றைப் பாதுகாப்பது தான் அரசின் கடமையாகும். இத்தகைய இயற்கையை அழிக்கும் தொழில்களை அரசுகள் தடை செய்ய வேண்டும் அப்போதுதான் நாடு பாதுகாப்பான சூழலைப் பெறும் என்ற கருத்துப் பெறப்படுகிறது.

கடல் தொழில் புரிபவர்கள் முதல் கடலோடு தொடர்புடைய தொழில்கள் செய்பவர்களும் கடலின் வளத்தினை அழிக்கின்றனர். அளவுக்கு அதிகமாக மீன்களைப் பிடிப்பதினாலும், எண்ணெய் சிதறல்களினாலும் கடல் வளம் குறைந்து கொண்டு வருகிறது. தற்போதுகூட கடல் வாழ் உயிரினமான திமிங்கலங்கள் இறந்த நிலையில் கரை ஒதுங்கி அழிந்ததற்குக் காரணம் கூட கடல் தொழில் புரிபவர்களினால்தான் என அறிவிக்கை வெளிவந்துள்ளது. கடலும் தன்நீர்மை குன்றாமல் இருக்க இயற்கை வளங்களை அழிக்காமல் தொழில் நடத்துதல் வேண்டும் என்பது ஆய்வில் சுட்டப்பட்டுள்ளது.

இயற்கையாகக் கிடைக்கும் மண்ணாலான மண்பாண்டங்களைப் பயன்படுத்தினால் உடல்நலத்திற்கு நன்மை பயக்கும். தற்காலத்தில் நீரினைக் குளிர வைக்க குளிர்சாதனப் பெட்டியைப் பயன் படுத்துகின்றனர். அதனால் பலவிதமான நோய்கள் வருகின்றன. அக்காலத்தில் நீரை இயற்கையாகக் குளிரச் செய்ய மண்பாண்டங்களையே பயன்படுத்தினர். மண்பாண்டத் தொழிலும் சிறந்திருந்தது என்பது வள்ளுவரின் குறள் வழி அறியலாகிறது.

வள்ளுவரால் கடியப்பட்ட தொழிலில் முக்கியமானது கள்ளுண்ணாமை ஆகும். தற்காலத்தில் மதுபான ஆலைகள், மதுபான விற்பனையின் மூலம் பெறப்படுகின்ற வருமானம் அதிகமாக உள்ளது. இயற்கையாக மனிதன் வாழ வேண்டுமெனில் இத்தகைய தொழில்களைச் செய்தல் கூடாது என்கிறார். வள்ளுவர் காலத்தில் கள்ளுண்டோர் அனைவரும் தாமாகக் கள்ளைச் செய்து உண்ணவில்லை. பொருள் கொடுத்து வாங்கியே உண்டனர். தன்னறிவு கெடத்தக்க மயக்கத்தைத் தரும் கள்ளை மக்கள் பொருள் கொடுத்து வாங்கி உண்கின்றனரே. இது எத்தகைய பேதைமை என வள்ளுவர் கூறுவது இக்காலத்திற்கும் பொருந்துவனவாக இருக்கிறது. விற்பவர்கள்

இல்லையென்றால் அதனை விலை கொடுத்து வாங்குபவர்களும் இல்லாமல் போய்விடுவர் என்ற வள்ளுவரின் கருத்து ஆய்வில் குறிக்கப்பெறுகிறது.

மருத்துவன் காலத்திற்கேற்றபடி மருந்தினை அறிந்து கொடுக்க வேண்டும். இன்றைய காலத்தில் பலவகையான நோய்களின் தாக்குதலுக்கு உள்ளாகியுள்ளோம். விதவிதமான மருந்துகளும், அவற்றைச் சோதனை செய்து பார்க்கும் உடற் பொருளாக மனிதர்களும் மாறிப்போய் உள்ளோம். இயற்கை மூலிகைகளின் பயன் அறிந்தும் அவற்றைப் பயன்படுத்தாமல் ஏளனம் செய்ததன் விளைவு, செயற்கை மருந்துகளை உட்கொள்ள வேண்டியுள்ளது. உணவே மருந்து மருந்தே உணவு என்ற சித்தர்களின் கூற்றே வள்ளுவர் நமக்குக் கூறும் வழிமுறையாக உள்ளதை ஆய்வில் உணரமுடிகிறது.

நோய் செய்தலாகிய பித்தம், வாதம், சிலேத்துமம் ஆகிய மூன்றனுள் வாதமே வளி (காற்று) யாகும். வளி முதலா எண்ணிய மூன்றினால் நோய்கள் ஏற்படுகின்றன. உயிர் வாழ இயற்கையான காற்று, நீர், உணவு மூன்றும் இன்றியமையாதது. காற்று குறைந்தாலும் இழப்பு மிகுந்தாலும் இழப்பு ஏற்படுகிறது. இயற்கைப் பொருட்களான காற்று, நீர் ஆகியவை மிகினும், குறையினும் நோய் செய்யும் என்கிறார் வள்ளுவர். நீரில் மூழ்கி அதிகமான நீரைக் குடித்துவிட்டால் மூச்சுத் திணறல் ஏற்படுகிறது. குறைவான நீரைத் தொடர்ந்து பருகினால் சிறுநீரகப் பாதிப்பு ஏற்படுகிறது. அதைப்போன்றே, உணவையும் மிகுதியாக உண்டாலும், குறைவாக உண்டாலும் துன்பம் ஏற்படும்.

வருமுன்னர் காவாதான் வாழ்க்கைக் குறித்து வள்ளுவர் கூறுவது இன்றைய காலத்திற்கும் பொருந்துவனவாக உள்ளது. உயிர்க்கொல்லி நோய்கள் போன்றவை வருவதற்கு முன்பே தற்காத்துக் கொள்ள வேண்டும். இயற்கையோடு இயைந்த ஒழுக்க நெறியைப் பின்பற்ற வேண்டும்.

இயற்கைக்கு மாறாக செயல்படும் போது இத்தகைய நோய்கள் தாக்குவது தவிர்க்க முடிவதில்லை. அதனால் வருமுன்னர் காத்துக் கொள்வது நன்மை பயக்கும் என்பதை வள்ளுவர் விளக்கியுள்ளார். இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை வாழும் போது, நட்சத்திர விடுதிகளைப் போல மருத்துவமனை தொழில்களும் இல்லாமல் போகும் என்பது பெறப்படுகிறது.

அறுதொழில் என்பன உழவு, நெசவு, சிற்பம், ஆசிரியம், அரசுப்பணி, காவல் பணி என்பனவாகும். நூல் மறப்பர் என்பதற்கு அவரவர் தொழில் பற்றிய நூலறிவை மறப்பர் என்பதாகும். இயற்கைத் தொழிலான விவசாயம், நெசவு போன்ற தொழில்களைப் பாதுகாப்பது அரசின் கடமையாகும் என்பது பெறப்படுகிறது.

தொழில் செய்து பொருளீட்டுபவர்கள் அறவழியிலேயே பொருளீட்ட வேண்டும் பிறரைச் சுரண்டிச் சம்பாதிக்கும் எண்ணத்தை விட்டுவிட்டு நேர்மையான வழியில் பொருளீட்ட வேண்டும் என்பதைச் சுட்டுகிறார் வள்ளுவர். தற்காலத்தில் கையூட்டு மலிந்துள்ளன. ஒவ்வொருவரும் உழைத்துப் பொருள் ஈட்ட வேண்டும். பெறப்படுகின்ற பொருள்கள் அத்தனையும் தீதின்றி வந்த பொருளாக இருக்க வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாக அமைகிறது.

ஒரு செயலால் மேலும் ஒரு செயலை முடித்துக் கொள்ளுதலும், ஒரே நேரத்தில் எளிதாக இரு செயல்களைச் சாதித்துக் கொள்ளுதலும் மேலாண்மையின் கூறுகளாகும். இதற்கு இயற்கைப் பொருளான யானையை உவமை காட்டியிருப்பது நோக்கத்தக்கதாகும். யானையை வைத்து மற்றொரு யானையைப் பிணைத்தல் போன்று, (யானையால் யானையாத் தற்று) ஒன்றைக் கொண்டே ஒன்றைச் சாதித்தல் வேண்டும் என வள்ளுவர் விளக்கியிருப்பது ஆய்வில் பெறப்படுகிறது.

வாகன, தொழிற்சாலைப் புகைகளால் காற்று மாசடைந்து வருகிறது. காற்றை விலை கொடுத்து வாங்கும் நிலையில் உலகம் சென்று

கொண்டிருக்கிறது. காற்று உற்பத்திச் செய்யும் தொழிற்சாலைகள் வந்து கொண்டிருக்கின்றன. காட்டை அழிக்கும் தொழில் செய்பவர்களால், காட்டை அழித்து மனிதன் தனக்குத்தானே சவப்பெட்டி செய்து கொள்ள வேண்டிய சூழல் எழுந்துள்ளது. பயிர்களுக்கு உரமிட்டால், அதன் இரசாயனக் கழிவுகளால் நிலம், நீர் பாதிப்படைந்து வருகிறது. இயற்கை உரங்களைப் பயன்படுத்தி இயற்கை விவசாயத் தொழில் மேற்கொள்ள வேண்டும் என்பது பெறப்படுகிறது.

வானிலுள்ள ஓசோன் படலத்தில் ஓட்டை அதிகரித்ததால் சூரியனின் புற ஊதாக் கதிர்கள் நேரடியாக மனிதன் முதலாக உயிரினங்களைத் தாக்கி கேடு விளைவிக்கின்றன. இன்று உலக வெப்பமயமாதல் ஒன்றே தலையாயச் சிக்கலாக உள்ளது. இவற்றிற்கெல்லாம் அடிப்படைக் காரணம் மனிதர்களால் செய்யப்படுகின்ற தொழில்கள் காரணமாகும்.

இத்தகைய அழிவுகளிலிருந்து மீள்வதற்கு இயற்கையாகிய நீர், நிலம், தீ, காற்று, வானம் ஆகிய ஐம்பூதங்களும் காப்பாற்றப்பட வேண்டும். ஐம்பூதங்களையும் பாதிக்காத வகையில் தொழில்கள் செய்வது ஒன்றுதான் மனிதன் வளமான வாழ்வு வாழ்வதற்கு வழிவகுக்கும் என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**

1.ச.தண்டபாணி தேசிகர், (திருக்குறள் அழகும் அமைப்பும்), குறள் களஞ்சியம், பக்.305306.

2. குறள்:972

3. புறம். 18:2021.

4. தொல்.1022.

5. குறள் : 1031

6. குறள்: 1036.

7. குறள்: 1032.

8. குறள்: 1033.

9. குறள்: 1037.

10. குறள்: 1038.

11. இல.செ.கந்தசாமி, திருக்குறளில் வேளாண்மை, பக்.5051.

12. குறள்: 1147.

13. இல.செ.கந்தசாமி, திருக்குறளில் வேளாண்மை, ப.51

14. குறள் : 550.

15. குறள்: 1039.

16. குறள்:274.

17. குறள்:772.

18. குறள்:256.

19. குறள்:931.

20. குறள்: 280.

21. குறள்:37.

22. குறள்: 496.

23. குறள்:667.

24. புறம்.87.

25. குறள்: 887.

26. குறள்: 821.

27. குறள்: 567.

28. குறள்:888.

29. புறம்36:67.

30. குறள்: 367.

31. குறள்: 505.

32. குறள் : 986.

33. சிலம்பு.5:46.

34. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணம் பகுதி 2, ப.139.

35. குறள்: 573.

36. மணி.3:129131.

37. குறள்: 883.

38. திருக்குறளார் வீ.முனுசாமி, திருக்குறள் அதிகார விளக்கம், (குறள் களஞ்சியம், ப.980.

39. குறள்: 407.

40. தொல்.பொருள்.188.

41. குறள்:395.

42. புறம்.183.

43. குறள்: 394.

44. குறள்: 914.

45. குறள்: 949.

46. குறள்: 948.

47. இரா.கலைக்கோவன், (வள்ளுவரும் மருத்துவமும்), கோட்டம் முதல் குமரி வரை, ப.118.

48. திருக்குறளார் வீ.முனுசாமி, திருக்குறள் அதிகார விளக்கம்), குறள் களஞ்சியம், ப.988.

49. சிலம்பு:5:44.

50. குறள்: 560.

51. த.கோடப்பிள்ளை, (ஆபயன், அறுதொழிலோர்பொருள் யாது?),

திருவள்ளுவம், திருவள்ளுவர் பெருவிழா 2039 சிறப்பு மலர், பக்.7778).

52. அகம்.24:12.

53. சிலம்பு.547.

54. மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப.133.

55. புறம்31.

56. குறள்: 760.

57. குறள்: 120.

58. குறள்: 751.

59. குறள்: 672.

60. குறள்: 675.

61. குறள்: 678.

62. குறள்: 514.

63. குறள் : 517.

## முடிவுரை

நிலம், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐந்து பூதங்களும் ஒன்று சேர்ந்து நடைபெறுகின்ற நிகழ்ச்சி மழையாகும். மக்கள் வாழ்வு ஐம்பெரும் பூதங்களையும் அடிப்படையாகக் கொண்டு இயங்குகிறது.

பொறுமைக்கு உலகில் போற்றப்படுவது நிலமாகும். நிலத்திற்கு அகழ்வாரும், பிறரை இகழ்வாரும் ஒப்பிடப்படுகின்றனர். நிலமும் நீரும் கலக்கும்பொழுது அவை பிரிக்க முடியாத படி ஒன்றுபடும். நிலம் காதலர் மன ஒற்றுமைக்கு உவமை காட்டப்படுகிறது.

நிலம் தன்னுடன் கலந்த நீரைத் தன்னிறமாகவும் தன் சுவையாகவும் ஆக்கிவிடும். தரையில் ஓடும் தேரையும், கடலில் ஓடக்கூடிய கப்பலையும் உவமை காட்டுகிறார். நிலம் பெண்ணாக உருவகிக்கப்படுகிறது. நிலத்தை, நாளும் கவனித்தல் வேண்டும் இல்லையேல் மனைவி போல் பிணங்கிவிடும் என்கிறார்.

நீரின்றி உலகம் இல்லை. நீர் ஊருக்கு உணவளிக்கும் ஊருணியாய் நீர் (ஊருணி) பேரரறிவாளனின் ஒப்புரவிற்கு உவமையாகிறது. கரையுள்ள குளம் நீரை வீணாக்குவதில்லை. கரையில்லாவிடில் நீர் வீணாகிவிடும். அதுபோல சுற்றத்தோடு கலவாத வாழ்க்கையும் அழிந்துவிடும். நீர் இல்லையானால் உழுதொழில் நடவாது என்று காட்டிய வள்ளுவர், நில வளம் மட்டும் தனியாகப் பயிரை வளர்க்காது நிலத்தில் உள்ள சத்துப் பொருட்களைக் கரைத்துக் கொடுக்க நீர் இன்றியமையாதது என்பதை விளக்க நிலத்தொடு நீர்இயைந்து அன்னார் எனக் குறிப்பிடுகிறார்.

ஊருணி என்ற சொல் சங்க இலக்கியத்தில் எங்கும் இடம்பெறவில்லை. ஊருநீர் என்ற சொல் மணிமேகலையிலும் ஊருண்கேணி என்ற சொல் குறுந்தொகையிலும், புறநானூற்றிலும் இடம் பெறுகின்றன. ஊருணி என்பது

பாண்டி நாட்டு வழக்கு. வள்ளுவத்தில் பயன்படுத்தப்பட்ட ஊருணி, கேணி போன்ற சொற்கள் இப்போதும் செட்டிநாட்டு மக்களிடம் வழக்கில் உள்ளதை அறிய முடிகிறது.

கடலால் சூழப்பட்ட உலகில், மழையை உருவாக்க உதவுகிற கடலும் மழையில்லை என்றால், தன்னியல்பில் குறைந்து, கடல்வாழ் உயிரினங்களும் அழிந்துவிடும்.

பெரிய மடுக்களை நெடும்புனல் என்ற வள்ளுவர், ஊற்றுநீர், மழைநீர், மலையிலிருந்து வரும் ஆற்றுநீர் ஆகியவற்றை முப்புனல் என்றும், நாடு காவலுக்கு வேண்டிய நீர் மணிநீர் (எப்போதும் வற்றாத நீர்) என்றும் கூறுகிறார்.

தீ சுடராகவும் பெரும் நெருப்பாகவும் குறளில் அறியப்படுகிறது. கொடுங்கோல் அரசனிடம் விலகாமலும், அணுகாமலும் இருப்பதற்குத் தீக்காய்தலின் தன்மையினை எடுத்துக் கூறுகிறார். தீயச்சொல் உள்ளத்தில் ஆறாமல் வடுவாகி நிற்கும். ஆனால் தீயினால் சுட்ட புண் ஆறிவிடும். தீயை விட கொடுமையாது ஒருவனின் தீயச்சொல் என்பதை உரைக்கிறார்.

நெருப்பு தன்னைத் தொடுவாரைச் சுடும். தூர விலகியோரை எதுவும் செய்யாது. இங்கு வள்ளுவர் நெருப்பு, நெருங்கினால் குளிர்ச்சியாக இருக்கிறது. நீங்கினால் சுடுகின்றது என்று ஒரு புதுமைத் தீயினை உண்டாக்குவதை அறியமுடிகிறது.

வளி (காற்று) குறித்து இரண்டு குறள்களில் குறிப்பிடுகின்றார். நோய் குறித்து ஒன்றும், காமம் குறித்து ஒன்றுமாக உரைக்கிறார். காதலர்களின் நெருக்கத்தைக் குறிக்க, காற்றுப் புகாவண்ணம் இறுக அணைத்தலை இன்பச்சுவையாக உரைக்கிறார்.

மிக உயர்ந்ததாகக் கூறப்படும் வானம், தவசிகள் தோற்ற உயர்வுக்கு உவமையாகக் காட்டப்படுகிறது. மழை இல்லையேல் வானோர்க்குப் பூசனை நடைபெறாது என்று குறிப்பிடுவது சிந்தனைக்குரியது. இல்லத்தார் செய்யும் தானத்திற்கும் துறவோர் செய்யும் அறத்திற்கும் முதற் காரணம் மழையே என்று சிறப்பிக்கப்பட்டது. வான்மழையை வழிபாட்டுடனோ, இறைமையுடனோ ஒப்பிடாத வள்ளுவர், அறத்தோடு ஒப்பிடுவது நோக்கத்தக்கது.

மழை பொய்த்தால், இயற்கை வளங்களான மரங்கள் மட்டுமல்லாது, ஓரறிவு உயிராகிய புல்கூட முளைக்காது என்பது அவரின் கருத்தாகும். உலகத்திலே மிகவும் ஆற்றல் மிக்க சக்தி மழையை உருவாக்கித் தரும் சக்தி தான் என்பது வள்ளுவர் தரும் செய்தியாகும். அதனால்தான் தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழுது எழுகின்ற பெண் மிக உயர்ந்த ஆற்றல்மிக்க பெண்ணின் ஆற்றலுக்கு அளவுகோலாக அவள் பெய்யென்று சொன்னால் மழையும் பெய்யும் என உறுதி செய்கிறார்.

இயற்கை நிகழ்வுகளான ஐம்பூதங்களின் இயக்கத்தையும், அதன் மூலம் மனிதர்கள் பின்பற்றக்கூடிய வாழ்க்கை நெறிகளையும் தம் குறட்பாக்களின் மூலம் தெளிவுபடுத்தியமை உணரப் பெறுகிறது.

எக்காலத்திற்கும் பொருந்திவரும் கருத்துக்களை வள்ளுவர் கூறியிருந்த போதும், கிரகணங்கள் குறித்த அவரது பார்வையில் மூடநம்பிக்கை என்று பாராமல், அவர் கால நம்பிக்கைகளைப் பதிவு செய்துள்ளமை பெறப்படுகிறது.

மரத்தின் சினையாகிய கோடு, கொம்பு, வளர், கால், காழ் , கொடி போன்றவற்றையும் பதிவு செய்துள்ளார். பூவின் காம்பினைக் ‘கால்’ என்றும், பூவின் இதழைத் ‘தோடு’ என்றும், காழ் என்ற சொல்லாட்சியை விதைக்கும், முற்றிய மரத்திற்கும் பயன்படுத்தியுள்ளமை அறியப்படுகிறது.

ஆங்கிலத்தில் திருக்குறளை மொழிபெயர்த்தவர்கள் மரம் என்ற சொல்லுக்கு வுசநந என்கிற பதத்தைப் பயன்படுத்தியுள்ளனர். ஆனால், ஜி.யூ.போப் இந்தக் குறளில் வருகிற மரம் என்கிற சொல்லுக்கு மாத்திரம் தனது மொழிபெயர்ப்பில் ருழழன என்று எழுதியுள்ளார். உயிருள்ள மரம் உயிரற்ற கட்டை இரண்டிற்கும் பொருள் புரிந்தால் குறளின் பொருளும் விளங்கும் என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

தினை, பனை, குன்றிமணி, எள் என்பன அளவினைக் காட்டுவனவாகும். சிறிது, பெரிது என்ற கோட்பாட்டை உணர்த்தவே தினை, பனையினைக் கையாண்டுள்ளமை அறிய முடிகிறது.

கொத்தாகக் காணப்படும் மலரை 'இணர்' என்றும், மரக்கிளையில் பூக்கும் பூ கோட்டுப்பூ என்றும், பூக்களால் கட்டப்பட்ட மாலைக்குத் 'தொடலை' என்றும் பெயரிட்டுள்ளார்.

அரும்பு, மொக்கு, முகை, போது போன்ற பூவின் பல நிலைகளைக் கூறுகிறார். முகை நிலையில்தான் பூவிற்கு மணம் உண்டு என்பதை விளங்கும் வள்ளுவர், கரும்பின் பூவிற்கு மணம் இல்லை என்கிறார்.

அனிச்சம் நிலப்பூவா? நீர்ப்பூவா? என்பதற்கு 'நன்னீரை வாழி அனிச்சம்' என்று கூறி நீர்ப்பூ என விடை கூறியுள்ளார். முகர்ந்த அளவிலேயே அனிச்சம் வாடிவிடும் என்பதையும், குவளைப் பூக்கள், மேல் நோக்கி மலர்தலையும் அறிவியல் பார்வையோடு பார்க்கிறார். நெருஞ்சி முள்ளை நெருஞ்சிப் பழம் என்று கூறுவதையும் அறிய முடிகிறது.

யானை, புலி, குதிரை, நரி, பசு, காளை, ஆடு, முயல், ஆமை முதலியன குறளில் குறிக்கப்பட்டுள்ளன. யானையே, குறளில் பெரும்பாலான

இடங்களில் (எட்டு இடங்கள்) பேசப்படுகின்றது. யானையை வைத்து யானையைப் பிடிக்கின்ற தொழில் நுட்பமும், யானைப் போர், ஆட்டுக்கிடாய் சண்டை ஆகியன வள்ளுவர் காலத்தில் இருந்துள்ளன என்பதை அறியமுடிகிறது. முயல், ஆமை போன்ற விலங்கினங்களையும், பாம்பு, எலி, புழு, மீன் போன்ற ஊர்வனவற்றையும் குறளில் பதிவு செய்துள்ளார் வள்ளுவர். இதன்வழி பல்லுயிர் இணைவுச் சிந்தனை வள்ளுவரிடம் இருந்ததை அறியமுடிகிறது.

நன்கு பயிற்றப்பட்ட குதிரை, போரில் சளைக்காது என்பதும், பயிற்றப் பெறாத குதிரை, கடும் போரில் வீரனை வீழ்த்திவிட்டு ஓடும் என்பதும் குதிரையின் இயல்புகளாக உணர்த்தப் பெறுகின்றன. மா என்பதினால் குதிரையைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் கூறுகின்றனர். அக்காலத்தில் யானைப்படையும் இருந்துள்ளது. யானைக்கும் மா என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளதும் குறிப்பிடத்தக்கது. கவரிமா என்பது இமயமலையில் வாழும் யாக் என்ற விலங்காகும். பனிப் பகுதிகளில் வாழ்வதால், தன் மயிர்த்திரளில் ஒரு மயிரை இழக்க நேர்ந்தாலும் அதிகமான பனியின் காரணமாக அவை உயிரிழக்க நேரிடும் என்பதை வள்ளுவர் அறிந்திருக்கிறார் என்பதை அறியலாம்.

மனைத்தக்க மாண்புடைய பெண்ணை இல்லாளாகப் பெற்றவன் சிங்கம் போல கம்பீரமாக நடை போட முடியும் என்றும், மன வலிமை உடையவர்கள் யாருடைய துணை இல்லாமல் போனாலும், வெற்றி பெறுவார்கள் என்பதற்குப் புலியின் செயலையும், ஏமாற்றுவார்களின் செயலுக்குப் புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பசு மேய்வதையும், வலிமை குறைந்தவர்கள் கூட இடமறிந்து செயலாற்றினால் எளிதாக வெற்றி பெற முடியும் என்பதை நரியின் செயல் வழியாகவும், தடைகள் பல வந்த

போதும் கொண்ட கொள்கையில் உறுதியாக இருந்து செயல்படுபவருக்கு (பகடு) காளையின் செயல் வழியாகவும் கருத்துக்களை உவமைகள் மூலமாக விளக்குகிறார்.

ஊக்கமுடையவனின் செயலுக்கும் ஊக்கமில்லாதவன் செயலுக்கும் யானையை உவமை காட்டியிருப்பது மாறுபாடாகத் தெரிகிறது. வீரச்சுவையுடைய யானையின் செயலை இன்பச் சுவைக்கு எடுத்துக்காட்டுகிறார் வள்ளுவர்.

நீரில் இருக்கும் போது முதலைக்கு வலிமை அதிகமாக இருக்கும். நீரைவிட்டு வெளியே வருமானால் அதன் வலிமை குறைந்துவிடும் என்பதை அறிந்துள்ளார். புலன் அடக்கத்திற்கு ஆமையை உவமைகாட்டுகிறார்.

சந்திரகிரகணத்தை அறிந்திருந்த வள்ளுவர், இராகு என்ற பாம்பு சந்திரனை விழுங்குவதாக, அக்காலத்தில் நிலவிய நம்பிக்கையினை அவ்வாறே பதிவு செய்துள்ளார்.

கூகை, காகம், கொக்கு, மயில், அன்னம் ஆகியவை குறிக்கப் பெறுகின்றன. கோட்டானுக்கும் காகத்திற்கும் பிறவிப்பகை. கோட்டானுக்குப் பகலில் கண் தெரியாது. காகம் , அதனைப் பகலில் வென்றுவிடும். காலையில் எழுந்திருத்தல், காணாமலே புணர்தல், மாலை குளித்தல், மனைபுகுதல், உற்றாரோடு உண்ணல், உறவாடல் ஆகிய ஐந்து நற்குணங்கள் காக்கையிடம் உண்டு. அவற்றில் ஒன்றான சிறிது உணவு கிடைப்பினும் தன் இனத்தாரை அழைத்துப் பகுத்துக் கொடுத்து உண்பதை வள்ளுவர் உணர்ந்து பாராட்டுவது அறியப்பெறுகிறது.

எந்த ஒரு செயலைச் செய்யவும், பகை முடித்து வெற்றி பெற காத்திருத்தலும், திட்டமிடலும் தேவை என்பதை வலியுறுத்தக் காக்கை, கூகை, கொக்கு ஆகியவற்றின் செயல்களின் மூலம் விளக்குகிறார்.

பறவைக் குஞ்சுகள், இறகு முளைக்கிற வரையில் கூட்டில் இருக்கும் பறக்கக் கூடிய நிலை வந்தால் பறந்துவிடும் என்று, பறவைகளின் பொதுக் குணமும் வள்ளுவரால் பேசப்படுகிறது. அக்காலத்தில் பீலி, அன்னத்தின் தூவி இவைகளின் பயன்பாடு அதிகமாக இருந்திருக்கின்றன என்பதை வள்ளுவரின் குறளின் வழி அறியப் பெறுகிறது. அழகியல் நோக்கோடு மயிலின் சாயலைப் பெண்ணுக்கு உவமை காட்டியிருப்பது பெறப்படுகிறது.

தொழில்கள் குறித்தான செய்திகளை நேரடியாவும், மறைமுகமாகவும் பதிவு செய்துள்ளார். உழவுத் தொழில், ஆசிரியத் தொழில், மருத்துவத் தொழில், வாணிபம், வேட்டையாடுதல், நாவிதர் தொழில், கூத்தாடுதல், தச்சர், கொல்லர், குயத்தொழில்கள், வள்ளுவரால் கடியப்பட்ட இறைச்சி விற்றல், கள் விற்றல், வரைவின் மகளிர் தொழில் பற்றியும், தற்கால மேலாண்மைத் தொழில் குறித்தும் விளக்கியுள்ளார்.

தற்காலத்தில் இயற்கை வளங்களை அழித்துத் தொழில் செய்வோர் போன்று அல்லாமல், வள்ளுவர் காலத்தில் இயற்கையோடு இயைந்த தொழில்களைச் செய்தவர்கள், இயற்கை வளங்களைப் பேணிக் காத்தனர் என்பதும் ஆய்வில் பெறப்படுகிறது.

தற்காலத் தொழில்களில் மிகுந்த பொருள் ஈட்டும் தொழிலாக மலைகளை அறுத்துக் கற்பலகைகள் செய்வது உள்ளது. இயற்கையாக உள்ள ஆழநீர், அகழி, மண்திடல், மலை, அடுக்கிய காடு இவற்றை உடையதுதான் அரண் என்றும் அவற்றைப் பாதுகாக்க வேண்டும் என்றும்

வள்ளுவர் வலியுறுத்துகிறார். மலை, காடு இவைகளை அழித்துத் தொழில் புரிவோர்கள் பொருள் சேர்ப்பதைத் தடுத்து, அவற்றைப் பாதுகாப்பது தான் அரசின் கடமை என்றும் கூறியுள்ளார். இத்தகைய இயற்கையை அழிக்கும் தொழில்களை அரசுகள் தடை செய்ய வேண்டும் என்ற கருத்து ஆய்வுக் கருத்தாடலாக அமைகிறது.

கடல் தொழில் புரிபவர்கள் முதல் கடலோடு தொடர்புடைய தொழில்களைக் கொண்டவர்களும் கடலின் வளத்தினை அழிக்கின்றனர். அளவுக்கு அதிகமாக மீன்களைப் பிடிப்பதினாலும், எண்ணெய் சிதறல்களினாலும் கடல் வளம் குறைந்து கொண்டு வருகிறது. தற்போதுகூட கடல் வாழ் உயிரினமான திமிங்கலங்கள் கரை ஒதுங்கி அழிந்ததற்குக் காரணம் கூட கடல் தொழில் புரிபவர்களினால்தான் என அறிவிக்கை வெளிவந்துள்ளது. கடலும் தன்நீர்மை குன்றாமல் இருக்க இயற்கை வழி தொழில் நடத்துதல் வேண்டும் என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

வள்ளுவரால் கடியப்பட்ட தொழிலில் முக்கியமானது கள்ளுண்ணாமை ஆகும். தற்காலத்தில் மதுபான விற்பனையின் மூலம் பெறப்படுகின்ற வருமானம் அதிகமாக உள்ளது. இயற்கையாக மனிதன் வாழ வேண்டுமெனில் இத்தகைய தொழில்களைச் செய்தல் கூடாது என்கிறார். மது அருந்துபவர்கள் இல்லாவிடில் அதனை விற்பவர்களும் இல்லாமல் போய்விடுவார்கள் என்ற கருத்து இன்றைக்கும் பொருந்துவனவாக உள்ளது. இயற்கையைப் பாதிக்கும் தொழில்களின் மூலம் பெறப்படுகின்ற பொருட்களை மக்கள் பயன்படுத்துவதிலிருந்து விலகி விட்டாலே, அதனை உற்பத்தி செய்யும் தொழில்கள் இல்லாமல் போய், இயற்கை பாதுகாக்கப்படும் என்ற வள்ளுவரின் கருத்தைக் கடைபிடிக்க வேண்டும் என்று ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

இயற்கை மூலிகைகளின் பயன் அறிந்தும் அவற்றைப் பயன்படுத்தாமல், செயற்கை மருந்துகளை உட்கொள்ள வேண்டியுள்ளது. உணவே மருந்து மருந்தே உணவு என்ற சித்தர்களின் கூற்றே வள்ளுவர் நமக்குக் கூறும் வழிமுறையாக உள்ளதை உணர முடிகிறது.

உயிர் வாழ இயற்கையான காற்று, நீர், உணவு மூன்றும் இன்றியமையாதவை. காற்று குறைந்தாலும் இழப்பு மிகுந்தாலும் இழப்பு ஏற்படுகிறது. இயற்கைப் பொருட்களான காற்று, நீர் ஆகியவை மிகினும், குறையினும் நோய் செய்யும் என்கிறார் வள்ளுவர்.

உழவுத் தொழிலில் இயற்கை விவசாயத்தை மறந்து, செயற்கை உரங்களை இட்டுத் தொழில் செய்கின்றனர். இயற்கை விவசாயத்தை அறிமுகப்படுத்தியது தமிழர்கள் தான். குறுகிய கால பயிர்களால் குறுகிய கால வாழ்க்கையினை மேற்கொள்ள வேண்டிய நிலை வந்துள்ளது. இயற்கை விவசாயத்தில் அதிக வருமானம் இல்லை என நினைத்து, ரசாயன விவசாயம் மூலம் அதிக விளைச்சலை மேற்கொள்ளக் கூடாது. ரசாயன விவசாயம் செய்வதால் நோய்கள் தாக்குகின்றன. புதிதாகப் பல நோய்கள் உருவாகி, குழந்தைகளையும் தாக்குகின்றன. இன்று தாய்ப்பால் கூட நச்சுத்தன்மை உடையதாக மாறிவருவதற்குப் பொருளீட்டுச் சமூகத்தில் இயற்கைத் தொழில்களை மறந்து தொழில் செய்வதே காரணம் என்று ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

பல்வேறு புலவர்கள் தத்தம் பாடல்களில் இயற்கைப் பொருட்களை உவமைகளாகவும், உருவகங்களாகவும் பாடியுள்ளனர். வள்ளுவரின் தத்துவத்திற்குள் இயற்கை அறமாகவும், ஒழுக்கமாகவும் பொருள் பொதிந்தக் கருத்துக்களாகவும் இருப்பதை ஆய்வின் வழி உணர முடிகிறது.

மனிதர்களின் செம்மாந்த வாழ்க்கைககு விலங்கு, பறவை, இயற்கை ஆகியன கொண்டு வள்ளுவர் வழிகாட்டுவதை குறள்கள் மூலம் அறியமுடிகிறது.

திருவள்ளுவர், இயற்கை எக்காலத்தவர்க்கும் வாழ்வின் ஆதாரம் என்பதைக் குறள்களில் ஆங்காங்கே உணர்த்திக் காட்டுகிறார்.

இயற்கை குறித்த ஆய்வின் போது கிடைத்தத் தரவுகளின் அடிப்படையில், வள்ளுவத்தில் இயற்கையின் அறிவியல் நுட்பங்கள் குறித்து மேலாய்வு செய்வதற்கு இவ்வாய்வு வழி காட்டுகிறது.

## துணைநூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரங்கள்**


1. பரிமேலழகர் (உ.ஆ).,	திருக்குறள் உரை
மதுரைப் பல்கலைக்கழக
வெளியீடு,
மதுரை.

2.	திருக்குறள் உரைக்கொத்து
(பரிமேலழகர், மணக்குடவர்,
பரிப்பெருமாள், பரிதியார்,
காலிங்கர் உரை)
திருக்குறள் பதிப்பு நிதி
வெளியீடு, திருப்பனந்தாள்
வித்துவான் ஸ்ரீமத்
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
அவர்களால் வெளியிடப்பெற்றது.
1970.

3. நாராயணவேலுப்பிள்ளை, எம்.,	திருக்குறள் (எளிய தமிழ் உரை)
நர்மதா வெளியீடு,
10, நானா தெரு,
(பாண்டி பஜார்),
தி.நகர், சென்னை 600 017.
சனவரி 2010.

**துணைமைச் சான்றாதாரங்கள்**


1. மறைமலை அடிகள்,
   ரா.பி.சேதுபிள்ளை,
   கி.ஆ.பெ.விசுவநாதம்,
   ச.தண்டபாணி தேசிகர்,
   தெ.பொ.மீனாட்சிசுந்தரனார்,
   வ.சுப.மாணிக்கனார்,
   குன்றக்குடி அடிகளார்,
   க.த.திருநாவுக்கரசு,
   கா.சுப்பிரமணியப் பிள்ளை,
   திருக்குறளார் வீ.முனுசாமி,
   குறள் களஞ்சியம்,
   கொற்றவை வெளியீடு,
   4, சுந்தரம் தெரு,
   தி.நகர் சென்னை 17

2. இளம்பூரணர் (உ.ஆ),
   தொல்காப்பியம்
   பொருளதிகாரம்
   முல்லை நிலையம்,
   தி.நகர், சென்னை17,
   மறுபதிப்பு 2003.

3. கந்தசாமி, இல.செ.,
   திருக்குறளில் வேளாண்மை,
   தமிழ்நாடு வேளாண்மைப்
   பல்கலைக்கழக வெளியீடு,
   கோயம்புத்தூர்,
   முதற்பதிப்பு 1979.

4. சசிவல்லி.வி.,
   பண்டைத் தமிழர்
   தொழில்கள்,
   உலகத் தமிழாராய்ச்சி
   நிறுவனம், சென்னை,
   1990.

4. சாமி பழனியப்பன்
   குறளில் இயற்கை,
   நல்வாழ்வு பதிப்பகம்,
   சென்னை,
   முதற்பதிப்பு: செப்டம்பர்
   1977.

5. சாமி, பி.எல்., சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை1.

6. மேலது, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை1, 1967.

7. சிதம்பரம்பிள்ளை, வ.உ., திருக்குறள் அறம், மணக்குடவர் (உ.ஆ)., கே.ஆர்.பிரஸ், தூத்துக்குடி.

8. சீனிச்சாமி, துரை., இலக்கியத்தில் இயற்கை, (பிற விபரங்கள் இல்லை).

9. சுந்தரமூர்த்தி, இ., வான்மறை வள்ளுவம், தேன்மொழி நூலகம், கோவை, மூன்றாம் பதிப்பு 1992.

10.சுபாசு, பதிவும் பார்வையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, செப்டம்பர் 1997.

10. சேதுப்பிள்ளை, இரா.பி., திருவள்ளுவர் நூல்நயம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை18, 1987.

11. சோமசுந்தரபாரதியார், ச. திருவள்ளுவர், வள்ளுவர் பண்ணை, 137, பிராட்வே, சென்னை1, இரண்டாம் பதிப்பு 1959.

11. பரமசிவம். மா., சங்க இலக்கியத்தில் மரையா, குருகு, முத்து பதிப்பகம், கம்மங்காடு, பதிப்பு: 2009.

12. மறைமலையடிகள் திருக்குறளாராய்ச்சி, பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை1, முதற்பதிப்பு 1957.

13. மாணிக்கம், வ.சுப., திருக்குறள் தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1991.

14. மேலது, வள்ளுவம், மெய்யப்பன் பதிப்பகம், 53, புதுத்தெரு, சிதம்பரம், முதற்பதிப்பு: 2009.

15. முனுசாமி, வீ., திருக்குறள் விளக்கம், திருமகள் நிலையம், சென்னை.

16. மோகனராசு. கு., திருக்குறள் மக்கள் உரை, உலகத் திருக்குறள் மையம், சென்னை.

17. நெடுஞ்செழியன், இரா., திருக்குறள் நாவலுரை, நெடுஞ்செழியன் அறக்கட்டளை, சென்னை, 1991.

18. இராஜேந்திரன், சி., திருக்குறள் உவமை நயம், கவிதா பப்ளிகேஷன்ஸ், பாண்டி பஜார், தி.நகர், சென்னை. நான்காம் பதிப்பு: 2010.

19. வடிவேல் செட்டியார், கோ., திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும், மதுரை பல்கலைக்கழகம், மதுரை, 1976.

19. வரதராசனார், மு.வ., திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பாரி நிலையம், சென்னை.

20. மு.வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை, 1964.

**அகராதிகள் நிகண்டுகள்**

1. கதிர்வேற்பிள்ளை, நா,. தமிழ்மொழி அகராதி, தமிழ்தமிழ்அகராதி, தமிழ்நாடு எடுகேசனல் சர்வீசஸ், சி215எஸ்.டி.ஏ, புதுதில்லி16, 1981.

2. திவாகர முனிவர், சேந்தன் திவாகரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை18, 1958.

3. கலைக்களஞ்சியம் தொகுதி2, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956.

**ஆய்வுக்கோவை மலர்**

1. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக்கோவை.

2. உலகத் திருக்குறள் மாநாடு கருத்தரங்கக் கட்டுரைக் கோவை தொகுதி ஐரூஜஜ.

3. தமிழவேள்
உமாமகேசுவரனார்
நூற்றாண்டு நினைவு
கட்டுரைப் பூங்கா,
கரந்தைத் தமிழ்ச்சங்கம்,
தஞ்சாவூர்,
1984.

4. திருவள்ளுவம்,
திருவள்ளுவர்
பெருவிழா 2039
திருவள்ளுவர் திருச்சபை
குறள் அரசுக் கழகம்,
நாகர்கோவில்.

5. வளர் தமிழ் ஆய்வு,
வளர் தமிழ் ஆய்வு மன்றம்,
திண்டுக்கல்,
2011.

6. திருக்குறள் மாநாட்டு மலர்,
உலகத் திருக்குறள்
மையம்,
கருவூர், திருச்சி மாவட்டம்,
1995.

7. கோட்டம் முதல் குமரி வரை
குமரிமுனையில்
திருவள்ளுவர் சிலை திறப்பு
விழா மலர்.

**ஆய்வேடு**


1. காளீஸ்வரி. சு., திருக்குறளில் ஐம்பூதங்கள், அழகப்பா பல்கலைக்கழக இளம் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம் காரைக்குடி3. 2005.

2. இரவிக்குமார். து,. சங்கப் பாடல்களில் பெயர்க்குறியீடுகள், அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம் காரைக்குடி3. 2007.

## பின்னிணைப்பு

### உவமைகள்

அருமையான கருத்துக்கள் மனத்தைவிட்டு அகலாமல் செய்தற்குச் சிறந்த சாதனம் அணிகள். கருத்தாழம் நிறைந்த கவிதைக்கும் அணிகள் இன்றியமையாததாகும். அணியில்லாப் பாடல், ஒலி இல்லா உடல் போன்றது. அணிகளுக்குத் தாயகம் உவமையாகும். வள்ளுவரும் இயற்கை குறித்தத் தம் குறட்பாக்களில் உவமைகளைக் கையாண்டிருக்கிறார். அவை பின்வருமாறு:

**அறத்துப்பால்**

1. அன்பில்லாத உயிரை அறம் காய்தலுக்குப் புழுவை வெயில் காய்தல்.(77)
2. அன்பில்லா வாழ்க்கைக்குப் பாலையில், வற்றல் மரம் தளிர்த்தல்.(78)
3. இன்சொல் இருக்க வன்சொல் வழங்குதற்குக் கனி இருப்பக் காய் கவர்தல். (100)
4. பயன் கருதார் செய்த உதவியின் நன்மைக்குக் கடல். (103)
5. பொறி அடக்கம் அடையார்க்கு ஆமை. (126)
6. பேரறிவாளன் திருவுக்கு நீர் நிறைந் ஊருணி. (215)
7. நடுநிலையுடையான் செல்வத்திற்கு உள்ரில் பழுத்த மரம். (216)
8. பெருந்தகையான் செல்வத்திற்குத் தப்பா மருந்து மரம். (217)
9. கூடா ஒழுக்கம் உடையானுக்குப் பசுத்தோல் போர்த்திய புலி. (273)
10. தவத்தில் மறைந்து அவம் செய்வார்க்குப் புதலில் மறைந்து புள் சிமிழ்க்கும் வேட்டுவன். (274)
11. அகத்தூய்மை தருகின்ற வாய்மைக்குப் புறத்தூய்மை அளிக்கும் நீர். (298)
12. கோபங் கொள்பவன் கேடுறுதலுக்கு நிலம் எறிந்தவன் கை நிலத்தில் படுதல். (307)
13. இன்னாமைக்கு எரி. (308)
14. உடல் உயிர் நட்புக்குக் குடம்பையை விட்ட புள். (338)
15. இகழ்வாரைப் பொறுத்தலுக்கு அகழ்வாரை நிலம் தாங்குதல். (151)
16. விருந்தினருக்கு அனிச்சப் பூ. (90)

**பொருட்பால்:**

17. நட்டாற்றில் கைவிடுவார்க்குப் போரில் கைவிடும் குதிரை. (814)
18. மக்கட் பண்பு இல்லாதவர்க்கு மரம். (997)
19. அறிவில்லதாவன் அழகுக்கு மண் பாவையின் அழகு. (407)
20. மக்களின் அறிவு, இனத்தால் திரிதற்கு நிலத்து இயல்பால் நீர் திரிதல். (452)
21. ஒவ்வாதாருடன் இருத்தற்குப் பாம்போடு குடியிருத்தல். (890)
22. சொல்வதை ஏற்பவரிடம் சொல்லுதற்கு வளர்கின்ற செடிகள் நிறைந்த பாத்தியுள் நீரைச் சொரிதல். (718)
23. புண்ணுக்கு அஞ்சா வீரர்க்கு அம்பிற்கு அஞ்சா யானை.(597)
24. மக்கள், மனம்போல் உயர்வர் என்பதற்கு நீரளவே ஆகும் நீராம்பல். (595)
25. சொல் வன்மை இல்லாதார்க்கு மணம் இல்லாமல் பூத்த மலர். (650)
26. சிறிய அளவிற்கு எள்ளின் பிளவு. (889)
27. முன் எச்சரிக்கை இல்லாதான் வாழ்விற்கு நெருப்பு முன்னர் அழியும் வைக்கோற் போர். (435)
28. கண்ணோட்டம் இல்லாத மக்களுக்கு மரம். (576)
29. கல்லாதவர்க்குக் களர். (406)
30. மானம் அழிய வாழாப் பெரியோர்க்கு மயிர் உதிர்ந்தால் வாழாத கவரிமா. (969)

31. குடிகாரனைத் தெருட்டுதற்கு நீருக்குள் முழுகினவனை விளக்கு ஏற்றிக் கொண்டு தேடுதல். (929)
32. கல்லாதாருக்கும், கற்றாருக்கும் உள்ள வேறுபாடு, விலங்குக்கும், மக்களுக்கும் உள்ள வேறுபாடு. (410)
33. கீழோருக்குக் கரும்பு. (1078)
34. குடிப்பிறந்தார்கண் குற்றத்திற்கு மதிக்கண் மறு. (957)
35. சூதில் வெல்லுதற்குத் தூண்டிற் பொன்னை மீன் விழுங்குதல். (931)
36. மன்னரைச் சேர்ந்து ஒழுகுவார்க்குத் தீக்காய்பவர். (691)
37. வினைக்குறை, பகைக் குறைக்குத் தீப்பொறி. (674)
38. வெட்கமில்லாத மக்களுக்குப் மரப்பாவை. (1020)
39. நிலத்திற்கு மனைவி.
40. பெரியோர் நட்பின் வளர்ச்சிக்குப் பிறைமதி. பேதையார் நட்பின் தாழ்ச்சிக்கு நிறைமதி. (782)
41. அறிவிற்கு மணற்கேணி. (396)
42. அறிவில்லாதாற்கு மரம். (600)
43. செங்கோல் நோக்கி வாழும் குடிக்கு வான் நோக்கி வாழும் உலகு. (542)
44. ஒரு காரியத்தால் மற்றொரு காரியத்தை முடிப்பதற்கு யானையால் யானையைப் பிடித்தல். (678)
45. கலந்த உணர்வில்லாதான் வாழ்க்கைக்குக் கரை இல்லாக் குளம். (523)
46. பலருக்குப் பயன்படாத செல்வத்திற்கு நச்சு மரம். (1008)
47. கொடையாளிகளின் வறுமைக்கு வறண்ட மேகம். (1010)

**இன்பத்துப்பால்:**

48. காமத்திற்கு வெள்ளம். (1167)
49. பேரூடலுக்குக் கனியும், சிறு ஊடலுக்குக் காயும். (1306)
50. காமதிற்குக் காழில் கனி. (1191)
51. அலரால் காமத்தை அவிப்பதற்கு நெய்யால் நெருப்பை அவித்தல்.(1148)
52. நெஞ்சிற்குத் தீயில் இட்ட நிணம். (1260)
53. புலவிக்கு நிழல் நீர். (1309)
54. முலைமேல் துகிலுக்குக் களிற்றின் முகபடாம். (1087)
55. முடிவு போகாமை அறிந்தும் புலவி கொள்ளுவார்க்கு ஈர்ப்புச் சக்தியுடைமை அறிந்தும் நீருட் குளிப்பார். (1287)
56. மகளிர் மேனிக்குத் தளிர். முறுவலுக்கு முத்து. கண்ணுக்கு வேல். தோளுக்கு மூங்கில். (1113)
57. ஊடியவரை ஊடல் உணர்த்தாமைக்கு வாடிய கொடியை வேர் அறுத்தல். (1304)
58. காதலருக்குக் காதலர் காட்டும் அன்பிற்குக் குடித்தனக்காரனுக்கு அளவறிந்து பெய்யும் மழை. (1192)